# திருநகரச்சிறப்பு.

பூமேவு பசும்பொழில்சூழ் திருவானைக் காவிலைமுப் புவனத் தோரு
மாமேவு பலநகரு ளொருநகரென் றுதுயர்மா நகரென் றோரத்
தேமேவு பலநகரும் புறமாக வகந்தழுவித் தீர்த்தப் பொன்னிக்
காமேவி யொழுகுமெனி னந்நகருக் கிணைநகரங் காட்ட லாமே.

இருநதியி னிடைக்கிடந்த காரியெவற் றினுஞ்சிறந்த தென்ப வந்த
விருநதியு ளொருநதியே சிவபெருமா னளித்ததத னியல்பு நிற்க
வொருநதியே யிருநதியா யொழுகவிடை யிருக்குமுய ரானைக் காவ்
வொருநதிமற் றிறையளிப்ப மலயமுனி கொணர்ந்ததெனி னுறப்புண் டாமே

கங்கைநதி யொருவேந்த னிரப்பவொரு முனிவாயிற் கரந்து மாண்டோ
ரங்கமலி தரப்புகுந்த துயரானைக் காவினைச்சூழ்ந் தமரும் பொன்னி
துங்கமுனி கமண்டலத்துட் கரந்துவிசும் பிறைவேண்டத் துதிக்கை நம்பி
யிங்கருளச் சிவபூசைக் குதவியதென் றுற்பெருமை யெவற்ற தாமே.

மதுவார முறுக்கவிழ்ந்து மலர்விரியும் பசும்பொதும்பர் மருங்கு சூழ
விதுவாழுஞ் சடைமௌலி சம்புநா யகர்கருணை விரவி வாழு
முதுவாழ்வு தருமானைக் காவினெழில் வனப்புமுதிர் தகர வித்தை
கதுவாய்மை மாயவனு ருள்ளகத்தா மரைமலரே கடுக்கு மன்றே.

உரிமையிற் சிலம்பி பூசனை புரிந்த வுண்மைதேர்ந் தெம்பிரா னுவப்ப
வரியளிக் குலமும் பூசனை புரியு மாட்சியிற் பசும்பொழி றோறும்
புரிமுறுக் கவிழ்ந்து மலர்வழி யொழுகும் புதுநறு வாரியின் மூழ்கி
விரிமணத் தாது பூசிமெல் லிசைகண் மிழற்றிநின் றுட்டயர் வனவால்.

இலம்பக மிலைத்த திலகவா ணுதலா ரெதிரெதி ராட்டயர் தோறு
மலம்புகிண் கிணியுஞ் சிலம்புமே கலையு மதிர்குரன் மழைமுகில் காட்டக்
குலம்பயின் மயில்க ளாடுவ பூவை குயில்கிளி பாடுவ விவையுஞ்
சிலம்பியி னுவந்து தத்தமக் கியன்ற திருப்பணி செய்வபோன் றனவால்.

நாரணர் பிரமர் நாடியு மறியா நங்கைபங் காளனூர் முடியுந்
தாரணி பதமு ஞானபூ மியினுந் தங்கருந் தவத்தினுற் சார்ந்திட்
டாரணர்க் குரிய தவிசெனும் பழியு மகற்றுது மெனமுயன் றனபோ
னீரணி பமனங் கட [illegible]

## திருநகரச்சிறப்பு.

முள்ளரைப் பசுந்தாட் சேயிதழ்ப் பொகுட்டு முண்டக நாண்மலர்த் தவிசின்
வெள்ளொளி விரிக்கு மென்சிறை யன்னம் விழுத்தகு துணையொடும் பயில்வ
கள்ளவைம் பொறியுங் கடந்தவ ரிதைய கமலநாண் மலர்மிசை யஞ்சப்
புள்ளுரு வாகச் சத்தியுஞ் சிவமும் பொற்பவீற் றிருப்பது தகையும்.

பண்டுவெண் ணீறு திமிர்ந்தொளிர் படிவப் பராசர முனிநனி வளர்த்த
மண்டுசெந் தழலி னரக்கர்தங் குலங்கள் வந்துவந் துகுவன விழையுக்
கண்டவர் வியப்பப் பாசடை மருங்கிற் கதியவெள் ளோதிமத் தெதிரே
விண்டசெங் கமலத் தொழுகுதே னசையால் விழுவன வீற்றுவீற் றளிகள்.

முந்துபகை யானசுரர் முற்றிவதி வீயுந்
தந்தமிட மாகவிக முனவ ரிறுத்தாங்
குந்துமது வுண்ணவுழி தந்தளிகள் பரயு
நந்தன வனங்கள்பல நாற்றிசையு மல்கும்.

கைபழக முன்புபடை கஞ்சமுதல் வீயு
மெய்பழகு வேதனகர் மேகவென விட்டா
னெய்பழகு கூந்தலர் நிலாமுகமு மற்று
மைபழகி நின்றவென யாருமறி வெய்த.

மறநவிலும் வாட்கண்மட மாதரிசை வல்லாத்
திறநவில வேறுகரி தேர்வொழிக சான்றீர்
புறநக ரடுத்துவளர் பூவைகிளி தாமே
யுறநவில்வ வுண்ணக ருறுதற வொழிந்தே.

தீர்த்தமுடி வைத்தவொரு தீர்த்தனிவ னென்றுந்
தீர்த்தமுரு வாகவளர் செய்தியை மதித்தே
தீர்த்தலரி தாங்களிர் சிறந்தொளிர்வ தென்னத்
தீர்த்தமெவை யும்பெரிது தேங்கியெழில் கூறும்.

நீருருவ மாகிவளர் நின்மலன் மகிழ்ந்த
சீருருவ மானநகர் சேர்ந்தன மினித்தான்
றீருணவி னேமல மெனத்திக ழுவப்பா
னேருருவ வார்பொழி லிணர்த்துமல ரூழ்க்கும்.

தண்ணார் மதிலு டியசங்கா ஞாப தகைள
விண்ணோர் பெருமான் பணியப்புக மேக வூர்தி
யெண்ணு விறலோடு புறத்திறை கொண்ட தேய்ப்ப
மண்ணு மணியா னைகள்யாத்தன வாரி யோர்சார்.

கருணைக் கடலா கியகண்ணுத லார்ப தங்கள்
வருணன் றொழுவான் புகவன்னவன் வாழ்க்கை யான

ரணம்.

பொருதண் கடலும் புறமுற்றிய பொற்பு மான
வருமைங் கதிவா சியின்மந்திரம் வாய்ந்த தோர்சார்.

ஒருஞான்று மூலப்பி லிருங்கதி யுய்க்கு நாத
னிருசேவடி யேத்தவுள் புக்கவி ராறு கோடிப்
பொருசூரிய ரேறிய தேர்புற நின்ற தென்னக்
குருமாமணி யாத்தொளிர் தேர்குழு முற்ற தோர்சார்.

வடவைக் கனலுங் கடனஞ்சமும் வானி னேறு
முடலுஞ் சமனுணையு மோருருக் கொண்ட தென்னச்
சுடருங் கணைவா னயிலாதி தொடர்ந்து வீர
ரடல்விஞ் சையரஞ்ச வமர்ந்தகல் லூரி யோர்சார்

பருமக் கலனைப் புரசைப்பகிர் வார்க ளார்க
ளுருவச் சகடத் திருளச்சுறை யாய்த மாதி
கருவித் திரண்முற்று முளுற்றுகை வல்ல நீரார்
மருவித் தொகுசேரி யனந்தம்வெவ் வேறு வாய்ந்த.

வண்டா டியமா மதவேழமும் வாவு மானுஞ்
செண்டாடிய செண்டு வெளித்தல முஞ்செ றிந்து
கண்டார் களிகூ ரிரதத்தொழில் கற்கு ஞாட்புந்
தண்டாது விலாழி பொழிந்துதண் சேறு செய்யும்.

ஒழுகுஞ் சுடர்வா ளயில்வேல்சிலை யொண்கை யேந்திக்
குழுமத் திறல்வீரர் கொடுஞ்சமர் கற்கு மெல்லை
விழுமக் கலனிற் பிதிருக்கநல் வெள்ளி பொன்னும்
புழுதித் திரளாய்ப் புறம்போர்ப்பன பொற்ப வெங்கும்.

நடைமா மலையா திகண்முற்றி நலஞ்சி றந்த
புடைமா நகரின் வளனிற்சிறி தேபு கன்றுந்
தொடைமாண் சிலைவேள் கணையின்சுவை தோற்றி யாடு
மிடைமா நகரின் வளனிற்சிறி தேத்து வாமால்.

பளிக்குக் குன்றமும் பரந்த வெக்கரு
மொளிக்கன் மேடையு முயர்செய் குன்றமுந்
தெளிக்கும் பொய்கையுந் திகழ்ய் யானமுங்
களிக்கு நீரன் கடவு ளார்க்குமே.

பலர்வி யப்புறும் பளிக்குக் குன்றுகள்
கலவ மாமயில் கதுவு செவ்வியி
னிலவி ருங்கறை நீக்கப் புக்கமர்
விலகி வில்லுமிழ் விதுநி கர்க்குமே.

## திருநகரச்சிறப்பு.

குமுத வாவிதூங் குளிர்ந்த முத்தமுங்
கமுக முத்தமுங் கலந்த நீர்மையா
லமுத வெண்கதி ரோட டுத்தமீன்
சமுகம் போன்றன தரணி யெங்கணும்.

பட்ட மாடுவார் பரந்த வெக்கர்வா
யிட்ட செம்மல ரெரியி னெய்மர
மட்ட வண்டுசூழ்ந் தாவிப் பேட்டினைத்
தொட்டு வைகவண் சுகங்கள் பாடுமே.

மைக்கண் மாதரார் வாவி தோய்தொறு
மெக்கர் வாயவ ரிடும டிச்சுவட்
டொக்கு மென்னடை யோதி மம்புகத்
தக்க தன்றெனத் தரங்க நீக்குமே.

கொழுநர் கொங்கைபூங் கொத்தின் வேறற
வெழுது மவ்விடை யிளையர் நெஞ்சமான்
முழுக வாலவாய் முதல்வ னுகெனக்
கெழுவு மாடமேற் கிளந்து வப்பரால்.

திரண்ம ணிக்கலாற் செய்த குன்றின்வாய்
விரவி யாடுவார் விளங்கு தங்நிழல்
கரவி லாதுகண் ணடியிற் றோற்றலும்
பலர்கொ லோவெனப் படர்ந்து தேறுவார்.

பேதை யாருழைப் பிழையி லார்க்குமிக்
கேத மேயுறு மென்றி யம்பியாங்
கோது மாதர்கை யுற்ற கந்துக
மாத காதென வடிபட் டாடுமே.

பாடி யம்மனை பாவை மாரெறிந்
தாடு செங்கையை யலரென் றன்னவர்
நீடு வார்குழ லிலவு வண்டுக
ளோடி வீழ்ந்தெழுந் துட னுலாவுமே.

ஆசை நீக்கியி னலைதன் முற்றுறு
மேசி லாருயிர்க் கென்று றைப்பபோற்
பாச நீக்கியிற் பரந்து லாவுறு
மூச னீங்கலா ரோட ரிக்கணூர்.

புன்னை யாட்டயர் பாவை மார்குழல்
வண்ண மாலையும் வாசச் சுண்ணமு

மொண்ணி ழற்கல ஹொடு வீழ்தலால்
விண்ணு ளார்க்கும்விம் மிதம்வி ளைக்குமே.

போக பூமியும் பொருவு முதென
நாகர் போற்றிடை நகரு மைத்தன
மேக நாதனே யிழைத்த விஞ்சிசூழ்ந்
தோகை மிக்கவுண் ணகரு மைத்துமால்.

வெலற்க ரும்பகை விழிநகை யாதியின் விளித்தும்வன் படைநாதன்
மலர்க்க ரத்துமீ ளிமைக்கடை யாளமா வயக்கிய திறனேய்ப்ப
வலக்கண் வெம்பகை யாதிகள் காணுமு னனுக்கியு மரணென்னச்
சொலத்த குஞ்சுடர் மதில்புடை யுடுத்தது தொல்லைமா நகரம்ம.

தூங்கு வீங்கிரு டேரங்தொளி கஞற்றுவெஞ் சுடரவன் கலைத்திங்க
ணீங்கு ருதவல் லுடுக்கண மேகமு னித்தலும் வெளியூடே
யாங்க வேகுழித் தவிர்ந்திளைப் பாறவு மமைந்ததா லவிர்செம்பொ
னோங்க லாமல தெனநிவந் தோங்கிய வொளிர்மணித் தடநொச்சி.

பொருது தன்னிலை கடக்கும்வன் மீளியர் புவனமூன் றினுமில்லா
வருமை மல்கிய தாயினும் பொருளெலா மளித்தவன் செயப்பட்டுப்
பெருமை மல்கிய நகர்க்கெலாங் காட்டெனப் பிறங்கலின் மணியிஞ்சி
கருமை மல்கிய வகழியும் பொறிகளுங் கலந்துவீற் றிருந்தன்றே.

முடியில் வான்செழுங் கங்கையுந் திங்களு முதிரொளி மணிப்பாம்பும்
படிய நீர்க்கிடங் கடித்தலஞ் சூழ்தரப் பயின்றநொச் சியின்வீக்கங்
கடிவி ராவிய கடுக்கையங் கண்ணியான் கடையுகத் தெழுமாழி
நெடிய நீரிடை மாலயன் முரண்கெட நிவந்துநின் றதுபோலும்.

எறிந்து வண்டிளர் கமலமுங் குமுதமு மிருங்குவ ளையுமற்றுஞ்
செறிந்த நல்லெழி லங்நலா ருறுப்பொடு தெவ்வுவ விவையென்று
வறிந்து வெஞ்சிறை யிட்டகோட் டம்பொரூஉ மவையெலா மலையூடே
மறிந்து பங்கமுற் றுண்ணெகிழ்ந் திருங்கணீர் வாக்குந்தண் கிடங்கம்ம.

இறைவன் யாவரும் வணங்கியும் வாழ்த்தியு மெண்ணிய நலனெய்தக்
குறைவில் பேரரு ளாலிழைத் திட்டவிக் கோணமா மதிட்பாங்க
ருறையு மேனைய மதிலென வெண்மையி னுறலென வொழிக்கின்றுங்
கறையு நீள்பொறி யமரர்கள் விமானமு மகற்றுவ வெளியூடே.

செழுந்தண் மாமணி குயின்றெழுளி திசைதிசை செறிந்துவல் லிருள்வாய்ப்பெய
தெழுந்த கோபுர மங்நகர்த் தெய்வத மெழுந்துவிண் பரப்பெல்லைக்
கொழுந்தண் மால்வளங் கொண்டுயர் நகரெலாங் கோலவிந் நகரொப்புத்
தழுங்கொ லோவென விழிகளிற் பார்த்திடுந் தன்மைபோன் றதுமாதோ.

# திருநகரச்சிறப்பு.

நால்வ கைப்பெரு வளங்களு மெளிதரு ணன்மையால் வளமாண்பாற்
சால்வ திந்நக ரிந்நகர் நிகர்நகர் சகங்கண் மூன் றினுமில்லை
யேல்வ தென்றெழு தெய்வத மிருங்கர மெடுத்துச்சூ ளுறநின்றாற்
போல்வ தும்பரி னெழுந்தகோ புரமிசைப் பொலிந்தவார் கொடியம்ம.

நீங்கரும் வளத்திற் சான்ற நெடுநகர்க் குறப்பா யென்று
மோங்கிய மதிலுந் தாழ்ந்த வொலிபுனற் கிடங்குஞ் சொற்றாந்
தாங்கரு மகிழ்ச்சி பொங்கத் தருணர்க ளுளத்தை யெல்லாம்
வாங்கியொண் பொருளும் வாங்கும் வரைவிலார் சேரி சொல்வாம்.

ஓவிய வுருவ மெல்லா மொண்டொடித் தடக்கைச் செவ்வாய்க்
காவியங் கண்ணி னல்லார் காரிகைக் குடைந்த வாற்றா
னாவிய லுரையு மற்று நடையுமற் றிமைப்பு மற்றுப்
பாவிய வுயிர்ப்பு மின்றிப் பயின்றன சுவரோ டொன்றாய்.

கண்டவ ருயிரை யெல்லாங் கதுமெனத் தம்பா லாக்கிக்
கொண்டமர் பரத்தை மார்கள் கொள்கையைத் தெரிக்கு மாபோற்
கண்டவ ருருவ மெல்லாங் கவர்ந்தொளிர் தருப்ப ணங்கள்
கொண்டபன் மாட மேடை குலவுவ சேரி யெங்கும்.

உடையினு மணியினு முருவச் சாந்தினு
நடையினு மொழியினு நயன நோக்கினுந்
தடையற மயக்குநர் தமக்கி னம்மென
மிடைவன வவருழை வேரித் தண்டரோ.

அஞ்சன மெழுதியங் கயற்கண் மாமுலைக்
குஞ்சர மெழில்பெறக் கோலந் தீட்டுவார்
மஞ்சரை யாவணம் வரைந்தி டாமையே
யெஞ்சலில் பொருளுங்கொண் டேவல் கொள்வரால்.

கற்பிலர் பொய்யினர் கவர்த்த நெஞ்சின
ரற்பில ரெனநனி யறிந்த மன்னரும்
பொற்பொடு சிறப்பருள் பொலிவி னாரெனிற்
சொற்பயில் பரத்தையர் சொரூப மென்சொல்கேன்.

சூதுபொய் யரியலிற் றொடக்க மாதியாத்
தீதுசெய் யினும்விலைத் தெரிவை மாருழை
மாதருக் குடைந்தபூ மாது வைகலுங்
கோதறு திருவெலாங் கொடுத்து நிற்குமே.

கலைத்தொழிற் சுவையினுங் கடுத்தி லேமென
விலைக்கெரி வையர்க்குளம் வெள்கிப் பூக்கராந்

# திருவானைக்காப்புராணம்.

தலைத்தரு பயத்தின்விட் டன்ப ருவக
நிலைத்துருக் கரந்தன னிகழ்சொன் மங்கையே.

ஆடலி னரவமு மமுதா குத்தெனப்
பாடலி னிசைகளும் பகலு மெல்லியுங்
கூடலிற் றுறக்கமாய்க் குறைவி லின்பமே
நீடலின் வீடுமாய்ச் சேரி நின்றதே.

சுடர்விடு மவையவந் தோறுந் தீஞ்சுவை
விடமொழித் தார்வலர் வேண்டி யாங்குள்
கெடவரற் பரத்தையர் கெழுவ வல்லரேற்
கடல்கடைந் திளைப்பரோ கடவு ளாரெலாம்.

மேவண வகப்பொருள் விலைசெய் வாழ்க்கைய
தூவணப் பரத்தையர் சூழல் சொற்றனம்
பாவணப் புறப்பொருள் பலவும் விற்றிடு
மாவண வீதியி னமை!

மரகத மணிக்கிடுகு வளர்செழும் பவளக்கால்
விரவுற வெடுத்திட்டு வேறுபன் மணிமாலைக்
குரவலர் மலர்த்தொங்கல் கோடணை கொளவார்த்துப்
பரவுநன் மணமூட்டிப் பயின்றன கடையெல்லாம்.

. . . வெழிற்பந்தர் முகினுழை தரச்செய்து
நந்தொளி மணிவாழை நாகிளங் கமுகியாத்துச்
சுந்தர மலர்வாசச் சுண்ணமு நனிதூவி
யிந்திர நகரேங்க விருத்தினர் தவிசெங்கும்.

நடுநிலை பிழையார்போ னலத்தகு கோறங்கைத்
தொடுதலி னன்றேயித் தொலைவறு பொருளெல்லா
முடையவ ராகின்று ளூதிய நாய்கரெனக்
கடைவள நோக்குநர்கள் கருதுறுந் தகையனவே.

வரைவள முழுதொருபால் வனத்தன முழுதொருபா
லுரைதரு பழனத்தி னொலிவள முழுதொருபாற்
றிரையன முழுதொருபாற் செறிதலி னியமந்தாந்
தரைமகள் பண்டாரம் போன்றன தனித்தனியே.

வரையென மணிமாடம் வனமென வுயர்கொடிக
டிரைதவழ் கடலென்னத் திகழ்சன வொலிமூன்றும்
விரவிய நியமந்தாம் விளம்புமுந் நிலந்தாமும்
பரவிய தண்ணடையிற் பயில்வுறுந் தகையனவே

# திருநகரச்சிறப்பு.

இரதமொ டெழில்வேழ மிவுளியு மயிலாதிக்
கரவில்பல் படைமற்றங் காதலின் விலைசெய்ம்மார்
நிரைநிரை நிறுவித்த நீடிய நியமந்தாம்
வரமலி பாசறையின் வயங்குவ வொருபாங்கர்.

விஞ்சுபு பன்மொழியும் விரவலிற் பொருள்கவரா
தஞ்செவி துயர்கூர வனைத்தையு நுகர்கிலமென்
றெஞ்சிய பொறிநான்கு மின்னலிற் றுளைகிற்பத்
தஞ்சமில் பொருளெல்லாந் தலைத்தலை சிறந்தனவே.

உளதுகொ லிலதுகொலென் றொருபொருள் வினவுதலு
முளதில தெனச்செவ்வே யுணர்த்தலு மலதிலையென்
றளவலு மவைமூன்று மாங்கிலை யாவர்களு
மளவில்பல் பொருளெல்லாந் தருகென வமைந்தனவே.

கொள்ளுநர் தமக்கெல்லாங் குறைவற நனிநல்கி
யொள்ளிய பொருள்பலவு மொருதினம் போற்காட்டி
நள்ளுறு மாவணந்தா நாடுறி னமரங்கா
டெள்ளுல வாக்கிழியிற் றிகழ்வன தகவுறவே.

சேயிடைப் பொருள்பலவுந் தெவ்வுநர்க் கெளிதாக
வாயிடைத் தவவுய்க்கு மாவணத் தெழிலீதாற்
பாயின புகழோடும் பல்குடி களுமல்கி
மேயின மணிவீதி வியத்தகு வளஞ்சொல்வாம்.

எடுத்த சாங்கரத் திணங்குபல் வேறுசா தியினு
மடுத்த யாந்தர்க ளவரவர்க் கான்றதொல் லொழுக்க
மடுத்து மேவர வதிந்துவாழ் மறுகுகள் சூழ்ந்து
தொடுத்த வோகையிற் றுவன்றின துலங்குநாற் றெருவும்.

உழுதி யாவருந் தத்தம தொழுக்கினிற் பிழையா
தொழுகு மாறுப கரித்துவே ளாளரென் றொருபேர்
தழுவு நீர்மையர் தருமமா திகளொரு நான்குங்
கெழுவு மோகையர் கிளர்ந்துவாழ் வீதிக ளொருபால்.

தரும ஞுயினுந் தாணுவின் பெருமைதேர்ந் தவர்தம்
பெருமை தேர்கலாப் பிழையினுற் பிரிந்துபின் னவரை
யெருமை யூர்திதொண் டினும்பிழை யாரிவ ரெனச்சார்ந்
தொருவு ருதன போன்றன வோங்குகார் மேதி.

விளைந்து வந்தன வித்துமா யுணவுமாய் விரவ
[illegible] பின்னவ ரமர்ந்துவாழ் மாடம்

வளைந்து நின்றுவல் வினைகண்மூ வகையென மருவத்
தளைந்து நின்றவத் தனிப்பெரு மாயையே தகைவ.

மண்ணி லேபல வித்திவண் பொருள்விளைப் பதுபோற்
றிண்ண மாகநல் குரவினர் செங்கையோ தனமும்
வண்ண மாகிய பொருள்களும் வகைவகை வித்தி
யண்ண லாம்புகழ் விளைத்தலா லயின்றுகண் டுயிலார்.

உள்ளம் யாவையுங் கோணுத லுருதசெந் நிலைமை
விள்ளு ருதுதங் குறிப்பினுல் விளக்குவார் போலத்
தெள்ளும் வானிறைக் கோலினைச் செங்கையிற் றுங்கிக்
கொள்ளு நீர்மையர் குழுமிவாழ் வீதிக ளொருபால்.

முதல்கெ டாவகை யாவணத் தூதிய முகக்குங்
கதமி லாதுயர் வணிகர்தங் கைப்பொருண் முழுது
முதவி யார்வல ராதியோர்க் கும்பரின் மாட்டுஞ்
சிதர்வி லூதியஞ் செறித்தலாற் றெறுபசி களையார்.

அளகை மாநகர்க் கொருவனே தலைவனு தலினவ்
வளமை மாநக ரெர்க்குமோ வளர்நிதிக் கிழவர்
கிளைஞ ரோடுபல் லாயிரர் கெழீஇயினர் வதியுந்
தளர்வில் பேரொளி யசும்பிய தமனிய வீதி.

பகைமை மீக்கொளு மன்னரைப் பறந்தலைப் படுத்து
மிகைமை மீக்கொள விண்ணெலாங் கைக்கொள விடுத்துத்
தகைமை மீக்கொளு மண்ணெலாந் தமதுமண் ஞேக்கி
வகைமை மீக்கொளு மன்னர்வாழ் வீதிக ளொருபால்.

அஙகண வாழ்தரு மறையர்கண் ணிமைபபன வாயும
பொங்கு போரிடை யழித்திமை யாதிகல் பொலிவு
தங்கண் மேவரி தென்பது தாமறிந் திமையாத்
துங்க மேயினர் தோல்வியிற் படாவகைச் சுரர்கள்.

இயக்கு நாயக னின்றியா ருயிரியங் காமை
வயக்கி ஞலென வயின்வயிற் செயலற வதிந்த
வுயக்க மாணவந் திறுத்தவொன் னலருயிர் குடித்துத்
தயக்க மாண்டவத் திரமுத லாஞ்சமர்ப் படைகள்.

இரக்கு மாந்தர்நல் குரவெனும் பகையொடு மிரப்பிற்
கரக்குங் காரறி வெனும்பகை கருணையம் படையா
லரக்கி மேதகு மறமெனு நிலமுழு தாண்டு
பரக்கு மோகையிற் படிந்தலாற் பரிவுயிர்த் தமையார்.

## திருநகரச்சிறப்பு.

மூவர் தாடொழு முதன்மையு மூவகைப் புரமுந்
தாவ நூல்பல பயிற்றலுந் தழல்கையோம் புதலு
மேவ லால்வெறிக் கொன்றையங் கண்ணியான் விழையு
மோவின் மாமறை யந்தணர் வீதிக ளொருபால்.

சென்னி வேறொரு வருணத்திற் றணிக்கலாச் சிறப்பின்
மன்னி யாவரும் வணக்கலா மதிமுடிச் சடையோன்
றன்னை நீள்சிகை தாழ்க்கலாத் தழலிடை வழிபட்
டுன்னு வான்கதி யுறுபவர் வாழ்க்கைசொல் வரைத்தோ.

செருத்த லான்பல படித்துஞ்சேர்ந் தார்தமைக் கொல்லி
யிருத்தி நாடொறும் பூசனை யியற்றியு மிழியார்
வருத்தும் வானவர் பசியொரீஇ மழைவளஞ் சிறப்பித்
தருத்தி நானிலத் தரந்தையு மனுக்குந ரவரே.

வேத மோதியும் வேள்விகள் பற்பல புரிந்து
மேத நீவியு மதிதிபூ சனையினி தமைத்துங்
காத லுண்முக னலருறக் கடிநக ரிருக்கு
மாதர் வேதிய ரலதுக ணவையகக் கிலையே.

வேள்வி முற்றிய வேதியர் வேறுவே றூரும்
வாள்வி மானமு மிரதமு மதவிளங் களிறுந்
தாள்வி சைத்தெழு புரவியுந் தகைதலின் வீதி
யாள்வி னைத்திறத் தரசர்வீ திகளொடு மமர்ந்த.

தாங்க ளேயரு ளுடையராந் தகுதியை மதியார்
யாங்க ணியாவரு மருளின ராம்வகை யெண்ணி
யோங்கு பூசனை யிரண்டையு முஞற்றுவிப் பிரர்கள்
வீங்கு மோகையின் வதிதரும் வியலிடம் பலவால்.

சரியை யாற்றுநர் மடமொரு சாரெலாந் ததையுங்
கிரியை யாற்றுநர் மடமொரு சாரெலாங் கெழுவு
முரிய யோகியர் மடமொரு சாரெலா மொளிருந்
தெரியு ஞானியர் மடமொரு சாரெலாஞ் சிவணும்.

நம்ப னூரடிப் பூசனை நலத்தக வியற்ற
வம்பு நீள்புனன் மணிக்குட முச்சியின் வயக்கி
யம்ப ரேகுந ரடுத்திடு முருவின்வான் கங்கை
பம்ப வேற்றுநின் றூற்றுவான் பழகுவா ரனையார்.

சான்ற நீஞ்சுவை நால்வகைக் கவிதையும் புணர்க்கு
மான்ற கேள்வியிற் கவியொடு கமகனே வாதி

யான்ற வாக்கியென் றனைவரு மளவளா யிருந்து
சான்ற நூறெறி பட்டிமண் டபம்பல தயங்கும்.

மூன்றி ரட்டிய சுவைகளு மொய்த்தநா லுண்டி
மான்ற வைம்பொறி யடங்கிய மாதவர் முதலோர்க்
கேன்ற நல்லுப சாரத்தி னினிதுமிக் கூட்டி
யூன்றி நின்றிடு மோதனச் சாலையு முளவால்.

அவத்தி ஞன்றவ ரிருக்கைக ளவணில வாகத்
தவத்தி ஞன்றவ ரிருக்கையு மவணசார் பத்திப்
பவத்தி ஞன்றவ ரிருக்கையு மவணபண் பினராய்ச்
சிவத்தி ஞன்றவ ரிருக்கையு மவணதே சுறவே.

ஆங்க ணில்லதென் றோர மனைத்துல கினுமி
லாங்க ணில்லதென் றொருபொரு ளனைத்துல கினுமி
லாங்க ணில்லதென் றின்பமொன் றனைத்துல கினுமி
லாங்க ணில்லதென் றரியவீ டனைத்துல கினுமில்.

வாரணத் திரளும் வாம்பரித் திரளு மணிகுயின் றெடுத்தபொற் றேருந்
தாரணி புயத்து மைந்தரந் தணர்கைத் தானமாக் கொடுத்தன ருகுக்கு
நீரணி மகளிர் சிதர்ந்தகுங் குமமு நிழன்மணிக் கலன்களுங் கொழித்த
சீரணி வண்ட லிழுக்கலின் விரையச் செலவுறு செப்பிய வவையே.

உருக்கிய பசும்பொற் றகட்டிஞன் மணியா லுருகெழப் படுத்தவார் வீதி
பொருக்கெனப் புகுவா ரடிக்கிடர் புரியப் புழுதியும் பரலுமின் றேனுந்
தருக்கினர் மடவார் வீசுகுங் குமமுந் தமனியப் பொடியும்பூந் தாதுங்
குருக்கலத் திரளுங் குவால்படக் கிடந்து குறுநடை யாக்குவ மாதோ.

வீதிகட் கழகு புரிவன வுயர்ந்து விரிந்தபூம் பந்தரப் பந்தர்க்
கேதமி லழகு புரிவன மணியி னிழைத்தவே திகையவை தமக்குக்
கோதறு மழகு புரிவன நிறைநீர்க் கும்பமு மாடியும் விளக்குந்
தீதறு மழகு புரிமலர்த் தொடையுஞ் செழுங்கனித் திரள்களும் பிறவும்.

நாரணன் முதலோர் வலம்வரும் வீதி நள்ளிரு மருங்கினு மணியாற்
சீரணிந் தெடுத்த மாடமே டைகளிற் செறிகதிர்ப் பிழம்புதை வரலாற்
றோரண நிரையுந் துகிலிகைக் காடுஞ் சுரும்புளர் பந்தரு மிடைந்து
தாரணி விளக்குஞ் சுடரிருங் கிரணந் தடுத்தும்வல் லிருள்பட ராதால்.

தமனியத் தகடு படுத்தொளிர் நிலத்தாற் றமனியப் பொடிகள்போர்த் ததல்
தமனிய வுருவா யிருத்தலாற் பந்தர் ததைந்திரு சுடரையும் விலக்கத்
தமமற மணிக ளொன்றுமோ ரியல்பிற் றகையொளி விரித்தலாற் றெருக்க
டமனிய வுலகம் பொரும்புரை யாது தனிச்சிவ லோகமும் பொருளால்.

# திருநகரச்சிறப்பு.

விண்ணந் தூம நிறத்தது வேறுபல்
வண்ண மேயதென் னேயென வானவ
ரெண்ண மாடத் திழைத்தொளிர் மாமணி
நண்ணி ருங்கதிர் நாளும் பரக்குமே.

நீல மேக நிமிர்ந்து தவழ்தொறுஞ்
சூல மேந்திச் சுடர்விடு மாளிகை
ஞால முய்ந்திட நாகத்தி னீருரிக்
கோலங் கொண்ட குழகனொ டொக்குமே.

வளங்கொள் வெண்சுதை யூட்டிய மாடமேற்
றுளங்கு பைங்கதிர்ச் சோமன் றவழ்ந்துறல்
விளங்கு மாதர் முகம்பொர மெய்யுரைஇக்
களங்க மாய்க்குமக் காட்சி நிகர்க்குமே.

உருவ வார்சிவி றிக்குலத் தூக்குநீ
ரருவி வார்கொடி யாரமை மாளிகை
பொருவின் மால்வரை பொற்பவங் காடுவான்
மருவு மாதர் வரையர மாதரே.

ஈண்டு தேவ ரிருக்கை நிலத்துகா
தாண்டு வானிடை யேயமர் வெய்திய
மாண்ட வான்மத லைத்திரள் சேர்த்தென
நீண்ட கேதன நீள்விசும் போங்குமே.

மேனி லத்தின் விராயமர் மாந்தர்கள்
கீழ்நி லத்துக் கெழூஉம்புனல் கொள்கிலா
ரானி லத்தொளி ரம்புலி யின்சிலைக்
கானி லைத்த கடிப்புனல் வாக்கலான்.

இந்த மாநக ரத்தெழி லோடெதிர்
தந்து நோக்கத் தமனிய மாநக
ரெந்த நாளு மிருஞ்சுர மாதலா
லந்த வான்பதி யார்சுர ராயினர்.

ஆளும் விண்ணழ கான்றில தென்பது
கோளு நாளுமிக் கோணை நகரென
நாளு நாளு நலத்தகக் காணிய
தாளு ருவது வேதகச் சாற்றுமே.

எடுத்த மேனிலத் தின்புறு மாந்தர்க
டொடுத்த வான்கல விச்சுவை நோக்கியுண்

# திருவானைக்காப்புராணம்.

நீளமுக் காற்றின்விண் வாழ்க்கையா
விடுத்துளாருண வோடு விழித்துயில்.

இயற்கை மெய்யெழி ேனேக்குறின் யாவருஞ்
செயற்கை யற்றழி செய்கை யறிந்துதம்
மயக்கு மெய்முழு தும்மறைத் தாரரோ
தயக்க மாணணி யாவிளந் தையலார்.

கருங்க யற்கண் மாதர் காத லன்ப ரைப்பு லந்துநின்
றொருங்கு தங்கை வாங்கி வீச லுற்ற தாரி னேடுபோய்
நெருங்கு கற்ப கப்பொ ழிற்க ணீடு கூடு வண்டினை
மருங்கு கண்டி தென்கொ லென்று வானு ளார யிர்ப்பரே.

நகுக திர்ப்பி ழம்பு கானு நன்ம ணிச்செய் மேனிலத்
தகும துக்க மழ்ந்த தொங்க லோதி மாதர் கூடலின்
முகுளி தங்கண் கொள்ள வேர்மு கத்த ரும்ப நோக்கிய
வகம கிழ்ந்தி ருந்த வானி னந்த லார்ச மழ்ப்பரே.

புலந்து நிற்கும் வேலை யும்பு ணர்ந்து நிற்கும் வேலையும்
கலந்து நின்ற தம்மை யுங்க ழற்றி விட்ட மானமுள்
ளலர்ந்து வீதி வெய்யி னின்ற வான்ற மாந்தர் கேட்கென
மலர்ந்த வாண்மு கத்தி ளுர்தம் வாச மாலை யாதியே.

பாட கப்ப சும்பொ னூபு ரத்த ளிர்ப்ப தத்தினர்
மாட கத்த யாழெ ழுப்ப மாடு வீழ்ந்த கின்னர
நீட கத்த ருக்கி ரித்து நீவிர் பண்ப யிற்றுகென்
றேட கத்த கூந்த லார்க்கி றைஞ்சி நின்ற தொத்ததே.

வயங்கு கிள்ளை பூவை யோடு மானு மாதர் சொல்லென
நயங்கொள் பாட லுட்பு ணர்த்து நாவ லார்க்க வற்றினை
யியங்கு முது கூட்டி விட்டி டித்தி டித்து ரைத்திசைப்
பயன்கொ ளுத்து மாதர் மேன்மை பார்த்த லின்மை யென்கொலோ.

மங்க லச்சி றப்பு நாளு மாட மெங்கு மல்கலிற்
றுங்க வச்சி றப்பி னேடு மைந்த தூய தோட்டிமை
தங்க லான்வ னப்பி ரண்டு சாரு மேனே மாநக
ரங்கண் ஞால மெச்சு கின்ற வந்த கர்க்கி ணங்குமே.

பூம டந்தை மார்பி விட்ட பொற்ற பேர ணிக்கல
மாம ணிக்கு லங்கு யின்ற மைந்த மாட மாநகர்
காமர் மல்கு மக்க லங்க லந்தி லங்கு நாயக
மாம ணிக்கு ழாங்க டுக்கை மாலை வள்ளல் கோயிலே.

## திருநகரச்சிறப்பு.

தங்களுக் கிறைவ னீன்ற தாழ்குழற் றேவி யன்பு
பொங்கமிக் காற்ற நின்ற புரையறு தவத்திற் கூறு
தங்குவ தில்லை யாசத் தடவரைக் குலங்கள் சூழ்ந்து
மங்குழை நின்றுங் காத்தா லனையபன் மதிலு மற்றும்.

குருமணி யிழைத்த நொச்சி கோபுர மாட மெங்கு
முருவவெள் விடைக டங்கி யொளிர்தரு காட்சி நாதன்
திருவடி வணங்கச் சார்வோர் செயிர்வழி யிடையே நீங்கத்
தருமவெள் ளேறு பல்வே றுருக்கொடு தவிர்ந்த தொக்கும்.

மேதகு தீர்த்தங் கொண்மார் வியத்தகு படியின் மாந்தர்
காதலி னிறங்கி யேறிக் களித்துறுங் காட்சி சுத்தத்
தேதமி லவத்தை யைந்து மேறியு மிழிந்து நிற்குஞ்
சாதக ருள்ள மென்னத் தகையுறு நாளு நாளும்.

தம்பிரா னுருவங் கொண்ட தம்மினத் தீர்த்தங் காண
நம்பிவந் திறுத்தா லன்ன நளிர்புனற் றீர்த்த மெல்லாம்
வம்புலா மலர்கள் பூத்து மலரடிக் குதவித் தேசு
பம்பியான் றவிரிற் சாலத் தெளிந்துபா வமுந்தீர்க் கும்மே.

கையணி நுதற்க ணுடைக் கவினரக் கிறைவர்க் கான
செய்யணி குறித்துச் சேர்ந்தார்க் கொல்லுமத் தீமை நோக்கா
தையர்செங் கனலி யோம்பு மவிர்மணி வேள்விச் சாலை
நெய்யவித் தூம நாளு நெடுவிசும் பளக்கு மன்றே.

பெருகிய வன்பு பொங்கப் பிஞ்ஞகன் றன்னைத் தாஙகு
முருகிய வுள்ள மேலா யோங்குமென் றுணர்த்தா நின்ற
திருநில முழுதும் போற்ற வெம்பிரான் றிருமுன் றேலாத்
தருமவெள் விடையி னூர்தி தனிக்கொடி நிவந்த காட்சி.

நம்பிரா னினிது வைகி நல்லருள் கொழியா நின்ற
வம்பொனா லயத்து மேலா லவிர்மணித் தூவிப் பாங்க
ரும்பர்வா னளக்து நிற்கு முருகெழு நாவற் றூரு
செம்பொன்மால் வரையின் பாங்கர்ச் சிவணிய நாவ லொக்கும்.

கவர்மணி விளக்குஞ் செய்ய கனற்கெழு விளக்கும் பல்வே
றவிர்வன வன்பு பொங்க வடிமலர் தொழுவோர்க் கெல்லா
மிவர்நுதல் விழிக ளாக வீவதற் கிறைவர் வைத்த
வுவமையி றழல்கள் போன்ற வொளிர்செழுங் கோயி லெங்கும்.

முரசம்வின் முகிலு நாண முழங்குறு முழக்கும் பல்லோர்
விரசினர் வணங்கிப் போற்றும் வியத்தகு குரைப்புந் தேவ

ரசர்கள் பொருள்க ணல்கி யடிதொழு மார்ப்பு மல்கித்
திரைசெறி கடல்க ளேழுந் தெழித்தெனத் திகழு மன்றே.

இருட்பிழம் பெடுத்து வாய்ப்பெ யெரிமணிக் குவையும் வேறு
பொருட்டிரட் குவையு மியாண்டும் புணர்கலாப் புதிய பொற்பு
மருட்டிறத் தினருங் காணின் மலமொரு மூன்று நீங்கி
யருட்டிறத் தினர்க ளாக்கு மாக்கமு மவண மாதோ.

அறுவகை மதத்தி னோர்க்கு மவ்வவப் பொருளாய் நின்றங்
குறுவா மருளு மூண்மை யொருபொரு ளாயே நின்று
மறுவற விளக்கி நின்றாள் வணங்குந ரெவர்க்கும் வேட்ட
நிறுவிமெய்ஞ் ஞான நீதி நிகழ்த்தகி லாண்ட வல்லி.

எவ்வழி முயன்று பூசை யியற்றினு மடிமை யானோ
ரவ்வழி வழியே யாக வடிநிழல் குறுகு மூண்மை
செவ்விதி னுணர்த்து மூக்கட் செம்மலைப் பலசா லேகத்
தவ்விய மனுங்க யாரு மன்பொடு காணுங் காட்சி.

நெகிழ்ச்சிமிக் குடைய நீரா னெடுவெலி யுருவந் தான்கொண்
டிகழ்ச்சிமிக் குடைய மாசி னீணங்கினோ ரிருப்பு நெஞ்சு
மகிழ்ச்சிமிக் குடைமை யாக வரவர நெகிழ்த்து நாளும்
புகழ்ச்சிமிக் குடைய வின்பப் பூரண னரசு செய்யும்.

இத்தகு வளமை சான்ற வெழில்வள ரானைக் காவி
னுத்தம சரித மெல்லா முயர்ந்தனை மிசவ னத்தின்
மெத்திய வன்பின் வைகும் விரதியர் சூதன் றன்னைப்
பத்தியிற் கடாவி நின்ற பரிசினைப் பகர லுற்றேன்.



உ

# நைமிசப்படலம்.

திருவி ளங்கிய தேயத்த வர்க்கெலாங்
கருவி ளங்கிய கார்வளஞ் செய்வதோர்
குருவி ளங்கு குரையழல் வேள்வியி
னுருவி ளங்கிய தாலுயர் நைமிசம்.

மண்ண யந்ததண் வாரி வழங்குமா
றண்ண லங்கன லாற்றி வளிதடுத்
துண்ண யந்த வுறுவரி ஞேற்பசி
விண்ண யந்தவர் வீப்பதக் கானகம்.

உதர வங்கி யுலகொரு மூன்றினுஞ்
சிதைய வங்கி வளர்த்திடுஞ் செய்கையார்
கதமி லாதவர் காய்தரிற் றேவரு
மதலை யற்றிடும் வாய்மைய ரங்குளார்.

விடுத்த மந்திர மேவிய ழைக்குமுன்
னெடுத்த வன்பி னதற்கெதிர் கொண்டென
வடுத்து விண்ணவ ராங்குற வானெலாந்
தொடுத்த வேள்வியின் றூம நிவக்குமால்.

மடங்கல் வாரண மான்புலி மாறற
விடங்க டோறு மிருப்பன வெம்பிரா
னடங்கொள் சேவடி நண்ணிய தாங்களு
மடங்கி மாதவ மாற்றுவ போன்றன.

அயில்கொள் சூலி யருச்சனை மாலியம்
வெயிலின் வாடுவ வேள்விடும் வெங்கணை
பயிலு மாதவர் பாலுற லஞ்சுபு
செயிரி னுங்கழி யுஞ்செய லொத்தன.

மறியு டம்புதை வந்துசின் மாதவர்
கறிபு னல்கினர் காக்குமப் பெற்றிமை
மறிகை யேந்தி வடிவுகொ ளன்றுகைப்
பெறுவ தாமெனப் பேணுவ தொத்ததே.

அவியி ருங்கொடை யந்தார்க் கீந்திடுஞ்
சவிநெ டும்புகழ் தம்மையும் போர்த்தொளிர்
கவின்வி ளக்குவ காசறு மாதவ
ரவிர்வெண் பூதி யணிந்தொளிர் தோற்றமே.

படியில் வேறுபற் றின்மை தெரித்தெனக்
கடிவி ராவு கடுக்கையங் கண்ணிபெம்
மடிகள் கண்மணி யேயணி யாக்கினார்
நெடிய வைய நிரப்பறு கோளினார்.

கற்ப கத்துக் கவினிழை தம்மைமே
வற்பின் வந்தண வுந்திறங் காட்டுமெப்
பொற்பி னின்றனர் புண்ணிய மாதவர்
வற்பின் வற்கலை வாங்கி யுடுத்தியே.

பிறவி யொப்பினும் பேணிய செய்கையா
லறவர் மேலென் றறைவன மாதவர்
செறிம யிர்த்தொகை செஞ்சடை யாகிவிண்
ணெறியி னுரையு நிச்சம்வ ணக்கியே.

மொழியு மாமொழி யுங்கிளி போற்சுவை
வழியு மாமறை மாதவர் தஞ்சிறு
ரழிவி லாசிரி யன்வழி யோதுறுங்
கழிவி லோதைக் கிடையொரு காலெலாம்.

விளங்கு வேத புருடரே மேவியங்
குளங்கொள் காதலி னோதுதல் வீழ்தரத்
துளங்க மாமறை சொல்லிநல் லந்தணர்
வளர்ப்பதோர் சாரெலாம்.

விதியி னூற்றி விளங்கழ லோம்புபு
கதிய வன்பினர் காலத்தி னூற்செயு
மதிதி பூசையு மாங்கொரு பாலெலாம்.

இரண்டு நாடி யியக்க மறுத்திடைத்
திரண்ட வாயுச் செலுத்தி யிருண்மல
முரண்ட டுத்தொளிர் மெய்யொளி யேதமக்
கரண்ட கச்செயு மார்வமோர் பாலெலாம்.

நல்ல ஞான மிரண்டினு நாட்டம்வைத்
தெல்லை யற்றொளி ரின்பக் கடலிடை

## நைமிசப்படலம்.

யல்ல லற்றறி வற்றிரண் டொன்றறப்
புல்ல லுற்ற புணர்ப்புமோர் பாலெலாம்.

கருவி நூலுங் கணக்கும் பயின்றவர்
பொருள்க ளாயும் புகற்சியோர் பாலெலா
மிருதி நூலின் விளக்க முணர்ந்தவர்
மருவு நீதி வழக்கமோர் பாலெலாம்.

தீங்க ரும்புஞ் செழுங்கனி யுஞ்சுவை
யோங்கு தேனு முடங்குகுத் தாலென
வீங்கு தீஞ்சுவை மேய புராணங்கள்
பாங்கி னேதும் பயிற்சியோர் பாலெலாம்.

இன்ன தாகிய நைமிசத் தெய்தினான்
கன்னி பாகன் கழலொருங் காதலான்
பன்னு கேள்விப் பதினெண் புராணமுந்
தன்ன வாகத் தழீஇக்கொண்ட சூதனே.

எய்திய சூத னெழில்வன நோக்கி
வெய்தெழு சிந்தையின் விம்மித னாகி
வைதவண் வைகிய வந்தணர் தேரா
வுய்திய மென்றெதி ருற்றனர் மன்னோ.

மாதன மெய்து வறிஞரி னொப்பக்
காதலி னுற்செய் கடன்முறை செய்தங்
காதன நல்கி யதற்கணி ருத்தி
யேதமி னட்பி னியைந்துரை செய்வார்.

கற்பகஞ் சுரபி சிந்தா மணிநிதி கரைந்த வைந்தும்
பொற்புற வெளிதிற் றமே வறிஞர்பாற் புக்கா லென்ன
வற்பொடு மீங்குப் போந்தா யாதலி னடியே மாட்டுத்
தற்பர னருளின் செல்வஞ் சார்வதற் கைய மின்றே.

இருண்மல வலியைத் தாக்கு மிராறனோ டாறுஞ் சேர்ந்த
பொருவறு புராண முற்றும் புரையறத் தெளிந்தோய்க் கியாது
மருவரி தொன்று கேட்க வலித்தனம் வாஞ்சை முற்ற
வருளொடு மிறுத்தல் வேண்டு மதுவெது வென்னிற் கேண்மோ.

உலப்பறு தீர்த்தந் தம்மு ளுத்தம தீர்த்தஞ் சால
நலத்தரு மூர்த்தி தம்மு ணலத்தகு மூர்த்தி யின்ன
தலத்தினு ளுயர்ந்து நின்ற தலத்தொருங் கிருக்கு மாயின்
மலத்தொகை யிரியக் கேட்கும் வாஞ்சையே மென்றுந் தாழ்ந்தார்.

தவத்துயர் வலிமை சான்ற சவுனக முனிவ ஞதிப்
பவத்தொகை யிரிக்கு மையர் பரிந்தனர் வினுத லோடு
மவத்தொகை யுயிர்கட் கெல்லா மனுங்கவச் சூத மேலோன்
சிவத்துள மழுத்தி நின்று தெளிந்தன னுவற லுற்ருன்.

தேவரும் விழைய நோற்குந் திருத்தகு முனிவர் நீவி
ரேவரு மின்ப மெய்த வெம்முழைக் கடாவி நின்ற
மூவகை யுயர்வு மொன்ருய் முற்றிய தலன்மற் ருனைக்
காவல தில்லை கொண்மின் கைத்தலக் கனியின் மாதோ.

அருந்தவப் பேறு வாய்ந்த வந்தணீ ராத லாலே
திருந்திய வானைக் காவின் றிருத்தகு மேன்மை நம்பாற்
பொருந்திய விளந்தா மீது புராதனன் றேவி நந்திக்
கிருந்தருள் செய்த தாமென் றியம்பினன் மோன முற்ருன்.

அனையது கேட்ட லோடு மறிஞர்கண் மகிழ்ச்சி துள்ள
வினையறு சூதன் பாத மீட்டிநன் றிறைஞ்சித் தேவி
வனைபுகழ் நந்திக் கண்ணல் வகுத்தவா வகுக்க வென்ருர்க்
கினையது முரைத்து மென்ரு விவறினன் சூத மேலோன்.

எற்றமி லாள ராகி யிருந்தவக் கிழவ ரெல்லா
முற்றமெய்ச் சூதன் றன்னை வினுயது முத்த ரந்தான்
மற்றவர்க் குரைத்த வாறும் வழங்கினுந் தேவி நந்திக்
கற்றவர்க் கற்ருேன் கூறு மடைவினி யுரைத்து மாலோ.



# புராணவரலாற்றுப்படலம்.

உலகம் யாவையு மொடுங்குமவ் வூழியு மொடுங்கா
திலகு பேரொளி யாயதன் னிறைவனே யிழையச்
சுலவு வாரிதி யுலகெலாந் தொலைக்குமக் கடைநா
ணிலவி மேக்குற நிவந்துநிற் பதுநெடுங் கயிலை.

உருத்தி ரப்பெயர்ச் செம்மலா ருருவந்தன் மயமென்
றருத்தி வையகந் தெளிதர வலங்குசாத் துவிகம்
பெருத்த குன்றமாய்த் தாங்கிய பெற்றியே கடுக்குங்
குருத்த தும்பிய கொழுஞ்சுடர் கொழிக்குமச் சயிலம்.

மேக மண்டலங் கவான்வரை விராவநள் ளிடையே
நாக நன்மணி யிழைப்பமே லலக்குந்தன் னொளியே
யாக நின்றவக் கிரிகுண மூன்றுநேர்ந் தனைய
தேக னக்குணங் கடந்துநின் றெனமிசை யிருக்கும்.

கற்றை வெண்கதிர் பரப்பிய கலைமுழுத் திங்கட்
பெற்றி யொத்தது பெயர்ந்தெழு மாலைவெள் ளருவி
சுற்றின் வீழ்தர விளங்கிய கயிலைதுன் றியவா
னுற்ற மீன்கண மொத்தசா ரலினொளிர் முத்தம்.

கொழுந்து கொண்டெழு கொழுங்கதிர் மாணிக்க முழைநின்
றெழுந்து பல்லரு வித்திர ளிழுமென விழிவ
செழுந்த ழற்பெரும் பூதத்திற் றிகழ்தரத் தோன்று
மழுந்து தண்புனற் பூதமென் றறைவது தேற்றும்.

கூம்பு கையவாய்க் கூம்பல்செய் யாவிழி யினவாய்த்
தேம்பு னற்செழுந் தடங்களுந் தெரிசியா நின்றுங்
கோங்கல் வெண்கதிர் பரத்தலி னோரிரு பொழுதும்
வீங்கு பங்கயங் குவளைகள் விரிதரா குவியா.

எம்பி ரான்றிரு வுருவெடுத் தியங்குமெய் யடியார்
வம்பு லாஞ்சடை வளர்மதிக் கிரணமெவ் வாயும்
பம்ப லாற்பனிக் கதிர்ச்சிலை களும்பா னடியை
நம்பி யாங்குரு கியதென நறும்புனல் வாக்கும்.

நீற்றின் வெள்ளொளி பரத்தலி னெடுங்கணீ ரருவி
யூற்றி ருத்தலிற் பேரிசை தழுவிமிக் குயர்ச்சி
தோற்றி நிற்றலி னமலனுர் சுதந்திர விடமா
வீற்றி ருத்தலி னடியாரின் விளங்குமப் பொருப்பு.

ஒருகொம் பானையு மொராயிரத் திரட்டிவெண் கோட்டுச்
செருவின் வேழமுந் திரளிமிற் றருமவெள் ளேறும்
பொருவி லோகையிற் பொருநிய படுவதல் லாது
மருவ லார்களிற் பொருதிடப் படாததவ் வரையே.

கொண்டல் வாய்திறந் துகுத்தவெண் முத்தமோ குலவேய்
விண்டு வாய்திறந் துகுத்தவெண் முத்தமோ மடங்கற்
கண்டு காய்ந்துகு கடாக்கரி முத்தமோ வறியா
மண்டர் போற்றுமக் கயிலையஞ் சாரலி னதிகம்.

கருணை நாயகன் கழலெழுக் கருதிவா னவர்கந்
தருவர் சாரணர் சித்தர்விச் சாதரர் முதலோர்
மருவி வாழ்தரத் தழுவிவான் கதிகளெல் லாந்த
னுருவி னேருழிக் காட்டவற் றுயதவ் வோங்கல்.

பெண்ணி னுயகி யாகிய பிறங்கலின் மடந்தை
பண்ணை யாட்டயர் தரப்படர் பசும்பொழி லிடத்தும்
வான்முழை யிடத்துமென் மலரடிச் சுவடு
ளார்முடி கோட்டுவ வியத்தக விளங்கி.

விலகி வில்லுமிழ் மணிகளும் விண்ணுயர் மணியு
மலர்செ யைவகைத் தருக்களு மைவகைப் பசுவு
நிலவு பங்கய நிதிகளு நிகழ்வளை நிதியுங்
குலவு விம்மிதப் பொருள்களும் வயின்வயிற் குழுமும்.

ள் காதலிற் றம்பிரான் கழலிணை பரசித்
யாட்டயர் காட்சியுஞ் சுடர்மணி யரங்கின்
வணங்கு நூலிடை யரமகளிர் கண்மணி முழவோ
டிணங்க வாட்டய ராடலு மிடந்தொறு நிலவும்.

இந்தி ரன்பத முதலிய விமையவர் பதமுங்
கந்த மென்மல ரயன்பதங் காகுத்தன் பதமு
மெந்த விம்மித வளங்களு மிறைஞ்சினர்க் களிக்கு
மந்த வெள்ளியங் கிரிவள மறைவதற் கெளிதோ.

இனையவெள் ளியங்கிரிக் கெழில்செய் தாலெனக்
கனைகதிர் மணிச்செயுங் கால்க ளாயிரம்

## புராணவரலாற்றுப்படலம்.

புனைதரு மண்டபம் பொலிந்த தாங்கரோ
துனைபரி யேழுடைச் சுடரு மாயவே.

தெள்ளடி யாரினுந் தீமை செய்வவென்
றள்ளொளிக் கோளுநா ளனைத்தும் யாத்தென
வொள்ளிய மண்டபத் துள்ளொ ளாமிரு
ளள்ளுறு மணித்தொடை யாக்கப் பட்டவே.

விலகிவில் லுமிழ்மணி வீற்று வீற்றுநீ இ
யிலகிய விளக்கமு ளிமைப்பில் லார்முடிக்
குலமணி மழுங்குவ குழகன் பேரரு
ணிலவுமி யுயிர்மதி நின்று மாய்ந்தென.

அளவில்சிந் தாமணி யனந்த கோடிகள்
வளமலி மண்டப மருங்கு துன்றுவ
களமணி மிடற்றினற் காணப் போந்தவர்க்
குளமகிழ்ந் தருளிய வுறுத்தி ருலெண.

அணியில ராயினு மடிமை பூண்டுயர்
பணியினி லுரியர்தன் பால ரென்பது
துணிவுறச் சிவபிரா னிருக்கைச் சுற்றெலாங்
கணக்கணங் கலுலிற் றென்பவே.

சிம்புளா மெனையடு மினைய செம்மலென்
செம்பொன்மா முடிமிசைச் சிவணப் பாலனென்
றும்பரார்க் கரியரி யுணர்த்தி ருலெணப்
பைம்பொன்மா லரியணை பயின்ற தாயிடை.

கவரிக ளெள்ளின கால்செய் வட்டமங்
கிவர்தரு குளிர்வளி யெழுப்பி நின்றன
வவிரிழை வெள்ளைக ளாலித் தோங்கின
வுவவுவெண் மதிக்குடை யுயர்த்தப் பட்டவே.

வயம்படு சாரதர் மழையு நாணுற
வியம்பின ரியம்பல வினிய பாடினர்
நயம்படு கின்னரர் நார தாதியர்
பயம்படு வீணையிற் பண்ணி யக்கினர்.

தழங்கிய கிண்கிணித் தளிர்மென் சீறடிப்
பழங்கண்மெல் லிடையினர் பண்பி னாடினர்
வழங்கினர் வானவர் மதுச்செய் பூமழை
முழங்கின வடியவர் மொழிந்த தோத்திரம்.

நாரணர் நான்முகர் நாக ராதியோர்
தாரணி மலரடி சார்ந்து போற்றறக்
காரண காரியங் கடந்த கண்ணுதற்
பூரண ருமையொடும் பொற்ப வைகினர்.

புருகூ தன்விரிஞ் சன்மலர்க்
கண்ணோன் முனிவோ ரெவருங் கனவின்
வண்ணு வெனவேத் திவரங் கள்பல
வெண்ணு வவைகொண் டனரே கினரே.

இவ்வா றெவரும் பணியக் கருணை
செவ்வே திகழ்கின் றதினத் தொருநாட்
கைவா ரணமைந் தரொடுங் கலவி
யொவ்வா விளையா டலுவந் தனரே.

அயின்முற் றியகு லமணிந் தவர்தாம்
வெயின்முற் றியவே லர்விநா யகரிற்
பயின்முற் றினரா டுபதந் தனது
செயிர்முற் றுறுசெவ் வியெனக் கருதா.

வாரற் கவெனச் சிலர்வாய் தலயற்
றீரக் கடியுஞ் சிலர்கோ யிலகஞ்
சாரக் கடிதே தழுவுந் தலைமைச்
சூரற் படையான் றெழுதீ துசொல்வான்.

பண்ணவர்க் கரியாய் போற்றி பத்தருக் கெளியாய் போற்றி
தண்ணிய மதியும் பாம்புந் தரித்தரு டலைவா போற்றி
கண்ணிய வடியா ருள்ளக் கருத்தினை முடிப்பாய் போற்றி
புண்ணிய முதலே போற்றி பூரணப் பொருளே போற்றி.

இரந்தவர் வறிய ராகா தியாவையு மெளிதி னெய்தச்
சுரந்தருள் கொழிக்கு முக்கட் சுந்தர மகவி னென்னைப்
புரந்தருள் புனித வொன்று புகற்சியின் விழைதல் வேட்டேன்
வரந்தரு பகவ யாதே யதுவெனின் வகுப்பக் கேண்மோ.

மாதொடு மடிகள் சால மகிழ்ந்துறை தலங்க டம்முண்
மேதகு தலத்தி னோடு விளங்கிமே லாகுந் தீர்த்த
மூதருள் கொழித்து மேலா மூர்த்தியு மொருங்கு வாய்ந்த
தீதறு வரைப்பொன் றீங்குத் திருவுளம் பற்றல் வேண்டும்.

அன்னது மின்று காறு மகிலத்தி லொருவர் மாட்டு
மன்னவ வருளிச் செய்யா மந்தண முடைய தாகுந்

## புராணவரலாற்றுப்படலம்.

தன்மைய தாதல் வேண்டுந் தலைவவென் றிரந்து மீட்டு
நன்னய மொழிக ளார்த்தி நகைமல ரடியிற் றாழ்ந்தான்.

ஆயதோர் செவ்வி நோக்கி யகிலமீன் றெடுத்த தாயும்
பாயமே கலைக ளார்ப்பப் பாதநூ புரங்க ளேங்கத்
தூயமென் மலர்ப்பூங் கோதைச் சுரும்பெழ வெழுந்து வல்லே
நாயக னடியிற் றாழ்ந்து நகுமுகத் தினிது கூறும்.

சகத்துறு பொருள்க ளெல்லாந் தன்வய மாத லன்றிச்
சகத்தொரு பொருளின் மாட்டுந் தான்வய மாத லில்லென்
றகத்தினெவ் வெவருந் தேற வழல்விட மெடுத்து மாந்திப்
புகர்க்கறைக் கண்ட னான பூரண புராண போற்றி.

வியப்பொடு படைத்துக் காத்து விளிக்குமூ வருக்கெவ் வாறு
செயப்படு பொருளாய் நிற்குஞ் செறிந்தபல் லுலக மவ்வா
றயிர்ப்பிலத் தேவர் தாமுஞ் செயப்படு பொருள்க ளாகப்
பெயர்ப்பொரு ளாயே யென்று நின்றருள் பெரும போற்றி.

காலமுற் றுறுதி நோக்கிக் கணிதமி லுயிர்கட் கெல்லாஞ்
சாலமுற் றியதே கத்தைத் தவிர்த்திடு காலன் மாட்டுங்
காலமுற் றுறுதி நோக்கிக் காயத்தி னொழித்தாட் கொள்கை
சாலமுற் றெரித்து நின்ற தற்பரம் பொருளே போற்றி.

கங்கை கொழிப்பச் செஞ்சடிலங் கதிர்க்கு முடியெம் பெருமானே
யங்க ணுலகம் பெரிதுய்ய வருள்சேர் நந்தி வினையபொரு
ளிங்க ணறித லடியேனு மினிது விழைந்தே னிதுவன்றித்
திங்க ளணிந்தோ யோரையந் திகழ்ந்த துளத்தி லதுகேண்மோ.

பரந்த வுலகம் படைத்தளித்துப் பாற்று வானு மொருநீயே
சுரந்த வன்பின் முனிவரர்கள் சுரர்கண் முதலோ ரெவ்வெவரு
மரந்தை யறுக்கும் வேள்விமுத லனைத்தி னானும் வழிபட்டு
வரந்தந் தருளு கெனவிரக்கும் வள்ளன் மையனு மொருநீயே.

ஆற்றுந் தருமந் தமக்கியைய வகில வுயிர்க்கும் வேட்டபயன்
போற்றி யவனே யவளதுவே யெனமூன் றாகிப் புணர்விக்குந்
தேற்றப் பொருளு மொருநீயே தெள்ளித் தெளிந்தோர் சிந்தைமல
மாற்றி வளர்பே ரின்பநலம் வழங்கு முதலு மொருநீயே.

மண்ணாய் மண்ணி னோரைந்தாய் வழங்கும் புனலா யதினான்காய்க்
கண்ணு ரழலா யதின்மூன்றாய்க் காலாய்க் காலி னோரிரண்டாய்
விண்ணாய் விண்ணி னொன்றாகி வேட்டோர் வேட்ட பலனாகி
நண்ணு ருயிரா யுயிர்க்குயிராய் நலக்கு மிறையு மொருநீயே.

அருவா யுருவா யருவுருவா யவைமூன் றனையு மகன்றறிவே
யுருவா யனாதி வினையிரண்டு மொழியா மலமுங் கருமமு
மிருண்மா யையுமற் றிவைவிளைப்ப வீண்டுந் தனுவா
மருவா தென்று மோரியல்பின் வயங்கு பொருளு மொருநீயே.

என்று மறைகள் பலகோடி யெடுத்து முறையிட் டடிபரசும்
வென்றி மழுமான் கரத்தணிந்த விமலா நினக்கு வேறிறையு
மொன்று பயனு முளரேபோல் யோக முழக்கு மிதுவென்னே
மன்ற வெமக்கிங் கிவையிரண்டும் வழங்கல் வேண்டு மெனவிரந்தாள்.

விழைந்திரந்த மடவரலை மேதகுநந் தியைநோக்கித்
தழைந்தபெருங் கருணையினாற் றம்பிரான் முறுவலித்துக்
குழைந்தவுளத் தினிர்வேட்ட கோதில்பொரு ளருள்செய்வா
நுழைந்தவறி வொடுங்கேண்மி னெனவிதந்து நுவல்கிற்கும்.

மந்தணமாய்த் தலந்தீர்த்த மறுமையுமிம் மையும்வீடுந்
தந்தருண்மூர்த் தியுமூன்றுந் தகவுயர்ந்த வொருதான
மந்தமில்ச்சீர் சோணாட்டி னணிவளர்கா விரிக்கரையிற்
சுந்தரமா யுத்தமத்தி னுத்தமமாய்த் துலங்குமால்.

ஞானகேத் திரமென்று நலத்தகுமத் திருநகரிக்
கானதோர் பெயர்வழங்கு மறிமின்க ளினியிப்பா
லேனையோ ரரும்பொருளு மிடுகிடையா யருந்தவமத்
தானநீ யடுத்தியற்று சாற்றுதும்வந் தாங்கென்றான்.

தம்பிரா னதுகூறத் தாழ்ந்தெழுந்தங் கிருவர்களு
மெம்பிரா னெளிதுய்ந்தே மினியவற்றின் பெருமைகளு
நம்பினேங் களுக்கருள வேண்டுமென நயந்திரப்ப
வும்பரார்க் கரியபிரா னுவந்தனைத்து முரைசெய்தான்.

பொத்தனுக்கு மிதுபாத்ம மெனப்புகலும் புராணத்தின்
மத்தியினுள் ளதுநமக்கு வரன்முறையே யுரைக்கின்றாம்
வைத்தமதி யொடுகேண்மி னெனச்சூத மாதவத்தோன்
பத்தியிற்றன் குரவனடி பணிந்துளத்திற் பகர்கிற்பான்.



# ஸ்தலவிசேஷப்படலம்.

வண்டுவரி பாடமலர் விண்டுமது வூற்றுந்
தண்டலையு டுத்துவள ருந்தலவி சேடந்
தொண்டுபுரி நந்தியொடு தோகையுமை கேட்ப
வண்டர்பெரு மானமுத மென்னவருள் செய்யும்.

மன்றல்கம ழுங்குழன் மடந்தையுயர் நந்தி
யென்றுமெவ ரும்பணிய யாமினிது வைகி
யொன்றுசிவ ஞானநனி யுய்த்தருள் சிறப்பா
னின்றதது ஞானதல மென்னநில மீதே.

சிலம்புசிறு கிண்கிணி சிலம்புபத மாதே
வலம்புரி வளைக்கரனும் வாரிச மலர்க்க
னிலம்பணிய நின்றவனு நீடுபு திசைக்க
ணலம்பட விருந்தவரு நாளொடுபல் கோளும்.

ரேர் வசுக்களகதா வீசு
மருக்கரு மருந்தவரு மன்றியனை வோரு
மொருக்கிமன நோற்றன ருறைந்தனர்க ளாங்கு
விருப்பொடு மவர்க்கெதிர் விளங்கியருள் கூர்ந்து.

காமர்கதி யோடுதிரி காலமுணர் ஞான
நாமமல நீவுசிவ ஞானமிவை யெல்லாம்
யாமருள வேற்றவர்க ளின்றும்வதி கின்றார்
வாமமணி மேகலை மலர்க்குழன் மடந்தாய்.

ஆங்கவ ரிருந்துதவ மாற்றுபல தீர்த்த
மோங்கின வவற்றின்விதி யோடுபடி வோரு
மீங்குறைசெ யும்பயனை யெய்திடுக வென்றே
நீங்கரு வரங்களு நிகழ்த்தின மணங்கே.

கொங்குமலி பன்மலர்கொ ழித்தொழுகு கின்ற
கங்கையவ ளக்கடிவ ரைப்பினனி நோற்றுத்
திங்களித ழித்தெரியல் சீந்தரவும் வேய்ந்த
வங்கிநிகர் செஞ்சடை யமர்ந்தன ளணங்கே.

பூவிரி நறுந்தொடை புனைந்தகுழ லங்காய்
தாவிரிய மாதவர்க டாழுமவ் வரைப்பிற்
காவிரி தவங்கள்கடி தாற்றியுயர் கங்கை
மாவிரி நதிக்கதிக மாயவண் வழங்கும்.

வயங்குமணி மேருவரை மானத மடுத்தான்
றயங்குபுகழ் ஞானதல மீதுத்தவ மாற்றி
யியங்குசிறை யன்னமொளி ரேமவன சங்க
ணயங்கதுவி வைகுவர நண்ணியதை

வரமலியு மன்னது வரம்பிற வெழுந்து
சரயுநதி யென்றுதவழ் கின்றதது சார்ந்தோர்க்
கிரவினை யகற்றியெழி லார்கதியு நல்கு
மரவென வகன்றமணி யல்குன்மட மாதே.

வளர்தீந்தமிழ் முனிவன்வதி மலயத்திழு மெனவீழ்ந்
தளவாவர மெவரும்பெற வருடாம்பிர பன்னி
தளராதுபர் தவமாற்றுபு தாளத்தொகை தன்பா
லுளதாம்வகை வரமெய்திய தொளிர்பூணிள முலையாய்.

எழுகோமுக மலைநின்றினி திழிகோமதி நதியுங்
குழுமாமணி திரையிற்றிவள் கோதாவரி நதியும்
பழுதோடிய தவழ்சந்திர பாகைப்பெயர் நதியும்
வழுவாதெழில் வளமல்கிய வருநீர்நரு மதையும்.

சிறப்பப்புவி வலயத்தினுந் திகழுந்தர மாட்டுந்
துறக்கத்தினு முளதீர்த்தமுந் துன்னித்தவ மாற்றி
யிறப்பப்படி குநர்பாவமு மீட்டுந்தம தகமும்
பறப்பப்பல வரமுங்கொடு பயில்கின்றன வாங்கே.

மணிமல்கிய வெழுவேலையு மலர்பூந்தட வுருவாய்த்

துணிவெண்கதிர் முதலோர்பெயர் சூழுஞ்சில தீர்த்த
மணிமல்கிய பலவற்றுள மதிமேன்மையி னமரும்.

அப்புத்தல மதுவாதலி னப்பின்மய மான
வெப்பெற்றிய தீர்த்தங்களு மினிதாங்குறை கிற்குஞ்
செப்பொத்தில கும்பூண்முலை திகழ்வெண்மதி தாழ்வித்
தொப்பற்றில கியவாணுத லொளிர்பூங்கொடி யனையாய்.

மறந்திகழ் வேல்பொரு மதர்த்த வாட்கணாய்
சிறந்தவத் தலத்துமுன் செய்த நன்மையாற்

பிறந்தவர் வதிந்தவர் பெருகி னூர்க்குநோ
யிறந்திடு மறுபிறப் பில்லை யில்லையே. 16

பாவமும் பாவங்கள் பண்ணு வோர்களு
மேவிய வாசைமிக் குடைய வீணருங்
காவள ரத்தலங் கலக்க வல்லரோ
வோவியம் வழிபடு முருவின் மங்கையே. 17

மறைகளின் முடிக்குமெட் டாத வாய்மையி
னிறைதரு மத்தல நெடுகு கூந்தலாய்
முறையுளித் தவம்புரி முனிவர் யோகியர்க்
குறைதரு மிருக்கையா யொளிர்வ தாகுமால். 18

சுடரும்வெண் ணீற்றொடு தூய கண்மணி
யுடலின ரஞ்செழுத் தோது நாவினர்
படாருச் சனைமுதற் பண்ணு வோர்க்குமத்
தடவிய வளம்பதி தான மாகுமால். 19

பயந்தரு ஞானமா பதியி னல்லதை
யுயர்ந்தன வெனப்படா வுயர்ந்த மேருவும்
வயந்திகழ் கயிலைமந் தரமுங் காசியு
நயந்தகே தாரமு நறிய தாரினாய். 20

மந்திர மாகுமால் வசனம் யாவையுஞ்
சிந்தனை யாவையுஞ் சிறந்த நிட்டையா
மந்தினின் றிடுதல்சென் றிடுத லாதிக
ளுந்திய யோகத்தி னுறுப்ப தாகுமே. 21

உண்டலு மூட்டலு முவந்து வீசலு
மண்டின ரேற்றலு மற்று மாயிடைத்
தண்டலி லாச்சிவ தரும மாமரோ
வொண்டளிர் கவற்றிய வுரவச் செங்கையாய். 22

அறுசுவைநால் வகையுண்டி பிறதலத்தி லான்றவரை யமைய வூட்டி
யுறுபயனெண் மடங்காங்கு வதிகின்றான் புற்கையுண வுண்டா னேனும்
பெறுவனெனிற் பிறனொருவற் கூட்டிவரும் பெரும்பயன்றான் பேசற் பாற்றே
கொறுகொறுத்துக் கூரிலைவேற் குலத்தொடமர் புரிந்தழக்குங் குவளைக் கண்ணாய்

புரந்தரனு யளகையர்தம் பெருமானு யுலகமெலாம் புரக்கும் வேந்தாய்
வரந்திகழ விருப்பதினு மேலான ஞானதலம் வதிந்து நாளு
மரந்தைதபுஞ் சிவயோகத் தவர்மனையிற் பயிக்கநுழைந் தமைத லன்றும்
பரந்தெழுந்து குவிந்திணைந்த பயோதரத்தி னிடுகுமிடைப் பசும்பொற் பாவாய்.24

காமருகற் பகநாட்டி னமுதநுகர்ந் தரம்பையர்தங் கலவி யாற்றி
யேமுறநன் றிருப்பதினும் பிறதலத்திற் போகமெலா மிசைய வாழ்ந்து
தேமருவி யிருப்பதினு ஞானதலத் துபவாசஞ் செய்தோர் வைகற்
றுமருவி யிருப்பதினுஞ் சுகமதிக மாயிருக்குஞ் சயிலப் பாவாய்.

மண்டுபெரும் பாதகங்கள் வைகலும்வை கலும்புரிந்து வழுவி னோரும்
பண்டுபுரி நல்வினையாற் பகர்ஞான க்ஷேத்திரத்துப் படர்ந்து வாழின்
பிண்டமல மாயைகன்மம் வேரோடும் விடைகொள்ள வீடு சேர்வார்
கண்டுநறுங் கனியமுதுங் கலந்தனைய தீங்கிளவி கதித்த வாயாய்.

பஞ்சுநொடித் தெண்ணெய்விற்றுப் பவளவாய்ச் சிறுவர்தமைப் பகர்த்திட் டேழ
மெஞ்சியமற் றிருதொழில்கள் புரிந்தேனு ஞானதலத் திருப்பி னன்னோர்
விஞ்சியநாற் பெரும்பொருளும் பெறுவரெனி னேனையர்சீர் விளம்பற் பாற்றோ
கஞ்சமலர்க் கண்ணமர ரிருவரையும் பயந்தளிக்குங் கருணை மாதே.

வன்றிவலம் புரிதோகை ஞமலியென்று கழுதைவா யசங்க ளென்று
கொன்றுதசை தின்றுழலும் புலையரென்று வெவரேனுங் கோல மார்ந்த
வென்றிபுனை ஞானதலத் திருப்பரெனின் விண்ணவருண் மேலாய் வாழ்வர்
கன்றெறிந்து கனியுகுத்தோன் சகோதரியென் றுலகியம்புங் கடிப்பூங் கோதா

இளமையுஞ்செல் வமுமுடலு நிலையாவென் றறிந்தவர்க ளிளமை யாதி
யுளபொழுதே ஞானதலத் துறைந்துமகிழ்ந் தறமாதி யுகப்ப வீட்டிக்
கொளுவரல தயற்பதியிற் குறுகுதுமென் றெருஞான்றுங் குறிப்பர் கொல்லோ
வளமலிபங் கயமாதர் விளக்கரந்தை வரப்பதைக்கு மலர்ப்பூந் தாளாய்.

கணிகையர்கா தலினுகை பொருளீட்டுங் காரணத்தா னுக வெவ்வே
றணிவளரும் விநோதமுதற் பொருட்டாக ஞானதலத் தமரி னன்னோர்
துணிவுடைய தவந்தான முதலான வினைசூழ்த லெற்றுக் கீர்ந்தண்
மணிவடங்கள் கிடந்துறிஞ மதர்த்தெழுந்து புளகரும்பும் வனசக் கொங்காய்.

வழிநடையி னோரிரவு வைகினுமன் னவர்துறக்கம் வைகி வாழ்வார்
கழிமகிழ்வின் ஞானதல மெதிர்நோக்கி வணங்கினுங்கை தொழினு மன்னோர்க
கழிவுசெய வரும்வினைக ளெதிர்நோக்கி யடிவணங்கி யங்கை கூப்புங்
குழிவிழுந்த வுயிரிடத்துங் குருடொழிய வுடன்கலந்து குலவு நங்காய்.

ஓதியுண ரந்தணரா யிரர்தமக்குப் பிறதலத்தி னுவந்த நூலி
னீதிதவ றுதருத்தும் பயனுற்றி யிரட்டியந்த நிகரி லூரிற்
காதலொடு மொருகவள நாய்க்கிடுவோர் பெறுவரெனிற் கரிசற் றோர்க்கங்
காதரவி னொருபிடிசோ றளிப்பவர்தம் பெருமையெவ ரளப்பர் மானே.

கந்தமலி பொழில்புடைசூழ் ஞானதலத் தெல்லையினைக் கடவா ராயி
னெந்தவிழி குலத்தவரே யாயினுமற் றவர்வாழு மில்லி னெல்லைச்

சந்தமணி குலவுமுலைத் தாமரையாள் கடவாது தங்கி வாழு
மைந்துமலி கிரவுஞ்ச வரைதுளைத்தோன் றனையுயிர்த்து வளர்த்த மின்னே. 33

தவந்தான விரதமக மாச்சிரம வொழுக்கமுதற் றரும மெல்லா
மவந்தீர வுணர்ந்தவர்கண் ஞானதலத் திருந்தாற்றி யமைவ ரல்லா
லுவந்தேனைத் தலத்தினிடை யுஞற்றுதுமென் றேமறந்து முன்னல் செய்யார்
நிவந்தோங்கும் பொலங்குவட்டி னிமையவரை யுயிர்த்தெடுத்த நிறைபூங்கொம்பே.

தவமாதி புரிகுநர்க்கு வேட்டநாற் பெரும்பயனுந் தாழா தீயு
முவமான மறுஞ்சித்தி யெட்டினையும் விரைந்தளிக்கு மும்பர் வைப்பி
னவமான போகங்க ளளிதருளும் வீடுதவு நலத்த தந்தச்
சிவமாரு ஞானதல மலதுலகின் வேறில்லை செய்ய வாயாய்.

மூர்க்கனுய்ப் பிறந்திடுக்கண் புரிந்துழலு மறிவில்லா மூட னாக
பார்க்குண்மேம் படுஞான தலத்தென்றும் வதிந்திருக்கும் பண்ப னாயி
னோர்த்தபூ ணிளமுலையா யெமக்கினிய னவனஃ தெவ்வா றென்னி
லார்த்தநீர்க் கடல்விடமு மம்புலியுஞ் சான்றாக வறிந்து கொள்ளே.

தலத்தினுயர் ஞானதலத் திருக்கைமுடி யாதயலே சார்ந்தோர் தாமுங்
குலத்தினுயர் மறையவரைப் பெரியவரை யடியவரைக் கோல மார
நலத்தினுய ருறையுளிழைத் திருத்தினரேற் றும்வதிந்து நண்ணும் பேற்றை
நிலத்தினுயர்ந் தவர்வியப்பப் பெறுவர்நெடுஞ் செவிமடுக்கு நீலக் கண்ணாய். 37

சம்புகே சுரமென்றுங் கெசாரணிய தலமென்றுஞ் சாற்று வார்க
ளும்பரார் தொழுஞான தலத்தினையிப் பெயர்மூன்று முமையே சால
நம்பிமா தவராதி மலமிரண்டு நீக்கிநவி லெழுத்து மூன்றிற்
பம்புமேன் மையவாகிப் பயனவையுங் கொடுப்பனவாம் பன்னு வோர்க்கே.

பக்குவமே சிவதரும மலபரிபா கம்பிறந்து பதிந்து சத்தி
தொக்கவினை சமமான வுயிர்க்கலது சுத்தபஞ்சாக் கரத்தைச் சொல்லார்
மைக்கருங்க ணுமைமாதே வகுத்தபெய ரவர்மாட்டும் வழங்கப் பட்டுத்
தக்கசிவ ஞானமளித் துயர்வீடு புகுவிக்குந் தகைய வாகும்.

பத்தியினாற் பெயர்மூன்று மொருமுறைசொன் னாலுமிடர் பாவம் பொய்கண்
மெத்தியநோய் முதலான வாட்டமெலாம் விடைகொள்ளும் விண்ணோர் சூழ
வெத்தகைய போகவித மெனைத்துமெதி ரேகிற்கு மென்று லந்த
வுத்தமமாம் பெயரையெவ ருரையாதா ருலகமெலா முயிர்த்த பெண்ணே.

மேதகைய பயன்விழைவோர் ஞானதலத் துறைகவது மேவா தாயி
னோதுகவத் தலப்பெயரை யாங்கதுவு முற்றாதே லுரைப்பக் கேட்க
காதலொடு கேட்டவரு மூவகைய பாதகமுங் கடந்து மேலாம்
போதமுணர்ந் தெமதடியிற் புக்கிருப்ப ரிஃதுண்மை பொலங்கொம் பன்னாய். 4

அஞ்ஞான விருளோட மெய்ஞ்ஞான பானுவெழுந் தடைந்தோர்க் கெல்லா
நெஞ்சான மலர்க்கமல நெகிழ்த்தவிழ்க்கு மத்தலத்தி னிகரில் வாய்மை
யெஞ்சாது விரித்துரைப்பக் காலமில்லை யினித்தீர்த்தத் தியல்பு சொற்று
மஞ்சாரு மலர்க்குழல்வா ணுதற்கருங்கண் வெண்முறுவல் வளைக்கை மானே.



# தீர்த்தவிசேஷப்படலம்.

முல்லைநகர் முறுவலினாய் முழங்குபுகழ் ஞானதலத்
தெல்லையெல்லா மலங்கரித்தா லெனவிளங்கா நின்றனவாற்
கல்லெனவார் திரையினவாய்க் கமழ்நறும்பன் மலரணிந்து
மல்லன்மணிச் செழும்படிகண் மருங்கடுத்த தீர்த்தமெலாம்.

திங்களெனக் குளிர்ந்தன்பர் சிந்தையெனத் தெளிந்திரப்பிற்
றங்கினவ ரெனமேன்மை தழீஇக்கரும்பி னிரதமெனப்
பொங்குசுவை யுடையினவாய்ப் புவனமொரு மூன்றினுக்கு
மங்கலமெல் லாந்தருவ வயங்கியவத் தீர்த்தங்கள்.

ஒண்டொடியா யுத்தரத்துக் குத்தரநே ருரைப்பவர்போற்
றண்டரள மணிவரன்றித் தடங்கரையிற் றவழ்ந்துலவும்
வெண்டரங்க மொலிபரப்ப விகங்ககுல மெதிரொலித்துக்
கண்டவர்கள் வியப்பெய்தக் கவின்வளர்ப்ப தீர்த்தங்கள்.

கயல்விருப்பி னோதிமமுங் கம்புளுநே மிக்குருகும்
பயில்வனவெண் டிரையலைப்பப் பட்டுமொழி விலமன்னோ
மயல்வளருஞ் சிற்றின்ப வாஞ்சையினா விடரலைத்துஞ்
செயல்வளரு மில்லறத்திற் றீராத்திண் ணியர்போல.

வரந்தருமெம் மொடுமெதிரா மர்புடைமா னதசரசிற்
பரம்பியநீ வீர்களெம்பாற் பயின்றிருத்த லடாதென்ன
வரம்புபுரிந் தலைப்பனபோ லலையலைக்கு மோதிமமு
நிரம்பியபே னமுமயங்கி நிற்பனநீர் நிலைதோறும்.

மாதிரத்தெண் கடகளிறு மல்கியதீர்த் தம்படிந்து
போதலைத்துத் துளைக்கரத்துப் புனல்வாங்கித் துளித்தேகுஞ்
சீதளத்த வெக்கர்களுந் தேவருளந் திறைவாங்கும்
காதரமிக் குயிர்க்கிரியக் கடைக்கணிக்கு மடக்கொடியே.

தேங்குநறும் புனற்றீர்த்தத் தீரமெலாம் பன்மலரி
னோங்கியநந் தனவனமு முந்திடமெங் கணுந்தவங்கள்
பாங்குபெற விழைக்குநரும் பரயோகம் பயிற்றுநரும்
வீங்கருளி னவர்பணிகள் விளைக்குநரு முளரென்றும்.

இத்தகைய தீர்த்தத்துள் யாதொன்றிற் றோய்ந்தெழினு
மெத்தியபண் டைப்பவத்தின் விளைத்தபெரும் பாதகமும்
வைத்தடர்ந்த விப்பவத்திற் பாதகமும் பறிபோகக்
கொத்தினறு மலர்க்குழலாய் குலத்தொடும்வேட் டனபெறுவர்.

பிரமக் கொலைச்சாயை மறலும் பிரம ராக்கதமுந்
துண்ணென் றுடற்றும் பெரும்பூதத் தொடக்குந் துட்ட தெய்வதமுஞ்
கண்ணின் றுறுத்து மந்திரத்திற் காது மணங்கு மிவையெல்லாம்
பண்ணின் மொழியா யொருதீர்த்தம் பாற்றும் பாற்றும் படிந்தோர்க்கே.

குட்டந் தொழுநோய் முயலகநோய் குன்மஞ் சூலை வாதநோய்
கட்ட முறுத்துங் காசநோய் கண்ணோய் தலைநோய் சுரம்விக்கு
ளொட்டுங் கிரந்தி நோயாதி யொழிக்குந் தீர்த்த மொவ்வொன்றே
மட்டு விரிந்த நறுந்தொடையல் வருடச் சிவக்குந் தடந்தோளாய். 1

மறையோர் கொலைமன் னவர்கொலையே வணிகர் கொலைசூத் திரர்கொலையே
நிறைநீர்க் கேளிர் தந்தைதாய் நீடுங் துணைசூற் பசுநன்றி
பறையார் வீர ரிவர்கொலையும் பாவ வினையும் பிறவினையும்
பிறைநேர் நுதலா யொருதீர்த்தம் பெயர்க்கும் பெயர்க்கும் பெயர்க்குமே. 1

ஈன்றாள் புதல்வி யுடன்பிறந்தா ளெழிலார் குரவன் மனைமெய்மை
யான்றார் மனையே யனையரில்லத் தணங்கை யிழிந்த மாதர்தமை
மான்று தரவிற் புணர்வினையும் வரையா நாளிற் புணர்வினையுஞ்
சான்றோர் வணங்கு மடக்கொடியே சாடுஞ் சாடு மொருதீர்த்தம்.

வறுமை யகற்று மனக்கவலை மாற்றும் பகையைப் புறங்கொடுக்குஞ்
சிறுமை துறக்கும் பழிதொலைக்குஞ் சிந்தை மயக்கஞ் சிதைவிக்கு
முருகு மடத்தின் வலிமுருக்கு முதிர்ந்த காம முதலாறு
மறுதி பயக்கு மாநேருக் கலம்பு மணிமே கலைக்கிளியே.

ஒழுக்க மறிவு தவந்தான முறவு சீல முபசாரம்
வழுக்கில் கருணை யாசாரம் வாய்மை வணக்கம் வந்த
லழுக்கி லன்பு துறவடக்க மழுக்கா றுமை முதலறங்கண்
முழுக்க வருளு முழுகுநர்க்கு முழுவெண் டிங்கண் முகத்தினாய்.

நிரம்பு கல்வி பெருஞ்செல்வி நீடு மாயுள் வலியூக்கம்
பரம்பு சூழ்ச்சி கலங்காமை பனுவல் வழியே பொருளீட்டல்
வரம்பி லீகை புகழாக்கன் மலிய நுகர்த லிவையெல்லாங்
குரம்பு மலியு மொருதீர்த்தங் குடைந்தோர்க் கெய்துங் கோற்றொடியே.

உயிரொன் றிரண்டு வடிவெடுத்தாங் குவக்கும் பெருங்கா தலின்முழுகிக்
கயில்வண் கழற்கா லாடவருங் கமழ்பூந் தெரியன் மடவாரும்

# தீர்த்தவிசேஷப்படலம்.

பயிலும் படியிற் றுறக்கத்திற் படர்பே ரின்ப நலநுகர்வர்
செயிர்முற் றிரிக்கு மொருதீர்த்தஞ் சென்று படியிற் றேமொழியே.

அறிவு வளரும் புத்திரரு மவர்தம் வழியிற் புத்திரருஞ்
செறிவ ரெழுமுப் பவத்தோர்க்குந் தீரா நரகின் சிறைநீங்கு
நெறியி னவர்தங் குலமுலகி னீடு வாழும் பிதிர்த்தேவ
ரெறிவர் பரிவை யொருதீர்த்த மெய்தி யொருவ ராடுறினே.

தேசார்மணி கரைமேலெறி திரைவார்தரு தீர்த்த
மாசாரமொ டன்பான்முறை யாடுந்தவ ரல்லா
லேசார்தரு மாசுசமு மெரிவெங்கதிர் வெப்பு
மாசானது மொழியப்படி வாரும்பய னுறுவார்.

வழுக்கிக்கரை புனல்வீழினும் வாரிப்பரு கிடினு
மொழுக்கத்தெழு திரைவீசிய வுறைமெய்த்தலை யுறினு
மழுக்கற்றிடு தீர்த்தந்துளி யநிலங்குளிர் செயினு
முழுக்கக்கரி சொழியக்கதி முற்றுங்கனி வாயாய்.

தீர்த்தத்தெழில் விழிநோக்கினர் தீர்த்தத்திசை கேட்டோர்
தீர்த்தத்துறை மீனுதிக டீர்த்தம்வளர் தாரு
தீர்த்தம்விளை நெல்லாதிக ளவைதேர்குரு கினமுந்
தீர்த்துக்கரி சுயர்வாரிது திண்ணஞ்சிறு நுதலாய்.

இவ்வாறுயர் தீர்த்தத்தரு கெய்தித்தவ மாதி
செவ்வாய்மைய புரியிற்றிகழ் தானம்பல செய்யி
னவ்வானருள் பிதிரர்க்குள மமையக்கட னுற்றிற்
றுவ்வாவமிழ் தனையாய்பயன் சொல்லின்முடி யாதால்.

இன்ன வாறி யம்பு மெம்பி ரானை யேந்து கொங்கையா
ளன்ன ரோகை நண்ணி நாத வென்று போற்றி யோதுவாண்
முன்ன ரெண்ணி லாத தீர்த்த மொய்த்த வற்றுண் மேலவாய்
மன்னி நின்ற சில்ல வென்று வாய்ம லர்த்தி யண்ணலே.

அனைய தீர்த்த நாம மாடி ஞோர்க ளாடு நூல்விதி
வினைக ணீங்க வாடு கால மேவு மந்தி ரம்பய
னினைவு றுத பாலர் தேவ ரீய நின்ற தானமு
நினைவி ஞேடொ ழுதை தேவ நீயு ரைத்தல் வேண்டுமே.

நின்னை யன்றி வேறு தீர்த்த நீடு மேன்மை யுள்ளவா
றன்னை யன்னை யாவர் கூறு மாற்றல் வல்ல ராதலான்
மன்ன யானி ரந்து ளேனெ னக்க சிந்து வாஞ்சையிற்
பின்ன ரும்வ ணங்கி நீள்கை பின்னி வாய்பு தைத்தனள்.

முப்பு ரம்பொ டித்த மேரு மூரி வார்சிலைக்கையான்
மைப்ப டிந்த கண்ணி யுள்ள வாஞ்சை நோக்கி மாதரா
யொப்பி லாத தீர்த்த மேன்மை யோரு மூக்க மிக்குளாய்
செப்பு கேம னைத்து மென்று செய்ய வாய்ம லர்த்தினன்.

காமரு பிரம தீர்த்தமிந் திரபுட் கரணியே சம்புபுட் கரணி
தேமலி யிராம தீர்த்தமே சீமத் தீர்த்தமே யக்கினி தீர்த்த
மாமகத் தியநற் றீர்த்தமே சோம தீர்த்தமே யலரியின் றீர்த்தம்
வாமமே கலையாய் மேலவாந் தீர்த்த மருவிய பெயரிவை காண்டி.

வரியளி முரல மதுமடை யுடைக்கும் வாரிதழ்த் தாமரைப் பொகுட்டு
விரியணைத் தவிசின் வீற்றிருந் துலக மேதகப் படைக்குநான் முகத்தோ
னுரிமையின் வாழு முன்னொரு கற்பத் தொருமக ளழகுறப் படைத்தா
னரிபரந் தொழுகி யகன்றெழுந் தோடி யம்பலைத் தமர்த்தவாள் விழியாய்.

கொண்டனீர் முகந்து மேக்கெழுந் தாங்குக் குலவிய கூந்தலு மருகே
மண்டுகார் சாபம் வாங்கிய தென்ன மாமையிற் சிறந்தவா ணுதலுங்
கண்டகா ருமிழ்ந்த மின்னென நுடங்குங் கைபிடி கவற்றுநூ லிடையு
மண்டநா டதிர்க்கு மதன்முழக் கனைய வாடக நூபுரத் தொலியும்.

சுரந்துசூழ் மேக மழைபொழிந் தனைய துலங்கிய பேரெழில் வனப்பும்
பரந்தகா ரடுப்பக் கோபமே காந்தள் பனிமுகை முல்லையுந் தோன்றி
நிரந்தவா றனைய சேயித ழங்கை நிலவொளி முறுவலுங் காட்டி
வரந்தரா நின்ற வணங்கென வெதிரே நின்றனண் மகளெனு மாது.

மழைமுகி லடிப்பச் சாதகக் குருகு வாஞ்சையிற் றுளிமடுத் தாங்குத்
தழைதரு காதல் பிடர்பிடித் துந்தத் தாமரைத் தவிசினோன் றழுவி
விழைதகு காமந் துய்த்தன னங்கே மேதகு படைப்பயர்ந் திழிந்தான்
குழைதகு நரைமூப் பிடையறு மாயுள் கொண்டன ரன்னவன் படைத்தோர்.

ஆயதோர் தவறு நோக்கியுள் வெருவி யருந்தவத் தாலெமை யடுத்தான்
பாயமே கலையா யாங்கவற் கிரங்கிப் பரந்தபே ருலகெலாம் போற்று
மேயசீ ரெழுத்தோ ரைந்தையுங் கிளந்து விடுத்தனம் விடைகொடு நடந்து
தூயனும் பொருட்டு ஞானகேத்திரத்தைத் துன்னினன் சதுமுகத்தோன்றல்.

ஞான பூமியி னல்வள நோக்கிந யந்தனன்
பேன வார்திரை பின்னிய தீர்த்தமெல் லாம்பிரிந்
தான காதல கத்தெழ வொன்றனை யண்ணினு
னீன மோடவி திப்படி யாடியெ ழுந்தனன். 3

நீறு மெய்யினி ரம்பவ ணிந்துநி ரப்பெலா
நாறு கண்மணி மாலைம னுக்கணு வன்றணிந்

தேறு மஞ்செழுத் தவ்வழி வைகின னெண்ணினன்
மாறு கொண்டெழு மைம்பொறி யின்வலி வாட்டினன்.

ஆங்கு வைகிய சங்கர நாதவ ருட்குறி
பாங்கி னுதர வால்வழி பாடுப யிற்றினன்
வீங்கு மென்முலைப் புத்திரி தன்னைவி ழைந்துறுந்
தீர்ந்தசி ருட்டியு மெய்தினன் மாதராய்.

வரநி லாவிய வத்தகு தீர்த்தமண் ணேடுவிண்
பிரம தீர்த்தமெ னப்பட நின்றது பெய்வளாய்
விரவு புத்திரி யாதியர் தம்மைவி ழைந்துறும்
பரவு பாவமெல் லாம்படிந் தார்க்குப்ப றக்குமே.

மருத்த கற்பக வானக, ரருத்தி யோடர சாள்பவன்
விருத்தி ரப்பெயர் மேவிய, வொருத்த னுயி ருண்டனன்.

பிரம சாயை பிடித்தலைத், துான ழித்தவி றெய்யெனப்
பரவு ஞானப் பதிக்கணே, விரவு மன்பொடு மேயினன்.

தணிவி லாதநஞ் சந்நிதி, நணிய மேற்றிசை நண்ணினு
னணியி ருந்ததோ ராவியி, னணியு வந்ததி ழுடினன்.

அன்ன தீர்த்தத் தகன்கரை, மன்னி நம்வழி பாடுக
ணன்ன ராற்றி நயந்துத, னின்ன லோப்பி யெழுந்தனன்.

இன்ப மாரிமை யார்பதி, முன்பு போன்முறை செய்தனன்
பொன்பி றங்கிய பூண்முலை, மின்பி றங்குவி ளங்கிழாய்.

ஏர்த்த வத்தட மிந்திர, தீர்த்த மாயது தேமொழி
யார்த்த வைம்பெரும் பாவமும், பார்த்து ளார்க்கும்ப றக்குமே.

தாவிலருந் தவத்துயர்ந்த சம்புமுனி யென்றொருவன்
பாவுறுநஞ் சந்நிதிக்குப் பாவகன்மா திரத்தெழிலார்
பூவலர்ந்த வொருதீர்த்தம் புகுந்தாடிக் கடனியற்றி
யேவனைய விழிமடவா யெழுத்தைந்து மினிதெண்ணி.

சங்கரநா தப்பெயரிற் றழைக்குமெம தருட்குறியிற்
பொங்கியகா தலிற்பூசை புரிந்துலகெ லாம்விரவித்
தங்குமெம தியற்கையினைத் தலைப்பட்டா னுதலினு
லங்கதற்குப் பெயர்சம்பு தீர்த்தமென்று யதுமாதே.

தத்துதிரை மணிதெறிப்பத் தடங்கரையிற் குருகிரியு
மத்தகுதீர்த் தம்படிந்தோர்க் கடற்பெரும்பா தகந்துமியப்

புத்தியொடு முத்தியிவை புணர்கிற்கும் புனைவேய்த்தோட்
கத்திரிகைப் பெருஞ்செவிப்பூங் கத்திகைமென் குழற்கொடியே.

இராவணனை யுயிர்மாட்டி யெழிற்சீதை யொடுமீண்ட
வராவணையிற் கிடந்தவனே யருட்பெருஞ்சந் நிதிமேல்பால்
விராவுமலர்த் தடமொன்றின் விழைந்தாடி யதன்கரைமே
னிராமயமா நீலவிண்டு நாதர்தமை நிருமித்தான்.

எழில்வளரு மத்தீர்த்த மிராமதீர்த் தப்பெயர்பூண்
டொழிவில்கொலைப் பாதகங்க ளொழிவிக்கு மற்றதனிற்
கழிமகிழ்வின் வீடணனுங் கரிசிரியத் தோய்ந்தெமது
செழுமலர்த்தாள் பூசித்துச் சென்றிலங்கை யரசாண்டான்.

அற்றாற்றும் விழிப்புனன்மெய் யடியர்தொழுங் கோயிலினுண்
முற்றாற்றி னினிதாகி முதிர்சுவைத்தாய் நமக்கருகே

வெற்றாற்று மணிவடங்க ளிலகியபூ ணிளமுலையாய்.

நீங்கரிதா மத்தீர்த்த நின்றலே யினியுலகிற்
றேங்குபுகழ் திசைவிளங்கச் சீமத்தீர்த் தப்பெயரி
ேனுங்குமத னீராடு முறுதவர்க்குக் கனங்குழையாய்
வீங்குபய னினைத்தென்ன விதிப்பரிதாம் விண்ணவர்க்கும்.

தேவர்க டமக்கெல்லாந் திருமுக மெனநின்ற
பாவகன் முன்னொருநாட் பனிப்புனற் கிறைவன்ற
னாவியி னனையாண்மெய் யழகணங் குறத்தப்பட்
டோவிய நிறையினனு யுறுநல னுகர்வுற்றான்.

பிறன்மனை விழைவுற்ற பெருகிய பாவத்தால்
விறன்மலி தருசொன்ன வீரிய மதுவீழ்ந்திட்
டுறுவலி தேசோடு மொழிதலி னதுநோக்கி
வெறுவிய வுளத்தோடும் விரைந்தன னங்கெய்தி.

திகழுநஞ் சந்நிதிக்குத் தென்கிழக் கெல்லையிடைப்
புகழ்மலி யொருதீர்த்தம் பொற்பொடு மெதிர்நோக்கி
யகமலி யுவகையனு யடுத்ததிற் படிவுற்று
முகையவிழ் மலர்கொண்டு முறையுளிப் பூசித்தான்.

அன்னவன் வழிபாட்டுக் ககத்திடை யருள்சுரந்து
மின்னிடை நாமூர்த்த வீரியம் வலிதேசு
நன்னலம் வரம்யாவு நல்கின மவைபெற்று
முன்னின னமரர்க்கு முன்புபோ லவியுய்த்தான்.

மிக்கொளி திகழுங்கி விண்ணவன் வரம்பெறலா
லக்கினி தீர்த்தமென வாகிய தத்தீர்த்தந்
தக்கதொர் விதியாற்றிற் சார்ந்தநி ஞடுநர்க்குத்
தொக்கதொர் பிறனில்லந் தோய்வினை முழுதோடும். 53

ஆக்கையின் வலியில்லார்க் காக்கையின் வலியெய்துந்
தேக்கிய தேசில்லார் தேசமிக் குளராவர்
பாக்கிய மில்லார்கள் பாக்கியத் துயர்வார்கள்
வீக்கிய வத்தீர்த்தம் விதியுளித் தோய்தரினே. 54

இமைய மால்வரை யேந்த லெமக்குனே
யமைவில் காதலி னங்கிமு னீத்துழி
யுமைந லாயிமை யாரொடங் கெய்தலிற்
சமனி லாதுவ டாதுமண் டாழ்ந்ததே. 55

ஆய காலை யகத்தியன் றன்னைநாக்
கூவி யிந்தக் குவலய நேர்பெறத்
தூய மாமல யத்தினைத் துன்னுகென்
றேவி ஞமது கேட்டவ னேந்திழாய். 56

நினக்கு நேரிலை நின்னொடு நேர்பெற
லெனக்கெவ் வாறியை யும்மென வேண்டினன்
றனக்கு ஞான தலத்திடைப் பூசைசெய்
தெனக்கு நேர்பெறு கென்றனந் தையலாய். 57

நன்று நன்றென் நற்றவன் முழ்ந்தெழுந்
தன்று சென்றருண் ஞான தலத்துநம்
மொன்று சந்நிதிக் குத்தர திக்கிடை
மன்றன் மல்குமோர் வாவிகண் டண்மினன். 58

நறும லர்ப்புன னன்று படிந்தெழுந், துறுதி யாலெம தொள்ளிய பூசனை
நிறுவி யெம்மை நிகர்த்து வரங்கொடு, குறுகி னன்மல யக்குறு மாதவன். 59

அறைையு மத்தகு தீர்த்தத்தி னுடினோர், பறைய வல்வினை பற்பல மேன்மையு
நிறைவர் கல்வியு நீடிய வாயுளுங், குறைவி லாதகு ணங்களு மெய்துவார். 60

அந்த வாவிக் கெதிரே யணிமையி, னிந்தி ராதிய ரேத்தநின் சந்நிதிச்
சுந்த ரத்தின் விளங்குமச் சூட்சியைப், பிந்து காணுதி பெய்வளைத் தோளினாய்.

தக்க னூர்பெறுந் தையன் மார்களுட், டொக்க நாளெனுந் தோகை மார்களை
மிக்க காதலின் வேட்ட சோமன்மற், றொக்க நோக்கிலா னுரோணி சார்பினன்.

தவற தாகலாற் சாப மெய்தினு, னிவறு தண்கலை யிறப்ப நோக்கினன்
கவலை பூண்டுளான் கடுக வவ்வயி, னுவகை யெய்துவா ரோடி நண்ணினன். 63

பரவி விண்ணவர் பணியு நம்முடை, விரவு சந்நிதி மேற்றி சைக்கணே
யரவ வல்குலா யற்பு தத்ததாய்ப், புரவு செய்வதோர் பொய்கை யண்ணினன். 64

தீர்த்த மாடினன் றீர்த்தக் கோட்டிடை, யார்த்த வங்கியி னரிது நோற்றனன்
பார்த்து நாமவன் பரிவு தீர்தர, வீர்த்து ளாங்கடுஞ் சாபத் தின்னலே. 65

அன்று தொட்டவ னமர ராதியோர்க், கொன்று மோகைமிக் குறுத்தித் தால
துன்று கின்றனன் சோம தீர்த்தமென், றென்று மத்தட மிலகி நின்றதே.

நீடு மத்தட நிறைந்த வன்பினு, லாடி னூர்கய ரோக மாதிகள்
வீட மண்ணிடை மிக்க செல்வராய்க், கூடி விண்ணினுங் குலவி வாழ்வரே.

மாயவ னெமதருள் வாய்ப்ப மேலினி, நாயகி தன்னைநா டகஞ்செய் விப்பனு
லாயவக் காரணத் தாலச் சூழுமன், சேயிழாய் சீரங்க மெனச்சி றக்குமே.

பாயிருள் பருகுபு பகலைக் கான்றெழூஉங்
காயெரிக் கதிரவன் காம ரத்தல
மேயின னெமதுசந் நிதியின் மேற்றிசைத்
தூயதோர் தீர்த்தத்தைத் துன்னித் தோய்ந்தனன்.

மலர்பல கொண்டெமை வழிபட் டேத்தினு
னுலகெலாம் விளக்குறு மொளிபெற் றோங்கினன்
கலதியில் கருமக்குக் கரியு மாயினு
னிலவெனச் சிவந்தொளி ரிதழ்ச்செவ் வாயினய்.

சீரிய வப்பெருந் தீர்த்த மண்ணிடைச்
சூரிய தீர்த்தமாய்த் துலங்கி நின்றதவ்
வேரிய மலர்த்தடம் விழைந்து தோய்ந்தவர்
காரிய மனைத்தையுங் கைக்கொள் வாரரோ.

நவமணி தீர்த்தமு நாடி யாடினோர்
தவமறு பயனிவை சாற்றி னுமினிக்
குவவின பூண்முலைக் கோற்றொ டிக்கையா
யிவருற வேனவு மியம்பு வாமரோ.

உ

# ஸ்நானவிதிப்படலம்.

தளவ வாணகைத் தையல்கேள் சாடுரோ யாதி
யளவி லாதபல் லரிட்டங்க ளனுங்கவு மாதர்
வளமை யாதிவீ டிறுதிய வரங்கண்மல் குறவு
முளம ரீஇயின ராடுக தீர்த்தமொன் பதுமே.

முந்து மந்தண ராதியர் மூவர்க்குங் கதியி
னுந்து மந்திரத் தாடுத லுறுவது பின்னோர்
கந்த மென்குழற் காரிகை யாரிவர்க் குலகந்
தந்த சுந்தரி தந்திர மாத்திரை யேயாம்.

தகர வார்குழற் கனங்குழைத் தரளவா ணகையாய்
மகர மாமதிப் பூரணை வைகறை யெழுந்து
புகரி லாதநாட் கடனெலாம் பொலிவுற முடித்து
நிகரி லாதநஞ் சந்நிதி நேர்பெற வடுத்து.

முன்னர் மண்டப மத்தியின் முப்பது கோட்ட
மன்னு வித்தவற் றொன்பது மண்ணுமேழ் தளிரு
நன்ன ரைந்துகவ் வியங்களு நவதிர வியமுஞ்
சொன்ன முப்பது மொரோவொன்று துன்னிட வைத்தல்.

அரசு கூவிளந் துழாய்புளி யால்சம்பு மூலம்
புரசை மால்கரிக் கூடமும் புரவிமந் திரமுங்
கரிசி லானிரைத் தொழுவமுங் கல்விநூல் விதியின்
வரிசை யாலெடுத் திடப்படு மண்களொன் பதுமே.

தளிர்து ழாய்புளி சம்புகூ விளம்வட மரசு
விளரி லாவறு கென்பன விளம்புகவ் வியங்க
ளளவில் சீர்தரு மங்கலா யறிகபா றயிர்நெய்
வளரி லாவிய கோசல மயமிவை யாகும்.

சிறுகு காருடற் றிலநெய்கோ தூமந்தீங் கட்டி
மறுவி லாச்சிவ லிங்கநெல் வத்திரஞ் செம்பொன்
முறுகு பேரொளி யாதன மெனமொழிந் தவைதா
முறுதி யாளர்க டானமென் றுதவுமொன் பொருள்கள்.

# திருவானைக்காப்புராணம்.

கோட்டம் வைத்திடு முப்பது பொருளையுங் கொலைவே
லோட்டு மைக்கணுய் சந்தன மலர்புகை யொளியா
ஞட்டு மஞ்செழுத் துரைத்துநற் பூசனை நவிற்றி
வாட்ட மின்றிவெவ் வேறபி மந்திரித் ததன்பின்.

ஒற்றை வெண்மருப் பிருசெவி மூன்றுக ணல்வாய்க்
கொற்ற வைங்கர மாறுகொண் டெழுகுல மதமும்
பெற்ற பிள்ளையை யெட்டுமன் பாற்பெரி திறைஞ்சி
யற்ற மின்றியிக் காரிய மாக்கெனப் பராவி.

விழைந்த வன்பினுற் சங்கற்பம் விதியுளிச் செய்து
குழைந்த நெஞ்சொடுங் கொடுப்பவ னேற்பவன் கொடுக்குந்
தழைந்த வொன்பது பொருள்களுந் தக்கநற் பயனு
நுழைந்து நின்றருள் சிவமலா விலையென நுதலி.

சோர்வி லொன்பது பொருளையுந் தூய்மைய வாக்கி
யார்வ மல்குநீ ராடுறும் விதிநிறை வாகத்
தீர்வி லாப்பெருங் கருணையான் முடிப்பவன் சிலம்பை
வார்வி லாக்கிய வள்ளலே யெனப்பராய் வணங்கி.

மண்டு முப்பது பொருளும்வெவ் வேறுதம் மலர்க்கைக்
கொண்டு சென்றரா வணையினுன் கொழுத்தவெங் நெலும்பின்
றண்ட மங்கையிற் கொண்டரு டலைவன்வார் சரணம்
வண்டு துன்றிய மலர்கடூய் வந்தனை புரிந்து.

பாழி வையகத் துயிர்க்கெலாம் பயமுள மலைப்பக்
கேழி லையமேற் றுழிதருங் கெழுதகை யினரே
யூழி யங்கியி னிறங்கிள ருருவுடை யவரே
வாழி நல்லருள் வயிரவ ரேயுமைப் பணிந்தேன்.

அடிய னேன்சிவ தீர்த்தங்க ளாடுவான் புகுந்தேன்
படியி லாப்பெருங் கருணையா லருள்பணித் திடுகென்
றுடிவி லாவிடை பெற்றவன் சந்நிதி யொழிந்து
முடிவி லாற்றலங் கியின்றிசை முந்துறக் குறுகி.

பிரம தீர்த்தத்தின் கரைவளர் பிரசமா மரத்தை
விரவு காதலின் வணங்கிமென் கரத்தினுற் றொட்டுப்
பரவு தீநெறி பாறமுன் னருந்தவம் பயின்ற
பிரம னுகிய விருடியைப் பேணியுண் ணினைந்து.

நங்கை சங்கர நாததே வரைநம வந்தந்
தங்க வங்கையின் மாலையிற் றழைதர வெண்ணி

# ஸ்நானவிதிப்படலம்.

யங்க ணுள்ளவ ரஞ்செவி யினும்புக வந்தப்
பொங்கு நல்லருண் மந்திரம் பொருக்கெனக் கிளர்ந்து.

பெருகு மத்தடங் காத்திடும் பெருங்கண நாதன்
பொருவில் சீர்த்திய னாகிய புட்பதந் தனையுள்
ளுருகு மன்பினால் வணங்கியொண் புனலரை யளவு
மருவ வுள்ளுற விறங்கிமண் ணினையெதிர் நோக்கி.

பாவ நோய்முத லரிட்டமெல் லாநனி பாற
மேவ நன்றியை விளைக்கென வியந்துப சரித்துத்
தாவி லாதவம் மண்ணினைத் தனுவினிற் றிமிர்ந்து
காவி நேர்விழி யாய்புனல் படிந்தது கழுவி.

கூறு மானுடை யைந்தையுங் கோசல முதலா
வேறு வேறற வாடிவீங் கிரும்புன லாடி
மாறி லாதவேழ் தளிரினும் வார்புன லேய்த்திட்
டேறு மாமனு மூலத்திற் புரோக்கண மியற்றி.

வார்ந்த தண்கரை யிவர்ந்துநீர் வடிவினிற் புலர்த்தித்
தேர்ந்து தேவர்க ளிருடியர் தென்புலத் தவர்க்கு
நேர்ந்த நீர்க்கடன் விதியுளி நெடுங்காத் தியற்றிச்
சார்ந்த தென்புலத் தவர்க்குளந் தழைதரும் பொருட்டு.

எண்ணில் பாவமு மிறக்குமிவ் வெள்ளிருங் கொடையா
லண்ண லாகிய சிவன்மகிழ் வடைந்துபே ராயுண்
மண்ணி லேயெனக் களித்திடக் கடவனு மென்று
திண்ண மாகிய பத்தியாற் றிலக்கொடை வழங்கல்.

அறிவ ளம்பெற வின்னண மாடுறும் விதியே
மதிவ ளந்தரு மேனைவண் டீர்த்தமா டுதற்கும்
விதியெ னப்படு மரமுனி காவலர் விண்ணோர்
கதிசெய் தான மந் திரங்கள்வெவ் வேறவை கரைவாம்.

இந்திர தீர்த்தப் பாங்க ரெழுந்தொளிர் மரந்தெங் காகு
மிந்திர னிருடி முக்க ணிறைசிவன் றேவன் காவ
றந்திடும் பாலன் கும்போ தரன்சதுர் வேதம் வல்ல
வந்தணர்க் காவி னெய்யை யளிக்கதக் கனையி ன்றேடும்.

கைம்மலை யுரித்த மேருக் கார்முகக் கடகச் செங்கைச்
செம்மல்வீ ரியமா யந்தச் சிவனுக்கு மகிழ்ச்சி செய்யு
மிம்மண நெய்த்தா னத்தா லின்புறக் கடவ னுகு
மைம்முகப் பெருமா னென்ன வறைதன்மந் திரமா கும்மே.

சம்புதீர்த் தத்தின் பாஙகர்ச் சமபுயர் மரமவ நிடடன
வம்பறு மிருடி தேவன் மயேச்சுரன் றீர்த்தப் பாலர்
நம்புறு சுனந்தர் தான நலத்தகு பொருள்கோ தூமம்
பம்புவே தாந்தி யேற்கும் பாத்திர மாவன் மாதே.

இனியதாய்த் தேவர்க் கெல்லா மின்புறு முணவு தாகி
நனிவளர் பாவ முற்று நலியுமிக் கோதூ மத்தான்
முனிதரு மலங்கண் மூன்று முருக்குபூ தேச் னை
புனிதனுண் மகிழ்க வென்று புகறன்மந் திரம தாகும்.

இராமதீர்த் தத்தின் பாங்க ரிருப்பைநன் மரமி ராமன்
பராவுறு மிருடி நீல வீச்சுரன் பகருந் தேவன்
விராவுறு தீர்த்தப் பாலன் வீரபத் திரன்றீங் கட்டி
யுராவிய பிரம வித்தா யுயர்மறை யவனுக் கீதல்.

சுவையதாய் விமலன் பத்திச் சுவைமிகக் கொடுப்ப தாமிந்
நவையறு கரும்பின் கட்டி நல்குறுந் தானத் தாலே
தவறறுத் தின்ப நல்குஞ் சங்கர னெக்கா லத்து
முவகைய னாக வென்ன வுரைத்தன்மந் திரம தாகும்.

சீமத்தீர்த் தத்தின் பாங்கர்ச் செழுமர நாவல் காற்கிய
நாமத்தா னிருடி தேவ னவிலமு தேசன் பாலன்
றேமிற்றீர் சுதந்தன் மேன்மை தொகுஞ்சிவ லிங்கந் தன்னைக்
காமுற்று தரவு நம்பாற் கலந்தவர்க் களித்த றானம்.

நின்மலன் சால வைகு நிலையமா யுலக மெல்லாந்
தன்மய மாக நிற்குந் தக்கவிச் சிவலிங் கத்தா
லன்மலி கண்ட னேகை யகத்தின னாகி முத்தி
நன்மையை யளிக்க வென்ன நவிற்றன்மந் திரமா கும்மே.

அக்கினி தீர்த்தப் பாங்கர் மரம்புளி யிருடி யங்கி

றக்கசீர்க் கருபன் பாலன் சாலியை வறிய னை
பொக்கமில் சுற்றஞ் சூழ்ந்த பூசுரற் களித்த றானம்.

வையக மாந்தர்க் கெல்லாம் வளர்பசி தாகம் போக்கி
மெய்யுறு மாற்ற லாதி விளைத்துவிண் ணவர்கட் கெல்லாம்
பொய்யறு முணவா யின்பம் பொருந்துமிந் நெற்று னத்தா
லையமு தேச னேகை யடைகவென் பதும னுத்தான்.

அகத்திய தீர்த்தப் பாங்க ரணிநிழல் வருக்கைத் தாரு
வகத்திய னிருடி தெய்வ மகிலாண்ட வல்லி யென்னச்

சகத்தவர் பழிச்சு நீயே சுருததி தக்க பாலன்
மிகக்கலை வல்லா னேற்ப வெண்கலை வீச ருணம்

தேவர்கள் விழைவ தாகிச் சீதம்வெப் பிரண்டு நீக்கி
மேவுமிக் கலைத்தா னத்தால் விண்ணமர் தேவ ரெல்லா
மோவிலின் புறுக வென்ன வுரைத்தன்மந் திரமாம் பூத்த
காவிகள் செவியி னூட்டிக் கவின்கவர் கருங்கட் பாவாய்.

சந்திர தீர்த்தப் பாங்கர்த் தழைத்தெழு மரம்புன் னைகஞ்
சந்திர னிருடி தேவன் றனுமன் னவனே பாலர்
முந்துபுட் கரனே புட்க ராக்கனே குமுதன் றூவ
ரந்தமில் வேள்வி செய்வார்க் காடக மளித்த ருணம்.

அங்கிசம் பந்த மாகி யானந்த முலகுக் கெல்லாந்
தங்குவ தாகு மிந்தத் தமனியத் தானத் தாலே
யங்கியை நுதற்க ணைக்கு மருள்வளர் சிவன்மா ராய
மிங்கண்மிக் குறுக வென்று வியம்பன்மந் திரமா கும்மே.

பரிதியின் றீர்த்தப் பாங்கர்ப் பசுமரம் வில்லந் தூய
பிருகுநல் லிருடி தெய்வம் பெருகொளி யென்றூழ் பால
னுருகெழு சுவான னூர்தி யுயர்சிவ பத்தி வல்லான்
மருவுற வாத னத்தை வழங்குத ருண மாகும்.

வரமலி தேவர் தேசின் வங்தொளி கனற்று மிந்த
வரதனத் தானந் தன்னு லமர்பிர பாக ரப்பேர்
விரவிய கதிரோ னின்ப மேவுக வென்று செப்பல்
பரவுமந் திரமாம் பண்ணைப் பழித்ததீங் குதலைச் சொல்லாய்.

தருமுதற் பேத மெல்லாந் தனித்தனி வகுத்துச் சொற்று
முருவளர் பசுங்கொம் பன்னு யொன்பது தீர்த்த மாட்டு
மருவிய விதியி னூடு மாந்தர்க ணமது கோயிற்
திருமுன ரடுத்துத் தாழ்ந்து சிந்தையை யொருக்கி நின்று.

மந்திர மாதி தம்மால் வருபிழை பொறுத்திட் டீங்கு
முந்திய நவதீர்த் தத்து முழுகிய பேறெம் பாங்கர்
மைந்துற நிரப்பு கென்ன வாஞ்சையி னிரந்து நம்மைப்
பிந்துற முக்காற் சூழ்ந்து பெருநிலத் தைங்காற் றாழ்ந்து.

ஒருசிறை யிருந்து மூல முயர்திரி யம்ப கத்தை
யிருபதைந் தடுக்கி யெட்டுத் தலைப்பெய்யெண் ணளவை யெண்ணிப்
பொருவில்பூங் கொடிநின் கோயில் புகுந்துநின் சரணம் போற்றிக்
கருதுபு நாற்காற் சூழ்ந்து காதலி னைங்காற் றாழ்ந்து.

ஆங்குமந் திரங்கள் வேட்ட வளவுநன் கியம்பல் வேண்டும்
பூங்குழன் மடந்தா யாங்குப் பொங்கிய தீர்த்த மாடும்
வீங்கிய விதிகள் சொற்று மென்றனன் விமலன் கேட்ட
மாங்குயிற் பழித்த தீஞ்சொன் மானினி யிதனைச் சொல்வாள்.

கங்கு னிகர்த்த கறைமிடற்றாய் கற்றைச் சடையாய் கயிலாயா
பங்க முறுத்து மரிட்டமெலாம் பாற்றி யிட்ட மனைத்தினையுந்
தங்க வருளு நவதீர்த்தந் தக்க ஞான தலத்திருப்பிற்
றாங்க நிரயம் பலகோடி யுயிர்க டுளையுந் துரிசென்னே.

புழுக்க ணெளியக் கறைசோரப் புண்ணைந் திழுக வுறுசீயு
மொழுக்க வுடலு நோயாதி யுலப்பி னோயாற் கொளப்படலெ
னிழுக்கம் பயின்ற வுளத்தினரா யிரந்து மையங் கிடையாமை
முழுக்கத் துயரப் பெருங்கடலின் முழுகித் திளைக்கு மிதுவென்னே.

மைந்த ரிழந்து மனையிழந்தும் வளமை யிழந்தும் பொருளிழந்து
முந்து மொளிகண் செவியிழந்து முரைநா விழந்து மெழிலிழந்துஞ்
சிந்தை தெருட்டுங் கலையிழந்துந் திண்மை யிழந்து மிவ்வாறே
யந்தி லுயிர்கள் பலகோடி யரிட்டத் தழுந்து மிதுவென்னே.

வெண்ணெ யிருப்ப நெய்க்குழலும் வீணர் போல ஞானதலத்
தெண்ணில் பெருமை தருதீர்த்த மிருப்ப வவற்றின் முழுகாதே
நண்ணற் கரிய கொடுங்கான நண்ணி யுணவா திகள்விடுத்துப்
பண்ணற் கரிய பெருந்தவங்கள் பல்லோர் பயிற்று மிதுவென்னே.

என்று பணிமால் வரையுயிர்த்த விறைவி வினவ வளர்மேருக்
குன்ற நெடுவார் சிலைக்கரத்தார் குளிர்நோக் குதவி யருள்செய்வார்
வென்ற பொறியி னந்திகவு தமன்மெய் வாய்ந்த ததீசியிவ
ரன்று சபித்தார் குழைகிழிக்கு மயில்வேல் விழியா யதனாலே.

மறையி னொழுக்கந் தவந்தானம் வாய்மை பொறையா தியதருமத்
துறைநெஞ் சிலரியா வருமவருட் சிலரே யொழுக்க முதலறத்தை
நிறைமுற் பவத்தின் பெருந்தவத்தா னிகழ்த்த லுறுகின் றார்திண்ணம்
பிறையொண் ணுதலா யிவரல்லாற் பேணார் ஞான தலதீர்த்தம்.

முன்னைத் தவத்தான் ஞானதல முறையின் வதியு நலத்தினரு
நன்னர்த் திருத்த மாடுநரு நம்மை யாங்கு வணங்குநரும்
பின்னர்ப் பவத்தி னுறார்பீழை யுறார்பெண் ணரசே யுரைத்தபயன்
மன்னிப் பிரியா தெமதடிக்கீழ் வாழ்வா ரிதுசத் தியமாமால்.

எழுந்து பரந்து தண்ணெனவெச் செனமிக் கோங்கி யிறுமாந்து
செழுந்தண் டரள வடமணிந்த திதலை முலையா யினித்தலமு
மழுந்து படுந்தீர்த் தமுமுயர வமரு மூர்த்தி மேன்மையினை
விழுந்து வினைக ளோட்டெடுப்ப விளங்க வெடுத்து விளம்புவாம்.

# மூர்த்திவிசேஷப்படலம்.

மாயி ரும்புவி மாந்தருக் கமரர் வான வர்க்கய னவற்கரி யரிக்குச்
சேயி லைப்படை வேலவ னவற்குத் திகழு மைங்கர னுயர்ந்தன ரவர்க்கு
நீயு யர்ந்தென வீங்கிவர் பூசை நிகழ்த்தி லிங்கங்க ளொன்றினொன் றுயர்ந்த
வாய வெவ்வகை யிலிங்கத்து மேலா மணங்கு நீபணிந் திடப்படு மிலிங்கம். 1

வல்லைவென் றொளிரு மணிமுலைக் கொடியே வையகத் திடரெலாந் துமிய
நல்லற மாதி கருதிநீ பூசை நடவிய வெமதருட் குறிகள்
பல்லவற் றுள்ளு மெவற்றினு மேலாய்ப் பரசுக வீட்டினை யருளுஞ்
சொல்லரு ஞானம் பெற்றிட நின்னாற் றொழப்படு மிலிங்கமே லாகும். 2

உத்தம குணத்தோ ரெண்ணிலர் தவங்க ளுஞற்றிமெய்ஞ் ஞானமுற் றுயர்ந்த
முத்தியை யடைந்த ஞானகேத் திரத்தின் முருகுயிர் பூங்குழ லாய்நின்
கைத்தல மலராற் றீம்புன னீராட்டிக் கவின்றரு மிலிங்கநா வலின்கீ
ழெத்தகு வரமும் வழங்குவ தாக வின்னினி யேவிளங் குறுமால். 3

ஞானமிக் களிக்குந் தீர்த்தங்க ளுடுத்து ஞானமிக் களிக்குங்கேத் திரத்தின்
ஞானமிக் களிக்கு மிலிங்கமும் பலவே நவிற்றிய வவற்றுளு மேலாம்
வானமிக் களிக்கு நின்கர மலரான் மறுவற வகுத்திடப் பட்டு
வானமிக் களிக்கு மிலிங்கமென் றுரைக்கும் வார்த்தையி னயிர்ப்பது முளதோ. 4

உலக மாட்டுவை கியவெம துள்ள வுவகை தன்னினு மொண்டொடி நின்பாற்
குலவு மோகைமிக் காயினாற் போலக் குவல யப்பெரும் பரப்பினாங் காங்கு
நிலவி வாழ்சிவ லிங்கத்தின் மாட்டு நின்று நாம்வழங் குறுமரு டனினு
மிலகு ஞானகேத் திரத்துநீ வணங்கு மிலிங்க நின்றுநாம் வழங்கருள் பெரிதாம். 5

குறங்கின் மீமிசை யிருத்தியு மெமது கோல மேனியி னொற்றுமைக் கொண்டு
னறங்கு லாவிய வாட்கணை யென்று மருவி நின்னையாம் பிரிவுறா ததுபோ
லறங்கு லாவிய ஞானகேத் திரத்தி லன்பி னீவழி படுமிலிங் கத்து
மிறங்கி யாணவ முயிர்க்கெலா மடிய வென்று நாம்பிரி யாதுவீற் றிருப்பாம். 6

அமுத மென்றதண் புனலினாற் றீரட்டி யமைக்கு மச்சிவ லிங்கமவ் வியல்பா
னமுத லிங்கமென் றுரைத்திடப் படுமங் கடுத்தி றைஞ்சினோர் நித்திய மெய்தி
யமுத ராதலி னானும் மலத்தி னழிந்து தோன்றுயி ரருளிடத் தனவா
யமுத மென்மொழி யெமையறி யறிவங் கழிவ தின்மையி னானுமப் பெயராம். 7

அனைய வாகிய மந்தண மான வரும்பெ ரும்பொருட் பெயரினை யொருகா
னினைய நாவினு லுரைக்கமுற் றுத நீடு போகமெவ் வுலகினு மில்லை
யினைய வாகிய விரிட்டங்க டம்மு ளிறுதி முற்றுமு திருப்பதொன் றில்லை
வினையெ லாந்தப முத்தியீ ரிரண்டுண் மேவு றுததுமில்லைமின் கொடியே. 8

அண்டர் கற்பகத் தலர்சொரிந் தேத்து மமுத லிங்கத்தை யன்பினு லொருகாற்
கண்ட கண்மலர் வறுமையுற் றிரங்கிக் கனகம் வேட்டொரு வரையுங்கா ணுது
மிண்டு துன்பறு மமுதலிங் கத்தின் மேத கும்பெயர் கேட்டவர் செவிகள்
கொண்ட நல்குர வினர்க்குமுன் னறிந்து கொடுப்ப தல்லது குறைசொலக் கேளா.

சோதி மல்கிய வமுதலிங் கத்தைச் சூழ்ந்து ளாரடி யிம்மையி னென்றிற்
காதல் வைத்துமற் றொருவர்தம் மாட்டுங் கதுவச் செல்லுமு மறுமைவந் தடுப்பி
னேத முற்றற மண்மிசை மீட்டு மிடப்ப டாவெதிர் கூம்பிய கரங்க
ளோத நல்கென வொருவரை யிரவா நடுங்கு மின்னென நுடங்குநுண் ணிடையாய்.

தீய வினைக ளனைத்தினையுஞ் செய்தா ரேனு ஞானதல
மேய வமுத லிங்கத்தை விழைந்து பணியப் பெறுகிற்பி
னுய வினைக ளவையெல்லா மழல்வாய்ப் பட்ட துய்யேபோன்
மாயும் வளரெண் ணுண்மதியின் வாங்கி வயங்குஞ் சிறுநுதலே.

வெறுக்கை கல்வி தவந்தானம் வெவ்வே றுன வறத்தானு
மொறுக்க முடியா வாணவமு முயிரை மயக்கு மாயைகளு
மிறுக்குங் கரும மோரிரண்டு மெல்லாம் பரிதி முன்னிருள்போ
லறுக்கு மணிசேர் ஞானதலத் தமுத லிங்க தரிசனமே.

அனகர் வதியு ஞானதலத் தமுத லிங்க மெனும்பெயராற்
சனன மரணப் பெருநோயைத் தவிர்த்து வளரு மொருமருந்தை
மனமெய் மொழிமூன் றினும்பணிவார் மாட்டுச் சிறிய நோயான
கனக முதலாம் பொருட்சார்பாற் கதுவுங் கலக்க முளதாமோ.

உறுநாள் கோளே யிராசியே யுதிக்குங் காலை மாறுகித்
தெறுநீ ரனவா யிருந்திடினுஞ் சிந்தைக் கினிய வமுதலிங்கம்
பெறுநீர் மையினல் வழிபாடு பேணு வார்க்கு மற்றவற்று
லிறுது விடையாய் தீயபய னெய்தி யடர்க்கு மாறின்றே.

ஊழி யிதுவோ வெனமேக முதக மிகுந்து பொழிந்திடினு
மூழி யிதுவோ வெனவெப்ப முடற்ற மழைகண் மாறிடினு
மூழி யிதுவோ வெனவிகல்வேந் துலக்குங் கால மடுத்திடினு
மூழி தெவன்கொல் செய்யுமென வுவப்ப ரதன்சீ ருரைப்போரே.

வரையால் வேலை கடைந்தெடுத்த மருந்து நுகர்ந்தோர் சுரராக
தரையோ ராக நித்தியத்தைச் சார்வார் விதியி னீராடி

னுரையா சூசம் வறிதுடையோ ருகப்ப வுடையோ ரிருவோரும்
புணைதீர் புனித மொப்பாகப் பொருந்து வார்க ளதுபோல.

குலமிக் குயர்ந்தோ ராயிடினுங் குலமிக் கிழிந்தோ ராயிடினு
மலமிக் குயர்ந்தோ ராயிடினு மலமிக் கிழிந்தோ ராயிடினு
நலமிக் குயர்ந்த வமுதலிங்க நண்ணித் தொழினவ் விருவோரும்
பலமிக் குயர்ந்த வொருவீட்டி ஞெப்பப் படரும் பரிசினரே.

பித்து மிகுந்த வுளத்தொருவர் பெருகு விடத்தைப் பருகுங்கால்
மெத்து சுவையின் வானமுதம் விரவப் பெறின்மற் றவர்தமக்குன்
மத்த முடனே விடவேகம் வல்லை யொழிய மணித்தரளப்
பத்தி நிகர்த்த முறுவலாய் பாழி யடுக்கு மதுபோல.

நடனம் புரியுங் கணிகையரை நாடிப் புகுந்தா னுயிடினு
மடமை யகற்று மமுதலிங்க மணியை யடியார் மனவிளக்கைப்
படர்வில் விமைக்கு மணித்தொடலை பயில்பூண் முலையாய் தொழினவர்க்குத்
தொடர்தொல் வினையு மிப்பவத்திற் சூழும் வினையுந் தொலையுமே.

பண்ணவர் சூழு மமுதலிங் கத்தைப் பணிவோமென்
றண்மைய ரேனுஞ் சேய்மைய ரேனு மகனுடிற்
றிண்ணிய பாவந் தீட்டுகணக்கைச் சிதைவிப்பான்
றுண்ணென வஞ்சிச் சித்திர குத்தன் றுரிசில்லாய்.

ஞான தலத்தி னமுதலிங் கத்தை நனிகாண
வான மனத்தோ டேழடி மண்ணிட் டனராயிற்
போன பவத்து ளேழனு ளீட்டும் புரையெல்லா
நான மளைந்த வார்குழ னங்காய் நலிவெய்தும்.

அங்குலி ளங்கு மமுதலிங் கத்தின் முடிமேலோர்
சங்கமர் தீர்த்த மாட்டின ரிக்குத் தயிர்பானெய்
கொங்கமர் தேன்பால் கோடிமி டாவே னையமூர்த்திக்
குங்கினி தாட்டு மொண்பய னுற்ற வுறுமாதே.

சம்புவின் மூலம் வைகுமி லிங்கந் தனிலங்கைப்
பைம்புன லாட்டும் பண்பின ரன்ன பயனுற்றால்
வம்புறு பாலா திகண்மிக வாட்ட வளர்வாய்மை
யும்பர் குழாத்து மார்சொல வல்லா ரொளிர்பூணாய்.

மருமல ரொன்று சம்புவின் மூல மகிழ்மூர்த்திக்
குருகிய வன்பா லீந்தவ ரொண்மா மலர்வாழ்வர்
திருவியல் சங்க மொன்று கொடுத்தோர் திகழ்செங்கைப்
பொருவறு சங்க மொன்று தரித்துப் புவிகாப்பார்.

# திருவானைக்காப்புராணம்.

மான்மத மீந்த மானைம தங்கை மாஞருகும்
பான்முத வீந்த பன்மணி யான்கோ புரமேவுங்
கான்மல ரீந்த பூமா மாதி கவிஞர்ந்த
வான்மலி வைப்புய் யானரி லாவி மகிழ்செய்யும்.

அருள்வளர் நாவன் மூலத் தமுதலிங் கத்தின் சார்புற்
றுருதின மேனு மன்பா லோங்கிய சரியை யாதிப்
பெருகிய பணிக ளைன்கும் பெட்டவர் சாலோ காதி
மருவிய முத்தி நான்கும் வல்விரைந் தடைவர் மாதோ.

அறமுத லைன்கும் வல்லே யருமையொன் ருனு மின்றி
யுறுவது வேட்டோ ரெல்லா மொலிந்தபூஞ் சாகை நாவ
னறுநிழ லிலிங்க பூசை நண்ணிய பொருள்கைக் கொண்டு
முறுகிய வன்பு பொங்க முற்றுவித் திடுக மானே.

என்றுயர் மூர்த்தி மேன்மை யியம்பலு மிறைவன் பாத
மன்றலங் கூந்தற் செவ்வாய் மலைமகள் வணங்கி நின்று
நன்றுள மகிழ்ச்சி பொங்க நாதனே யாங்கு நாவ
லொன்றுள தென்றி யன்றே யதன்வர வுரைக்க வென்ருள்.

வரையினுக் கரைய னீன்ற மலர்க்கொடி நுசுப்பி னங்கை
கரையறு காதல் பொங்கக் கைதொழு திரத்த லோடும்
புரைதபு கருணை யோடும் பூரணன் முறுவல் பூத்து
விரைகமழ் நாவல் வந்த வரவினை விளம்ப லுற்ருன்.



# சம்புமுனி தவம்புரிபடலம்.

புன்னை கூவிள நாகம் பூவை பிடாநமை சேவாண்
வன்னி தாதகி வேங்கை வகுள ஞெமையரை பாங்கர்ச்
கன்னி காரமந் தாரங் கடுக்கை தமாலங்கச் சோலை
முன்னம் வாகைவெட் பாலை முருக்கு வருக்கைப லாசு.

சந்து காரகில் போதி சண்பக மால்வரை யாமா
சிந்து வாரம சோகஞ் செருந்தி திமிசு திலகங்
கந்தி நாளிகே ரங்கள் கடம்பெகி னில்ல மடம்பு
குந்தங் கூதள மாச்சா குங்கும மேழிலம் பாலை.

முருகு நரந்தங் குறிஞ்சி முந்திரி கைப்பழச் சோலை
மருது தடாவழை யோமை மாதளை ஞாழன்ம தூகம்
பொருவறு மின்னம ரங்கள் பொலிதரு ஞானத லத்தின்
மருவ விடைக்க ணெழுந்து வைகுமோர் நாவலங் கானம்.

வளர்ந்து வண்டுசு லாவ மலர்ந்தொளிர் நாவலங் கானத்
தளர்ந்து தேவருங் காணா வரும்பெரு வீட்டினை வேட்டோன்
றளர்ந்து சாய்ந்தம லத்தான் சம்பு முனியெனுந் தக்கோ
னுளந்த னைதுவ யத்தி னொழுக்கி யருந்தவ முற்றான்.

நீறுத ரித்துக் கண்மணி பூண்டு நிமிர்சென்னி
யேறிய வேணி தாழ்புவி வீழ விருந்தெம்மை
வேறற நாடி மெய்த்தவ மாற்று மவன்முன்னே
வீறுயர் வெண்ணா வற்கனி யொன்று வீழ்ந்தன்றே.

பண்டறி யாத திப்பிய மான பழமுன்னே
கண்டன னவா கண்ணொடு நெஞ்சங் கவர்தேசு
மண்டிய சீர்மைத் தூறுசு வைத்து மற்றியாங்
கொண்டயி லாத கொள்கைய தென்று குறிக்கொண்டான்.

அற்புத மெய்தி யப்பழ மங்கைத் தலைய
பொற்பம ரிந்த வெற்பினை நண்ணிப் புகழ்பாடிச்
சிற்பர வீது திருவருள் வைத்து நுகர்கென்ன
விற்புரு வத்தாய் நங்கர மீந்தான் வினைவெல்வான்.

வீங்கு தீஞ்சுவை யப்பழ முண்டுவி ளங்கிழாய்
பாங்கு மிழ்ந்தனம் வித்திலை யன்னது பார்த்துளத்
தோங்கு மன்பினு வந்துகைக் கொண்டொளிர் மூரலிற்
ருங்கு ருதும டுத்துவி ழுங்கினன் ருபதன்.

வினையி னீங்கிய மெய்த்தவற் கீந்தவி ழுப்பொரு
டினையி னீள்பனை யாய்வள ருஞ்செய றேற்றியாங்
கனைய மாதவன் பாழிவ யிற்றின மர்ந்தது
நினையு முன்முளை யாகியெ ழுந்துநி வந்ததே.

சம்பு மாமுனி யாற்றுத வம்வளர்ந் தாலென
வம்பி னீடுவெண் ணாவல வன்சிரம் வாய்திறந்
தும்பர் நாடுநி ழற்றியு லவையெண் மாதிரம்
பம்ப வார்தளி ரீன்றும லர்ந்துப சந்ததே.

அண்ட மீரடி யாலளந் தானக னாணுற
வண்ட நாடுகண் முற்றும டங்கவ ளர்ந்துமே
லண்ட முட்டியங் கேபெருங் காவல் வயிரவ
வண்ட னுங்களி கூர வவன்மெய்தை வந்ததே.

சுரும்பு கிள்ளைகள் பூவைகு யில்பசுந் தோகைக
ளிரும்பு றவினங் கின்னர மாதியி சைப்பன
விரும்பு கற்பக மெய்துத ருக்கைவி ளித்துமென்
றரும்பு நாவலெ திர்ந்தறை கூவிய தொக்குமே.

மேக்கெ ழுந்துகு ரங்கியி ணர்த்தமென் சாகையிற்
றூக்க ணங்குரு வித்திர டுன்னுகு டம்பைக
டேக்கு சீர்த்திவி ராட்புரு டன்றிரு மேனியி
னீக்க மின்மயிர் தொறம ரண்டநி கர்க்குமே.

நமது வாயின னைந்தவித் தேநவை நீங்கிய
நிமிர்பெ ருந்தவன் மெய்யின்மு ளைத்தரு ணீடலாற்
பமர மொய்க்குமப் பாதவ நீழல்ப ரப்பவா
ழமர ராதிய ருந்தவ மாற்றுந ராயினர்.

பல்ல வங்கை தொடினு நிழலிற் பயிலினு
மெல்லென் மாமலர் நாறினு நேர்விழி நோக்கினு
நல்ல பேர்செவி கேட்பினு நன்கனி யுண்ணினு
மல்லல் யாவு மறுமுறு நல்லன யாவுமே.

உரைசெய்மா மறைகண் மூலமாய்ப் பராரை யுபநிட தப்பொரு ளாகிக்
கரையுமா கமங்கள் பணைகளாய்ச் சரியை கிரியையோ கங்கிளை வளார்கள்

# சம்புமுனிதவம்புரிபடலம்.

விரைகுலா மிணராய் ஞானமோ ரைந்து மெல்லரும் பலர்கள்காய் கனிகள்
புரையிலாக் கனியி னிரதமா யுயிரின் புகர்மலந் தூக்குமந் நாவல்.

எழுந்தவெண் ணுவலி னீட்ட நோக்கிய
கொழுந்தவ முனிவரர் குணலை யிட்டனர்
செழுந்திருக் கடவுளர் மலர்கள் சிந்தினார்
பொழிந்தன மதுமழை பூம ரங்களும்.

சம்புமா முனிவனத் தகைமை நோக்கினன்
பம்புபே ரோகையம் பரவை மூழ்கியிவ்
வம்புநா வலினிழன் மாத வத்தினுக்
கிம்பர்மேம் பட்டதென் றெண்ணி னோற்றனன்.

அருந்தவ மன்னவ னுற்று மெல்லையி
லிருந்தவ முனிவர ரிமைப்பி லார்களும்
பெருங்கண நாதரும் பேணி யங்கிழ
லொருங்கிருந் தருந்தவ முஞற்றி வாழ்ந்தனர்.

இன்னணஞ் சிலபக லிறந்த பாணியி
னன்னணந் தவம்புரி யறவன் வந்துநம்
முன்னுற வணங்கியிம் மூரி மாநிழன்

ஆங்கவற் கிரங்கிநா மருப்புக் கொங்கையா
யாங்குமுன் கனிவிழுந் தெடுத்தி யாங்குநீ
யோங்கிருந் தவம்புரிந் துறைதி யவ்வயிற்
பாங்குற வதிகுதும் படர்க வென்றனம்.

கோட்டமி லெமதருள் கொண்டு திக்கெலாந்
தீட்டிய புகழினன் சிறந்த தேசெலா
நாட்டிய ஞானகேத் திரத்தை நண்ணிய
வீட்டிய வன்புளத் தெழுந்திட் டானரோ.

பாயிரும் புவியிடைப் படர்ந்து செல்வுழிச்
சேயிடை நோக்கினர் தேம லர்ச்சினை
மீயுயர் மரநடை மேவிற் றென்னென
வாயின ரையமற் புதமு மேயினர்.

அடுத்து நோக்கிய மாந்தர்க ளங்கையா திகளுந்
தொடுத்த தேத்தடைச் சினைகளுந் துன்னுமிப் பிறவி
யெடுத்த வேழ்வகைத் தோற்றத்து மில்லைமற் றிதுவு
முடுத்த தோலினன் றிருவினை யாட்டென வுவந்தார்.

அடங்கி நோற்றவச் சம்புமா முனிவனே யல்லா
லுடங்கு சூழ்ந்துசென் முனிவரு முருப்பவிர் வெப்ப
மடக்கு ருதவெய் யவன்வெயின் மாற்றினர் நல்லோர்
தொடங்கு மாநலஞ் சூழ்ந்தவர் தாமுமெய் தாரோ.

அண்டர் போற்றிட நாமினி துறைந்திடு மரும்பெருந் தலநேர்ந்த
கண்டு போற்றுபு மென்மெல நடந்துபோய்க் காவிரி வடபாங்கர்க்
கொண்ட ஞானகேத் திரத்தினைக் குறுகிமுன் கொழுங்கனி வீழெல்லை
மண்டு காதலி னெதிர்தொழு தடுத்தனன் மாதவர்க் கேறன்ஞன்.

பரிதி வானவ னுருப்பெழுந் துடற்றிரு பருவத்து மழனின்றுங்
கருவி மாமழை யெழுந்துநீர் பொழிதரு கார்முத லியநான்கு
முருவ வார்திரைப் புனலினு மருந்தவ முஞற்றியொண் டொடிமாதே
யிருவி ளன்றன திதயதா மரைமல ரமதடித் தலத்தம்ம.

கந்த மூலமுங் கனிகளுஞ் சருகுநீர் காலுமுண் டவைநீக்கி
யந்தி ஞேற்றிருக் கின்றன னவன்விழி யடுத்தவர் தமைக்காணு
வுந்து தேமலர்த் தென்றன்மேற் றைவுர ஆறுட லறியாது
நந்து மோனைகள் செவியுறு நாற்றங்க ணுசிமோ வாதன்றே.

பெருகு மன்புட னின்னண மருந்தவம் பேணிமா தவன்வைக
மருவி முன்னரே தவம்புரி தாமரை மலரினன் முனிச்சென்னி
யுருவி நின்றவெண் ணுவலு மருந்தவ முஞற்றுமா தவன்மாண்புங்
கருதி விம்மித மெய்தின னளவளாய்க் கலந்துட னிருக்கின்றன்.

ஆரு யிர்த்தொகை யிருண்மலங் கழீஇயெம தடிமலர் நிழற்சேக்கச்
சேரு மத்தகு நாவலின் வரவிது செப்பினு மினியாங்குச்
சாரு மத்திறம் புரிதியென் றெம்பிரான் றையலுக் கருள்செய்ய
வோரு முத்தமன் குணத்துயர் நந்திதாழ்ந் தொன்றுகேட் குவனுஞன்.

திங்கள் சூடிய செஞ்சடைக் கடவுளே திருவுரு வினைநீங்கா
நங்கை பார்ப்பதி பிரிவதற் கேதுமுன் னண்ணிய துளதேயோ
விங்குக் கேட்பது வேட்டன னருளென வியம்புநந் தியைநோக்கி
யங்கி மூவெயி லுணநகை புரிந்தவ னருளினுற் கேட்பித்தான்.

சம்புமுனி தவம்புரியத் தகுஞான கேத்திரத்தி
னும்பர்தொழச் சென்றதற்பி னுலகமெலாஞ் சிற்றின்ப
வம்புநெறி யொழுகுறவிம் மாதுடனு கியநாமே
நம்புமுயிர் வீடணுக நல்யோகத் திருந்தனமால்.

இளமைபெருங் கற்பொருவ ரெதிராத வெழிலொத்த
வளமையுறு மன்பனைத்து மல்கியிடம் பிரியாத

பிளவுமதி நிகர்நுதலிப் பெண்ணரசி தனைநோக்கா
தளவினெடு நாள்யோகத் தமர்ந்திருந்த வெமைநோக்கி. 33

அள்ளிலைவேற் கணநாத ரருகிருந்தோர் பார்த்திருப்ப
வெள்ளனகை புரிந்திட்டா ளிவளதனுல் விளைகின்ற
கள்ளவினை கழுவுவான் கதங்காட்டி நமைப்பிரிந்திட்
டுள்ளமுளொந் திருத்தியென வொருசாப முறுத்தினமால். 34

வெச்சென்ற மொழிகேளா வெய்துயிர்த்து நடுநடுங்கிக்
கச்சொன்று முலைத்தலைமேற் கனல்சேர்ந்த திரிநெய்போன்
மைச்சென்ற மலர்நீல வாட்டடங்கண் புனலுறைப்பப்
பச்சென்ற வுடல்குழையப் பணிந்துமொழி குவளானுள். 35

அடியவர்செய் திங்குற்ற மாயிரமும் பொறுத்தருளும்
படியில்பெருங் கருணையனே பசுவேறும் பரமேட்டி
கடியவிழு நறுங்கொன்றைக் கண்ணியா கருநீல
விடமணிந்த கருமிடற்று விகிர்தாநின் சரண்போற்றி. 36

பேதைமையே பெருங்கிழமை யிரண்டானும் பிழைசெய்தே
னுதலினுற் பெருங்கருணை யடிகேண்மற் றடியேனை
யேதிலர்போற் புறக்கணித்திட் டிருந்துயரத் திடைமூழ்கப்
போதவிட லழகன்று பொறுத்தருளாய் பொறுத்தருளாய். 37

தண்டரளப் புனற்பொய்கை தணந்தமலர்த் தாமரைபோல்
விண்டலத்துக் கதிவழுவி வீழ்ந்தபெருங் கடவுளர்போற்
கொண்டல்பொழி மழையொழிந்த குளிர்பண்ணைப் பசும்பயிர்போ
லண்டர்தொழு மடிகளையா னகன்றிருத்த லழகேயோ. 38

உயிர்நீத்த வுடம்பென்ன வுணர்வொழிந்த வுயிரென்ன
மயிர்நீத்த மானென்ன மணிநீத்த பணியென்னப்
பயிர்நீத்த சூலென்னப் பகனீத்த தினமென்னச்
செயிர்நீத்த வடிகளையான் நீர்ந்திருத்த லழகேயோ. 39

புலனுகராப் பொறியேபோற் பூணணியா மடவார்போ
லலரணியா நீர்நிலைபோ லாயனையா மகவேபோற்
பலன்விளையா நிலமேபோற் பண்ணுகராப் பாடல்போ
னிலவுமடி களையடியே னீத்திருத்த லழகேயோ. 40

கொம்பரிலா விளங்கொடிபோற் கொழுங்கணிலாத் திருமுகம்போல்
வெம்பரசி லாப்படைபோல் விரகினரில் லாவவைபோற்
பம்புமுயிர்க் குயிராகிப் பசுபதியாய்க் கணவனுமா
மெம்பெருமா னையுமடியே னிகந்திருத்த லழகேயோ. 41

ஆற்றரிய பெருந்துயரா லலைப்புண்டிவ் வாறுரைத்துக்
கோற்றொடிக்கை மடமாது குழைந்துருகி யவசமுற
மாற்றுதிநின் னவலத்தை மாழ்கலைமாழ் கலையென்னத்
தேற்றியவண் மனக்குளிர்ப்பத் திருவருளா விதுகிளந்தாம்.

சின்னாளிங் கெமைப்பிரிந்து திகழ்ஞான கேத்திரத்தின்
மன்னுநின் றருந்தவத்தின் மனம்வைத்து நமைப்பூசை
துன்னார்வத் தொடும்புரிந்து சூழ்திரமி யாகியநீ
பின்னுமங் கருள்வழங்க வெமையாவை பேணென்றும்.

நவின்றவருண் மொழிகேளா நந்தியெனு மியற்பெயரோய்
கவன்றகவ லையிற்சிறிது கையகன்று தோத்திரங்க
ளுவன்றுபிழை யாலெழுந்த நோன்மையுறு நாணினொடுந்
துவன்றுமணி வாய்திறந்து மற்றிதுவுஞ் சொலவலித்தாள்.

தண்ணங் கமலத் தயனு கனையான் சதமா மகஞ்செய் திமையார்க் கிறையாய்
நண்ணுங் குலிசப் படையா னமரர் நவில்கிஞ் சையர்கின் னரர்கிம் புருட
ரெண்ணுங் கணநா தர்கணந் துறவோ ரெவரும் வதிவுற் றிருமைப் பயனு
மண்ணும் பெருமைத் தடிகே ளுயரிவ் வணியார் கயிலா யமலா விலையே.

அதுமாத் திரமன் றுலகத் துறைவோ ரனைவோர் களுமன் பலர்நெஞ் சினராய்த்
துதிபா டியுமா திரநோக் கியெதிர் தொழுதுந் தொலையா மையுளத் திடையே
யிதுவா லிதன்வண் ணமெனப் பதிவித் திட்டும் பயனெய் துவதும் பெருமான்
முதிர்பே ரொளிகான் றிருள்சீத் துநல மொய்க்குங் கயிலா யமலா விலையே. 4

ஒப்பா ருயர்வா ரையிலாய் வதியுற் றுயர்கின் றனவன் றுகொலெத் தலமு
மப்பே ரருளு யகனீ யொழியா தமரும் பெருமைத் துயருங் கயிலை
யிப்பூ தரம்விட் டெனைஞா னதலத் தேகென் றருள்செய் ததுமெம் பெருமான்
றப்பார் திருவுள் ளவெறுப் பெனவே சூழ்ந்தச் சமொழிந் திலதென் னுளமே. 4

அடியேன் மதியா மையிழைத் தபிழை யகலுங் கழுவா யெனமா தவமு
முடியா தநின்பூ சனையுந் தகவே முற்றும் பலநா ளுமிம்மா மலைவாய்க்
கடியா துபுரிந் தமர்வே னிதுவே கைக்கொண் டிடுமா றுகடைக் கணியென்
றொடியா தவுளத் தெழுமன் பினளா யுரைத்தாள் பனிமால் வரையுத் தமியே. 4

நந்தியின் னணமோது நாயகிக் கிதுசொற்றுஞ்
சுந்தரி கயிலாயத் தொல்வரை யிதிற்பன்னா
ணந்திய தவமெல்லா நாழிகை யொன்றதனில்
வந்திடு முயர்ஞான வைப்பிடை யதுவன்றி. 4

ஞானமு நினக்காங்கு நவிற்றிய நினைந்திட்டா
ஞானநல் குறமேனை நற்றல முளவேனு

# சம்புமுனிதவம்புரிபடலம்

ஞானவைப் பெனுநாமந் தனக்கல தில்லாத
ஞானவைப் புயர்ந்தன்று னற்பய

ஆங்குறுங் காலந்தா னணுகில ததுகாறு
மீங்குறை கெனமுன்னே யியம்பின மாங்கெய்தும்
பாங்குறு பாணியுமிப் பாணியல் லதையில்லை
தீங்கறு நந்திதெளி கென்றனன் சிவபெருமான்.

அருளிய வருடலைவைத் தருள்வளர் தருநந்தி
பெருகிய களிகூரப் பேசிய ஞானதலத்
தருவினைத் தியானித்தங் குறைந்தன னினியிப்பாற்
கருணையை நினைந்தோங்கற் காரிகை மகிழ்கூர்ந்து.

உருக்கிளர் புரமூன்று மொள்ளழற் குணவாக்கும்
வெருக்கிளர் மாமேரு வில்லின ரிடுசாப
முருக்கவு மெய்ஞ்ஞான முற்றவு மெம்பெருமான்
றிருக்கிளர் பூசனையிற் றிருவுளம் பற்றினனால்.



# அகிலாண்டநாயகியாராதனைப்படலம்.

பொன்பூத்து மணிதுறுமிப் பொங்கு மருவி பலவார்ந்து
தென்பூத்த விமையவரைச் செல்வ மடந்தை திசைவிளங்குங்
கொன்பூத்த புகழ்க்கயிலை குடிகொண் டிருந்த கொண்கனிரு
மின்பூத்த மலரடியின் விரையார் மலர்தூய்ப் பணிந்தெழுந்தாள்.

பூதேச மாதேவ புலவு நாறுஞ் சூலத்த
வாதேய வாதார மனைத்து மான நிராலம்ப
மாதேசின் வளர்ஞான வைப்பிற் கேக வொருப்பட்டே
னீதேச நலனெய்த நிகரில் விடைதந் தருளென்றாள்.

நஞ்சேந்தி யமுதளைந்து நாம வடவா முகத்தீயி
னெஞ்சாத செவ்வரிகொண் டிருநீர் பெருக்கிக் கடல்போலுந்
துஞ்சாத விழிமடவாய் தோலாச் சிறப்பி னெடுஞ்சேறி
யஞ்சாதி யவண்வருது மென்றா ரகில காரணரே.

விடையவன் றிருமுன் றாழ்ந்து விடைபெற்ற மாது கோயிற்
கடைமணி வாயி லெய்தக் கண்ணுத லேவ லாற்றா
லுடைமணிச் சுரிகை நந்தி யொய்யென முன்ன ரேகிப்
படையொடு முடன்செல் கென்றான் பாரிடத் தலைவர்க் கம்மா.

அருடலைக் கொண்டு வல்லே யருங்கண நாதர் சில்லோர்
வெருவரு தோற்றஞ் சான்ற விறற்பெருங் கணத்திற் றொக்கார்
பொருவரு மாய னாதிப் புலவர்க ளொருங்கித் தாழ்ந்தார்
வருசயை விசயை யாதித் தோழியர் மருங்கு சூழ்ந்தார்.

வாரணி முரச மார்த்த வால்வளை நரன்ற வீணைச்
சீரணி யெழாலின் பாடல் செவியெலா மினிமை செய்த
வாரண முழக்கஞ் சான்ற வடியவர் துதிகண் மாண்ட
காரணி விழியின் மாதர் கலாயெதி ராடி னார்கள்.

மாலைகால் யாத்த பிச்ச மதிக்குடை துவன்றிச் சூழக்
கோலமா ரால வட்டங் குளிர்செய்சாந் தாற்றி வாய்ந்த
பாலவா யசைத்து நிற்பப் பானிறக் கவரி துள்ளச்
சீலமார் கொடியி னீட்டஞ் சேண்வெளி முழுதுந் தூர்ப்ப.

குறுகுறு நடந்து செல்லுங் குறளொடு சிந்து முந்த
வறுவகைப் படையு மஞ்ச வாணுடை தாங்கு மாதர்
கொறுகொறுத் திடலும் வைவாள் குடங்கையி னேந்தி யொப்ப 8
விறுகிடைப் பேடி மாரு மொருபுடை யீண்டிச் சூழ.

பூவையுங் கிளியு மற்றும் பொற்புறக் கூட்டி னேந்து
மாவடு வகிர்க்கண் மாதர் சிலரொரு மருங்கு போற்றத்
தேவர்கள் சில்லோர் யூகந் திரிமருப் பிரலை மற்றுந்
தாவுறுந் தொடரி ஞேடுந் தடங்கரம் பற்றிச் சார. 9

கஞ்சுக மணிந்த தேவர் கைத்தலம் பிரம்பு தாங்கி
வெஞ்சொன்மிக் குரைத்து முன்ன மிடைசனத் திரளை நீக்க
வஞ்சலி புரிந்து சூத மாகத ருருகு நிற்ப
வெஞ்சலி லாத வேனைப் பணியினர் யாரு மீண்ட. 10

ஆணிப்பொன் னடர்மேல் வேய்ந்திட் டசும்பொளி திசைகள் போர்ப்ப
மாணிக்க நிரையு முத்தும் வயிரமுந் தூக்கி யிட்ட
வேணுற்ற விமான நண்ண விறைவனை மனத்து ளெண்ணிப்
பூணுற்ற கொங்கை யன்னை பொருக்கென விவர்ந்து சென்றாள். 11

நெறியிடை யாங்காங் குள்ள நிறைமணிக் கோயில் சார்ந்து
முறிவளர் மேனி நல்லாண் முதல்வனை வழிபா டாற்றி
யறிஞர்கள் வந்து தாழ வவரவர்க் கருளிச் சென்று
செறியொளி ஞான பூமி சேணிடைத் தோற்றக் கண்டாள். 12

மண்ணிடை யிழிந்து பாங்கி மார்கொணர்ந் தளித்த போதங்
கொண்ணிழற் கடகச் செங்கை பொய்யென வாங்கித் தூவிக்
கண்ணிறைந் திமையிற் றூங்குங் கதிர்முத்தஞ் சிந்தத் தாழ்ந்து
பண்ணிறை துதிக ளார்த்திப் பைப்பய நடந்து சென்றாள். 13

விரோதமொன் றானு மின்றி மிருகமும் பயிலா நின்ற
வரோகமே யருளு ஞான பூமியி னவதி யுள்ள
குரோசமைந் தனையுஞ் சூழ்போய்க் குறுகுவாள் கோல மார்ந்த
வரோதயப் பொன்னி நீத்த மரபுளித் தோய்ந்துள் புக்காள். 14

உடங்குறு சேனை யாங்காங் குறுவகை நிறுவிச் செல்லுந்
தடங்களு ளிரண்டு பாலுந் தவழ்தரு பொன்னி வீசு
மடங்குறுக் கதிர்செய் முத்தும் வயிரமும் பொன்னு மற்று
மிடங்கெடக் கிடந்து போக பூமியி னிமைப்பக் கண்டாள். 15

கடலுவர் பருகுந் தீமை கையகல் பாக்குச் சார்ந்து
படலைமை முகிலேறற் றன்ன பசும்பொழி லுடுத்த சூழ

விடவிய தீர்த்த மாடு மிபக்குழா மனைய மேக
மடனறத் துதித்தா லென்ன மகிழ்ச்சியின் முழங்கக் கண்டாள்.

மலையவெற் பிடையே தோன்றி மாதவ னகத்தி யன்பாற்
றொலைவறப் பழக்கஞ் சான்ற தூக்குணந் தெரிக்கு மாபோ
லலைதவழ் தீர்த்த மாடி யலர்மணங் கவர்ந்து மெல்லென்
றுலவுசெய் வருத்த நீங்கத் தென்றல்வந் துலாவக் கண்டாள்.

அகிலமு முயிர்த்த தாயே யடுத்தன ளென்னு மோகை
மிகுதலிற் பாட லாடல் விளைத்திடுந் திறமே யென்னத்
தொகுகுயில் பூவை கிள்ளை தும்பியு மிசைப்பத் தோகை
யிகவறு வனப்புத் துள்ள விடந்தொறு மாடக் கண்டாள்.

தருவுரு வாக ஞான தலத்திடைப் பிறந்தா மேனுந்
திருவினைப் பெறலா மென்று தேவரு மிறும்பூ தெய்த
மருமலர் தூவித் தாரு மதுப்புன லிறைத்துத் தெய்வ
முருகெதிர் விடுத்துத் தாழ மொய்யருள் வழங்கிக் கண்டாள்.

கங்கையீ ரைந்துந் தோற்றுங் கையினாள் கமல பாத
மிங்குநா மிணையப் பெற்று மெனமகிழ் சிறந்தா லென்னப்
பொங்கிவெண் டரங்கக் கையாற் புனல்வளர் தீர்த்த மெல்லாஞ்
சங்குயிர் முத்தந் தூவித் தாள்பணிந் தேகக் கண்டாள்.

கருப்புவில் லோடு நம்மைக் கைத்தலந் தாங்கு மன்னை
திருப்பொலி பாத நோதல் சிவணுமே யென்னப் பூவிற்
சுருப்பினங் குடைந்து வாசச் சுண்ணநுண் டாது வீழ்ப்ப
வருப்பிள முறுவல் கோட்டி யலர்விழி குளிர்ப்பக் கண்டாள்.

இருந்தருந் தவங்க ளேற்கு மிருடியர் பாவ முற்றும்
வருந்திமண் விழுந்தோட் டந்தான் மானவா னிழன்ற நாவற்
கருந்திரட் கனிகள் சிந்தி யுடைந்துகால் கொண்ட சாறு
விருந்துணச் சுரும்ப ரீட்டம் விரைந்தெழுந் தோடக் கண்டாள்.

தொடுக்குமன் புடைய காந்த ளாகிய சோம ஞேற்ற
துடுக்கண மறிந்து தாமு மொண்டவம் புரியு மாபோ
லடுக்கிய வுலகுக் கெல்லா மரும்பெரும் பொருள்க ளென்கு
கொடுக்கிய வளர்வெண் ணாவற் குரூஉக்கனி மிளிரக் கண்டாள்.

இத்தகு ஞான பூமி யிருந்தபே றினிவே றென்னே
யுத்தமி யுமையாள் காட்சி யுதவிடப் பெற்று மென்று
மெத்திய வன்பு பொங்க விரதிய ரெதிரே சென்று
கைத்தலங் கூப்பித் தாழ்ந்து கண்பனி யுறைப்பக் கண்டாள்.

இன்னபல் வளங்க ணோக்கி யெய்தியோர் தருவின் மூலந்
துன்னிநின் றடுத்த தோழிச் சுனந்தையை நோக்கி முக்கண்
மன்னனைப் பிரிந்தா மேனும் பிரிதரா மகிழ்வே பெற்றுந்
தன்னிக ரில்லா விந்தத் தலம்புகு மாண்பா லென்றாள். 25

அரதநத் தசும்பை வென்ற வருப்பிளங் கொங்கை யன்னை
வரவினை யறிந்து முன்னே வதிந்துமா தவங்க ளாற்றும்
பிரமன்வல் விரைந்து சென்று பெருகிய வன்போ டச்சம்
விரவமுன் பணிந்து பூசை விதியுளிப் புரிந்து போற்றும். 26

இருசுட ரெதிரா தெழிலியோ ரியல்பி னிராதுதண் டலைமுடி கூடா
கருமண லொழுக்கு நீவநில் லாது கதித்தசை வலம்புழு கனையா
வுருவளர் கொன்றை கமுகுமெல் லென்று வெனவிவை யொழித்தியன் மணமே
மருவிமெய் யடியார் மலவிருட் செறிவு மடிக்குநின் பூங்குழல் போற்றி. 27

கருந்துணர்க் கடுக்கைக் கண்ணியான் முடியிற் கலந்தன னமக்கெலாங் காந்தன்
முருந்தின முறுவற் றேவிபா னமக்கு முறையென முதிரொளி யுடுக்க
ளருந்தவத் திறைகொண் டிருந்தன பொரூஉநின் னணிகுழற் றாக்குநித் திலமுந்
திருந்திய முல்லைத் தெரியலுஞ் செருகுஞ் சின்னவெண் மலர்களும் போற்றி. 28

இலகொளி மணிச்செ யிலம்பகந் திருத்தி யெறிகதிர் மகரவாய் பொறித்த
திலதமே லிடத்துச் செங்கதிர் தொடர்ந்த சேயொளி யரவென நாற்றிக்
குலவம ரடுப்பிற் புறந்தரு நீர்மைக் கொடுமர நாணுற வொளிவாய்க்
துலவுறு மெண்ணாண் மதியும்வெண் ணிறமென் றொழிக்குநின் வாணுதல்போற்றி.

காமனா ருருவங் கனற்கணாற் பொடித்த கணவனார் திருவுளம் வணக்கு
நாமவா ளிகளோ ரிரண்டென மிளிர்ந்த நறுமலர் நயனமீ மிசையே
சேமவார் சிலையுஞ் செருச்செய்வார் சிலையுஞ் சேர்ந்தொருங் கிருந்தன பொரூஉநின்
னேமவார் புருவம் போற்றியிப் புருவத் தெழின்மயி ரொழுக்கமும் போற்றி. 30

மாநிலம் விளக்குஞ் சுடர்க்கொளி கொடுக்கு மகிழ்நனார் விழிச்சுடர் மூன்று
மூனமில் காத லுளத்தெழ வணக்கி யொளிர்தரு வதனமா மதியந்
தானழ கெறிப்ப மணந்தவுற் பலமோ தண்ணமிழ் துணவுட னடுத்த
வீனமில் சகோரத் துணைகளோ வென்ன விருந்தநின் கண்மலர் போற்றி. 31

கண்ணளி யடுத்து நன்னிறம் வாய்ந்து கதிருமிழ் மணியணி யணிந்து
தண்ணென வியற்கை நறுமண முயிர்த்துத் தழைந்துவா டாதுசண் பகத்தை
யெண்ணறு மலரைக் குமிழினைக் காம ரூபியை யிகல்கெடப் பொருது
வண்ணவார் கொடியின் வயங்குநின் னாசி வளரொளித் திருவெழில் போற்றி. 32

இந்திர கோபங் காரொடு மொழிய விருங்கிடை நீரொடுங் கழியச்
செந்துவ ருவர்நீர்க் கடலொடு மறுகச் செம்மல ரிலவொடு முருக்கு

நந்திய ஞான்றே நலனறத் தொண்டை நறுங்கனி தூங்கிநின் றழிய
வந்தமி லமிழ்தம் பொதிந்தொளி துளும்பி யணிகிளர் வாயிதழ் போற்றி. 33

செய்யதா மரைதண் பனிக்குமுற் றழிந்துந் திங்கண்முன் றிகழ்நல மொழிந்து
மையளாங் கண்ணி யொருத்தியைச் சுமந்து மன்னுமுட் டாளதாய் நின்றும்
பொய்யதாய்க் கழியக் குமுதமு மென்றூழ்ப் புலவன்மு னெழுநலஞ் சாம்ப
மெய்யவாம் பொருள்கள் விளைத்தருள் கொழிக்கும் விமலநின் செய்யவாய் போற்றி

முருந்திளஞ் சாயற் குடைந்தமஞ் ஞையதாய் முளைத்ததன் னுடன்பிரி யாமற்
றிருந்துருக் காட்டாச் செயிரதா யொழியத் தெள்ளொளி நித்திலம் விலைப்பட்
டருந்திறற் காப்புற் றுட்புரை நாலுற் றலையவெண் முல்லைநெக் குடையப்
பொருந்துதண் ணமிழ்த மூற்றிருந் தொளிகால் பொழியுநின் மணிநகை போற்றி

சிறைபடு பூவை கிள்ளையு மொருவர் தேமொழி பயிற்றிடப் பயில்வ
வறைகுயி லெழுத்தி னுமொழி யறியா தருஞ்சுவை யாழ்சுதந் திரமன் [ழித்து
றுறைசெய்தேன் செழும்பா லமிழ்தமுஞ் செவியின் புறுவென விவையெலா மொ
நிறைசுவை யினதாய்த் தன்னையே நிகர்த்து நிகழுநின் குளிர்மொழி போற்றி. 36

ஒப்பறு முதல்வ னாகிய கணவ னொளிர்முகத் திருவெழி னோக்கத்
திப்பிய மாக விளங்குகண் ணடியோ சிவபிரான் றிருவுளக் கமல
மெப்பொழு தினும்பூத் தலருநீர் நிலையோ வென்னத்திகழ்ந் திருஞ்செவி யணிகள்
செப்பருஞ் சதிர்நீ ராஞ்சனம் புரியத் திருந்துநின் கவுட்டிணை போற்றி. 37

மயிரெறி கருவி தனதிழி தொழிலை மதித்துமஞ் சிகனுறை தூங்கப்
பயிலுறும் வள்ளை கொடியதாய்ப் புனலிற் படியவா ரூசனின் செவியி
னியலரு ளனநிற் சுமந்தெழுந் தாட வெழில்குலாய்க் காவிமே லணிந்து
செயிரறு மணிப்பூங் குழையொடு தோடு செறிந்தநின் செஞ்செவி போற்றி.

ஆரணங் கடந்த வருட்பெருங் கடவு ளகமெனுந் தாமரை மலரப்
பூரண வொளிமிக் கெழுதலா லிருளைப் புரட்டுசெங் கதிரவ னேயோ
காரணங் கடந்த கண்ணுதல் வதனக் கதிரவன் முனமலர் தலினுற்
சீரணி கமல மலர்கொலோ வென்னத் திகழ்ந்தநின் றிருமுகம் போற்றி.

பாளையுட் பொதிந்து திரண்டபூங் கமுகின் பாசொளிக் கண்டமோ நிலையா
கோளறு தாளங் கொழித்தொளிர் சங்கு குழகனார் திருவுள மகிழ
வாளுமென் புள்ளின் குரலொடு மமிழ்த மளவளாய் மங்கல நாளும்
வாளுமிழ் கலனு முறுவென விலக்கி வயங்குநின் கந்தரம் போற்றி.

மழலைவண் டிமிருந் தொடலைசீர் சிதைய வாரணை வாய்கடைப் புண்ண
முழவுவள் வாரின் பிணிப்பினு விரங்க மூங்கில்க ளினத்தொடு முரிஞ்சி
யழலிடை யவியா திருப்பினு மந்தோ வரும்பய னெய்துழி யழியத்
தழவொளிக் கதிர்ப்பூ ணக்கத மணிந்து துலங்கிய தோளிணை போற்றி.

வலைவரம் பறிந்த காளையாய்ச் சேர்ப்பர் வண்குடி மகிழ்கொளத் தோன்றி
யலைவரம் பறிந்த மகரமீன் படுத்த வன்பனு ரங்கையிற் பற்றி
விலைவரம் பிகந்த மணிவளை கடகம் விற்செறி கங்கண மணியக்
கலைவரம் பிகந்த மகரமீன் யாழுங் கடந்தநின் கூர்ப்பரம் போற்றி. 42

சங்குபன் மலர்க்கு மருங்கலா ரான தாமரை நாண்மலர் குவித்து
மங்கத னரும்பை மலர்த்தியுந் திரிய மலக்கொளிச் சுடர்கண்மை யாப்பங்
கங்கையை யணிந்த கண்ணுதல் வதனக் கதிர்விழி புதைத்திடைத் தோற்றிப்
பங்கய மலரைக் காந்தளைத் தளிரைப் பாற்றுநின் செங்கரம் போற்றி. 43

கருப்புவிற் குழைக்குங் காமவே ளெடுத்த கணையெனு முற்பல முகிழைப் [க்கித்
பொருப்புவிற் குழைத்த புண்ணியன் விழையப் பொலிந்துநேர் பெறுதென வில
திருப்பொலி செங்கை யார்விரல் போற்றி சித்தசன் றேர்க்குவாம் பரியா
யொருப்படுங் கிள்ளைச் செய்யவாய் விலக்கி யொளிருநின் விரலுகிர் போற்றி. 44

கடகரி மருப்பு மத்தகத் துணையுங் காமரு செப்பும்பொற் குடமுங்
குடவரைக் குவடுந் தாமரை முகிழுஞ் சக்கர வாகமும் பந்துஞ்
சுடர்மணி வடமுங் கலவையு மமிழ்துந் தொய்யிலுங் கலந்தமு தேச
ரிடவிய மார்பங் கலத்தல்செய் யாவென் றிகந்தநின் னிளமுலை போற்றி. 45

உருப்பவிர் பருவத் துறுகுளிர் கொடுத்து முறுகுளிர்ப் பருவத்து வெம்மை
விருப்புற வளித்தும் புணர்ச்சியிற் புளகம் விரவியு மேனையோர் குயமு
மிருப்பன வெனினு மிகந்துல கீன்று மிளமைநீங் காதுமா மேருப்
பருப்பதங் குழைத்தார் பகட்டுரங் குழைத்த பயோதரத் தின்னியல் போற்றி. 46

முழுத்தபே ரன்பிற் காந்தனுர் மணித்தோண் முயங்கிய வேலையு முயக்கம்
விழுத்தவே லையினும் வேறுவே றுருவாய் வேங்கையி னறுமலர்த் தாதும்
பழுத்தவா டகப்பொற் பராகமும் விலக்கிப் பன்மணி கரைத்திலே கித்த
வெழுத்தினாற் பொலிந்த விளமுலை முற்றத் திணங்கிய சுணங்கெழில் போற்றி. 47

மூவரை யடக்கி மாலொரு வனையே முற்றுறச் சுமந்ததோ ராலின்
மேவுபச் சிலையும் விலக்கியண் ணாந்து விளங்கிய முலைமுக டுருவித்
தாழ்வட மணியி னிளவெயிற் பிழம்புந் தயங்கிய நிதபமே கலையி
னேவில்பல் லொளியும் விராய்க்கிடந் திமைப்ப வொளிருத ரத்தெழில் போற்றி. 48

மாந்தளிர் மருட்டுங் கரதலத் தெடுத்த வார்கழைக் கருப்புவில் விசிக்கு
மேந்தெழிற் சுருப்புச் சேமநா ணென்றோ விறந்தவே ளெழுவள ருந்திக்
காந்தழற் குண்டத் தெழும்புகைக் கொழுந்தோ கண்ணெழு தஞ்சனம் பிழைத்து
வீழ்ந்தொழு கியதோ வெனவயிற் றெழுந்த மென்மயி ரொழுக்கெழில் போற்றி. 49

நிரஞ்சனப் பொருளா யிருந்தருள் கணவர் நெஞ்சுகண் ணினுங்கலந் துலாவு
முரஞ்சொளி வனப்புப் பெருங்கடற் பரப்பின் முரிதிரை யெனவயிற் றெழுங்கும்

வாஞ்செறி மடிப்பு மதன்சுழி யென்ன வயங்கிய வுந்தியு மாங்கே
யூஞ்செறி பணிகள் கிடந்தென நிரம்பத் தொளிர்தரு பருமமும் போற்றி.

கடிமலர்க் கொம்பர் கொடியலர் தூற்றுங் கைப்பிடி மின்னிவை நிலையா
துடிகடை பட்ட தாவிட மூதிழுந் தாயநூல் பலவினைப் படுஞ்சீர்
முடிவறு படங்கல் மேட்டூக் கழியு மெனவிவை முனிந்துமொய்ச் சுரப
வடிவுகொள் கணவன் மனமெலாம் வணங்க வணங்குநின் னிடைபோற்றி.51

காமவே ளெரித்த கண்ணுதற் பரமன் கருத்தினை வணக்கிமேக் குயர்த்த
வாமமா ரோம வல்லியென் றுரைக்கு மணிக்கொடி யசைவற நாட்டு
மேமமா ருந்திக் குழிமிசைத் தாய வெரிமணி விதானஞ்செய் பொலங்கே
ராமமூ வடங்கள் கிடந்தொளி யசும்பு மழகிய கடிதடம் போற்றி.

பிணர்படு வடிவி னுட்புழை யுடைய பெருங்களிற் றிருங்கர மிகந்து
வணர்நெடு வாளாற் றுண்படக் குறைத்து வரிசையி னுரித்திடப் பட்டு
நிணர்வனப் பிழக்குங் கதலியை நீக்கி நிழன்மணி மகரவாய் செறித்துத்
துணர்படு மாவி னிளந்தளிர்ப் பட்டிற் றுலங்குநின் கவான்றுணை போற்றி.

பொற்பமர் பொன்னங் கிழியுடை படுவ பூந்திரட் பந்தடி படுவ
வற்பமர் ஞெண்டு பங்கமுற் றலையு மாபின வெனவெலா மொழித்துத்
தற்பரன் கரத்தாற் பிசைதொறு மமிழ்தந் தந்தணி யொன்றுமெய் தாமே
யற்புத மான வியற்கைநல் லழகி னமர்முழந் தாளிணை போற்றி.

சிலம்புகிண் கிணிய பாதசா லங்கள் செழுமணிப் பாடகந் தண்டை
யலம்புற வணிந்து புலவியிற் கணவ னங்கையோ டமர்சிறி தாற்றிச்
சலம்படு வராலு மாவரா ழிகையுந் தணித்துவார்ந் தொளிர்கணைக் காலும்
பலம்படு தராசிற் றட்டினைத் தூக்கிப் பதித்தநின் பரடுநேர் போற்றி.

பெண்ணுரு வெடுத்து நின்னருட் கணவன் பெரும்புயம் புணர்ந்தமா யவளின்
கண்ணுரு நிகர்ப்ப மீனுரு வெடுத்துக் காதிடப் பட்டிசற் கேனு
நண்ணுரு வெடுத்து நிகர்த்துமென் றெண்ணி நலத்தக வெடுத்தகூர் மமுமாங்
கெண்ணுரு வழிய வென்றிகொண் டிலகு மெழிற்புறந் தாளிணை போற்றி. 56

தொண்டையங் கனிவாய்த் திருவெழிற் குடைந்த துவர்நிற வித்துரு மத்தின்
கண்டமுங் குளிர்வெண் ணகையெழிற் குடைந்த கதிர்பொழி தரளமு மெமையுந்
தொண்டுகொண்டருளல்வேண்டுமென்றடியைத்தொடர்ந்துகொண்டனையமெல்
மண்டெழில் கொழிக்கு மவ்விரற் றலையின் வயங்கிய நகங்களும் போற்றி. [விரா

வுந்தெதிர் பணியும் வானவர் சிரத்து மற்றவர் செய்யமா விடத்துஞ்
சிந்தையி னிடத்து மறைமுடி யிடத்துந் திகழ்வரு புலவியின் முக்கட்
சுந்தர னலங்கல் வேணியி னிடத்துந் துலங்குறத் தோற்றிநா யடியேன்
புந்தியி னென்று நீங்குத லறியாப் பூந்தளிர்ச் சீறடி போற்றி.

பயில்லிய வுலகம் படைப்பவ னூர்தி யாகிய படர்சிறை யனமு
மயினுந் நெடுவே லண்ணலா ரூர்தி யாகிய மயிலுநிற் சமத்து
செயிரறு மயிரா வணமுநேர் பணிந்து திகழ்நடை திருந்தவே சறப்பல்
லுயிர்களும் வேத நெறியுளி யொதுங்க வொதுங்குநின் னடையெழில் போற்றி.

எழுதரு மறையு மெட்டுதற் கரிதா யிலங்கிய வெழுதிடப் பட்டோ
ரெழுதுசித் திரமுங் கைசெய்பா வையும்வீழ்த் திளந்தளிர் கவற்றுமெல் லியலு
மெழுதயர் மஞ்ஞைக் குழுத்துசா யலுங்கொண் டெளிபனேன் சிரத்துநீ முன்ன
மெழுதிய வெழுத்துந் துடைக்குநின் வடிவத் திருக்கவின் முழுவதும் போற்றி. 60

நீடிய பரையா யாதியா யிச்சை நீக்கமில் லறிவிருந் தொழிலாய்ப்
பீடிய வுலகிற் பேதமும் பேதா பேதமு மபேதமு மென்னக்
கூடியுங் கூட லின்றியு மொன்றாய்க் குறுகிய வுயிர்க்கெலாஞ் சுகமே
நாடிய முத்தி யருளகி லாண்ட நாயகி யெனும்பெயர் போற்றி. 61

மானே குயிலே பசுங்கிளியே மயிலே புறவே நடையனமே
தேனே யமுதே நினையிங்குத் தெரிசித் தேத்தப் பெறுதலினால்
யானே பெரிய தவஞ்செய்தேன் யான்செய் தவமும் வேள்வியுமிங்
கியானே பயந்தந் திடப்பெற்றே னெனக்கோர் குறையு மினியுண்டோ.

மறையா கமத்தால் வானவரான் மாலா லறியப் படாதநீ
முறையோ விவ்வா றெளிவந்த தென்னே மொழியா யெனத்துதித்துக்
குறையா வன்பின் விறைய்நின்ற குருமா மலரோன் முகநோக்கி
நறைவார்ந் தொழுகு மலர்க்கூந்த னங்கை யிதனை விளம்புமால்.

அனகன் கயிலை யெம்பெருமா னடிகள் வணங்கிப் பொருளொன்று
வினவி னேற்கு ஞானதல மேவித் தவமாற் றுதியாங்கே
யினிது விரித்துத் தெரித்துமென வியம்பி விடுப்ப வீங்கடுத்தேன்
கனக மலர்மெல் லணைச்சேக்குங் கடவு ளறிதி யெனக்கிளந்தாள்.

சாற்று மனவில் யோகிருந்த சம்பு முனிவ னுணர்ந்தெழுந்து
போற்றிப் பணிந்து மகிழ்தூங்கப் பொங்குங் கருணை யெதிர்வழங்கிக்
கீற்று மதிய முடிவேய்ந்த கேள்வ ருரைத்த வருணினைந்து
தோற்று முழுவ லன்பினொடுந் தூய பூசை தொடங்குவாள்.

பாங்கர் நின்ற பரிசனத்தை நோக்கிப் பள்ளித் தாமமுத
லோங்கும் பொருள்கள் சிவபூசை யுகுற்ற வொல்லை யிவ்வரைப்பிற்
றூங்கிக் கொணர்மி னெனவிடுத்துத் தானங் கொழிக்குங் காவிரியுந்
தேங்கு நவதீர்த் தமுஞ்சென்று சிந்தை மகிழத் தோய்ந்தெழுந்தாள்.

திரைக்கும் புனற்றீர்த் தமும்படிந்த தேவி திருமே னியிலணிந்த
விரைக்குங் குமமு மலர்த்தொடையும் வெறிகூழ் கலவை முதற்பலவு

முறைக்கு முனங்கொண் டியர்ந்துயிர்கட் குறுதி பயப்ப தெனினவடன்
குறைக்கு மணிநூ புரத்தாளிற் கூடு முயிர்க்குங் குறையுண்டோ.

பொழியுங் கிரண மணிக்கலனும் பொற்ற விரையும் பூம்பட்டு
மொழியுந் திறத்த வெனத்தொடா ளொளிர்வெண் சேசு விழைந்துடீஇ
யிழியும் பழிபா தகமுழுது மிரிக்கு நீறுங் கண்மணியு
மொழியும் பனுவல் விதியாற்முன் முழுதுந் திருமே னியிலணிந்தாள்.

அருந்தவக் குறுமுனி யாடு தீர்த்தமு
னிருந்திருந் தவத்தினை யிறைவி யெய்திறு
டிருந்திய பரிசனத் தேவர் சென்றவர்
பொருந்திய பொருளெலாம் போதந் தீட்டுவார்.

தவமற வதியுமா னைந்தும் பற்றுபு
புவனமுற் றுயிர்த்தவள் பூசைக் காகெனத்
தவமகிழ் தலைக்கொளத் தந்திட் டார்சிலர்.

ுநதிர 'வா
ரைந்தொடு நிதிகளு மணிசெய் தேனுவுஞ்
சிந்தைய நிரப்புறு மணியுந் தெவ்வுபு
யெலா மலிவித் தார்சிலர்.

'றப்புடை மயனை விச்சுவ
கன்மனைக் கூவியொண் கரகம் பாசனம்
பன்மணிப் படலிகை பரந்த வட்டகை
யென்னவும் புரிமினென் றேவி ஞர்சிலர்.

மாதிரக் களிற்றினை வவ்வி யன்னவை
மீதுவிண் ணெல்லையின் விறந்த தீர்த்தமும்
பூதல வரைப்பிடைப் புணர்பஃ றீர்த்தமுங்
காதலிற் கொண்டுபோய்க் கஞற்றி ( 'லர்.

நல்லவுங்
கொண்டபஃ ுங் குலவி யுள்ளவு
மணடர்நாட் டதிசய மாக வுள்ளவு
மண்டினர் வவ்வினர் வந்துய்த் தார்சிலர்.

மிறைவனூர்
மன்னிய பொருளெலாம் வவ்வி ஞானமா
நன்னகர் முற்றிய நவையி லாரெலாந்
துன்னினர் பணிவிடை தொடங்கி ஞரரோ.

# அகிலாண்டநாயகியாராதனைப்படலம்.

நிறைமலர்ச் சம்பு மூல நின்மலன் கோயில் கொன்று
முறையினை யுணர்ந்து வாணிற் றச்சர்கண் முயன்று வல்லே
பிறைதவ ழெயில்கண் மாடம் பில்கொளி மணிப்பூங் கோயி
னறைமலர்க் காவ ணங்க ணலத்தக நிறுவித் தாரால்.

மண்டப மேடை வேதி மடைப்பள்ளி யாதி யாக
வண்டர்வீழ் யவனர் செய்த வாலயத் தெம்ப ராட்டி
கண்டுள மகிழ்மீக் கொள்ளக் காதலிற் சிலர்க ளாடி
விண்டமென் மலர்க ளாய்ந்து வேறுவே றமைத்து வைத்தார்.

தாமணி யிண்டை மாலை ததைமலர்த் தொங்க லாதி
சீரணிந் தியற்றி யோர்சார் செறிதரச் சிலர்கள் வைத்தா
ரோரணி கலன்பூ ணாடை யிருங்குடை கவரி யாதி
நீரணி கடாதி தூய்மை நிகழ்த்தினர் சில்லோர் வைத்தார்.

நாறுமென் பனிநீர் வாக்கி நறுங்குற டுரிஞ்ச தேய்வை
யேறிய கடிக்கத் தூரி யிளகிய புழுகு வாச
மூறிய குங்கு மப்பூக் கருப்பூர முறமட் டித்த
கூறருங் கலவை சாலிற் கொளப்பெய்து நிறைத்தார் சில்லோர்.

தயிலமா மலக மஞ்சள் சால்மா வானைந் தீர்ம்பா
றயிரிழு தினந்தேன் வேழச் சாறமிழ் தைந்தைந் தென்ன
வியனூறு மிரதம் பல்வே றிருங்கனி யிளநீர் மற்றுஞ்
செயிரறு கலத்தின் வாங்கிச் செறித்தன ரொருசார் சில்லோர்.

கடவுளா னுதவு முண்டி கடல்வரு மமிழ்த மேனைப்
படர்சுவைத் தெய்வ வுண்டி பாரிடை யமைக்கும் பல்வே
றடர்சுவை யுண்டி நான்கு மதனக் கலத்தி லேந்திச்
சுடரிழைத் துகிலின் மூடித் தொகுத்தன ரொருசார் சில்லோர்.

கற்பகத் திழையும் பூவுங் கடவுளார் மணியுங் கொண்டு
பொற்புற விதானித் தெங்கும் புகைமணங் கமழ வூட்டிப்
பற்பல விளக்கம் வைத்துப் பனிநறு நீர்தூய் வாச
வுற்பல மலர்கள் சிந்தி நிலமெழி லுறுத்தார் சில்லோர்.

தொண்டகந் துடித டாரி தூரியம் பதலை பம்பை
திண்டிம முரசு மொந்தை செறிகிணை தகுணிச் சங்கண்
மண்டுதண் ணுமையே வீணை வளைவயிர் [illegible]வி காளங்
கொண்டபல் லியங்க ளெல்லாங் கூளிய ரியம்பா நின்றார்.

இவ்வகைப் பணிகண் முற்ற யாவரு மியற்ற லோடு
மவ்வகை யுணர்ந்து வல்லே யம்பிகை யெழுந்து சென்றாள்

# திருவானைக்காப்புராணம்.

பவ்வமென் றயிர்க்கு மாவிப் பாங்கியர் மருங்கு சூழ்ந்தார்
செவ்விய தேவர் கற்பச் செழுமலர் மாரி தூர்த்தார்.

பிரமன்மா தவங்கள் சாலப் பேணுதல் குறித்தோ வேகப்
பிரமநா மத்தை யன்னான் பெற்றமை மதித்தோ வந்தப்
பிரமன்மூ துலக மாக்கும் பேறுற நினைந்தோ தேறேம்
பிரமதீர்த் தத்தின் பாங்கர்ச் சென்றனள் பிணைமா னன்னாள்.

மருவிய தொழும்பின் மேன்மை வயக்கிய பிரமன் பாங்கர்க்
கருணையின் பெருமை காட்டக் கருதிமற் றவனைக் கூவிப்
பொருவிலி பூசை சாலப் புரிவதற் கிலிங்க மொன்று
தருகவென் றுரைத்தாள் கேட்ட சதுமுகன் வணங்கிக் கூறும்.

அகிலமு முயிர்த்த நின்னா லறிதராப் பொருள்க ளில்லை
சகலமு முணர்ந்து ளாய்க்குச் சாற்றுவ தென்னே யெல்லா
நிகழ்வதைம் பூதத் தந்தப் பூதத்தி னினக்கு வேட்கை
திகழ்வதி னியற்று கென்றான் செவிமடுத் துமையாள் பின்னர்.

உயிரினுக் குலவா வின்பச் சுவையினை யுதவு முத்தி
யியலினை யுணரப் பூசை யியற்றுவாள் சுவையை நல்குஞ்
செயிரறு புனலைக் கொண்டு சிவலிங்க மாக்க முன்னி
யயிர்வரித் தார்க்கு மந்தத் தீர்த்தத்தி னறலைச் சார்ந்தாள்.

நீக்கமில் லாம லெங்கு நிறைந்தபூ ரணத்தி னின்று
தாக்கற நின்ற வந்தத் தாணுவின் சரணம் போற்றிப்
போக்கறு தீர்த்தந் தன்னைப் பொள்ளெனத் திரட்டித் தேசு
தேக்கொளி யிலிங்க மாக்கித் திகழ்தர விருத்தி னாளால்.

விழைதகு கணவன் மெய்யின் விராயிது முரணா மென்னத்
தழையெழில் மகளாய் நின்ற தற்பரைக் கெறுழ்வன் மேருக்
குழைதரக் குழைத்த செம்மல் கோளொடு முரணீ தென்னப்
பிழைதப நெகிழ்நீர் வன்மைப் பிழம்புறல் வியப்பிற் றேயோ.

மங்கலந் துவன்றி யார்ப்ப மாதர்பல் லாண்டி சைப்பப்
புங்கவர் குணலை செய்யப் புலவர்கை கொட்டி யாடச்
சங்கரி சம்பு யோகி தவப்பயன் முற்று விப்பா
ளங்கவன் றன்னைக் கூவி நிழற்றென வருளிச் செய்வாள்.

மருத்தகு நாவ லென்ன மருவிய சம்பு யோகி
கருத்துறு மகிழ்ச்சி துள்ளக் கவித்துற நிழற்றி நிற்பத்
திருத்தநீர் கொண்டு நாதன் றிருமுடி யாட்ட வெண்ணிப்
பெருத்தபஃ றீர்த்த மெல்லாம் பெருகுமா பாவித் திட்டாள்.

# அகிலாண்டநாயகியாராதனைப்படலம்.

விழுமிய முக்கண் மூர்த்தி விரைமலர்ப் பதத்தன் னூட்கு
முழுவலன் பெழுந்தா லென்ன வுற்றதீர்த் தங்க ளெல்லா
மெழுதருஞ் சீமத் தீர்த்த மெனவிறும் பூது கொண்டாள்.
கெழுதகு மனைய தீர்த்த மப்பெயர் கெழுமிற் றன்றே.

ஒத்திய சீமத் தீர்த்தநீ ரினையு மெண்டிசைக் கவிர்றின்மேல் வந்த
தூத்தகு தீர்த்தந் தன்னையுஞ் சுகந்தந் தோட்டலர் பெய்தன வமைத்துப்
பாத்திய மாச மனமருக் கியமும் பாங்குற வமைத்தருள் கொழிக்கு
மாத்தனூல் விதியாற் சுத்தியோ டைந்து மாக்கின ளகிலமீன் றெடுத்தாள்.

ஆதன மூர்த்தி யமைத்தரு வுருவ மருவமோ டுருவமா யவற்றின்
பேதமு மாகிப் பிரிவில தாகிப் பிரிதரா வுயிரினைத் தொடர்ந்த
வேதமெய் தரிய தாகியவ் வேத மெனைத்தையுந் துடைத்தருள் கொழிக்குஞ்
சோதியை மூர்த்தி மாவென வருளாற் றுகளறக் கண்டருச் சித்தாள்.

பகர்ந்தபாத் தியமுன் மூன்றுநே ரளித்துப் பகர்தயி லாதிக ளாட்டித்
திகழ்ந்திடு மவற்றி னிடையிடை யலர்கள் சேர்த்திரும் புகையொளி யுணவு
மகிழ்ந்திட வளித்துச் சுத்தநீ ராட்டி வயங்கிய வுருத்திர மனைத்தும்
புகழ்ந்திடுஞ் சந்தக் குழம்பருக் கியமும் பொற்புற முறையினூட் டினளால்.

நுழையிழைத் துகிலாற் றிருவுரு வீர நொடிக்குமுன் புலர்த்தியின் னரைநாண்
டழையழ கெறிக்குங் கோவணம் பட்டுஞ் சாத்திமெய் முழுவதுங் குளிர்ப்பக்
குழைவிரைக் கலவை கோட்டியொண் சுண்ணங் கூர்தர மீமிசை யட்டி
விழைதரு கலனுந் தொங்கலா திகளும் வேறுவே றெடுத்தலங் கரித்தாள்.

அறுசுவை கொழிக்கு நால்வகை யுண்டி யனைத்துமின் னுரைகளுந் தூட்டி
நறுவிரைப் புதுநீர் பொழிந்துபா கடையு நல்குபு பல்வகை யொளியும்
பெறுமுறை சுழற்றிக் குடைமுத லுதவிப் பெருகிய மியம்புவித் தெதிரே
யுறுவசி முதலோர் தமைநடத் தியக்கி நின்றன ளோடரிக் கண்ணாள்.

நிச்சலுங் காலந் தொறுந்தொறு முள்ள நெகிழ்தர வுருகியிவ் வாறு
கெச்சமில் பூசை புரிகுவா ளொருநா ளினிதுபூ சனைமுடிந் ததற்பின்
முச்சகம் பழிச்சு முதல்வனைத் தணந்த முறைமையை நினைந்தன ளாகி
வெச்சென வுயிர்த்துப் புளகமெய் போர்ப்ப விழுத்தகு துதிவிளம் பினளால்.

உலகே ழுமொடுங் கவெழுந் துநிமி ரூழிக் கனலுங் குளிரத் தழலாய்ப்
புலவோ ரலம்வந் தழியக் கடுகும் புகர்நஞ் சமயின் றபுரா தனனே
மலரோன் மகண்மே லெழுகா தலினால் வருபா வமகற் றியகா வல்வன
மிலமா கவிருந் தருள்வா யடியேற் கெளிவந் தருளா மையினைத் திடுமே.

அருளே துமிலா தொருபா லனுயி ரழியத் தொடர்தென் றிசையா ளியமன்
பொருளே துமிலா னெனவே நிலமேற் புரளச் சரணேற் றியபுண் ணியனே

தெருளே துமிலான் பிறனில் விழையுஞ் சேர்ந்தார்க் கொலிதீ மைசிதைத் தருளு
மிருளே துமிலா ததலத் தடியேற் கெளிவந் தருளா மையியைந் திடுமே. 101

கலங்கிப் புலவோர் பெரிதுங் குலையக் கறுவுந் தகுவோர் குலவாழ்க் கையுறும்
வலங்கொள் புரமூன் றுமொருங் கவிய மாயப் படைதொட் டமலர்க் கானே
துலங்குங் கிரணப் பனிமா மதியோன் றொடர்சா பமறுத் துவாஞ் செறிவித்
திலங்கும் புகழ்ஞா னதலத் தடியேற் கெளிவந் தருளா மையியைந் திடுமே. 102

விண்ணு நெடும் புவியுந் துய வெள்ளிக் கிரியைப் பெயர்வித் திடுவோன்
கண்ணுர் முகமும் புயமுஞ் சிரமுங் கடிதா கநெரித் தருள்கால் விரலோய்
புண்ணு டியவார் குலிசப் படையோன் புகர்வன் கொலைபோக் கிவரங் கள்பல
வெண்ணு தருண்ஞா னதலத் தடியேற் கெளிவந் தருளா மையியைந் திடுமே. 103

பராவிப் பணியா தடியுஞ் சிரமும் பார்ப்பா மெனவெண் ணுமறன் கடையால்
வராகத் தொடுபுள் ளுருமா லயனு மருவுங் கழிமேன் மையவா னவனே
விராவித் தவமாற் றியசம் புமுனி வெய்யோன் மலைவே லையடக் குமுனி
யிராமற் கருண்ஞா னதலத் தடியேற் கெளிவந் தருளா மையியைந் திடுமே. 104

விலங்கற் சுரையன் பெறுமெல் லியலாள் விம்மாந் துகரைந் துகரைந் துருகித்
துலங்கித் தளர்வெய் தமருங் குல்விழி சோரப் புனலங் கைசிரங் குவிய
விலங்கப் புளகங் களிவ்வா றுதுதி யியைவித் துறுசோ கமிணங் கலுமே [றனனே.
யலங்கற் சடையண் ணல்விரைந் தெதிரே யடல்வெள் விடைமேல் வெளிநின்

பூதகணம் புடைசூழப் புத்தேளிர் பொழிகின்ற
சீதமலர் வெளிதூர்ப்பத் திசைமுழுது மிசைதேங்க
வேதமுனி வரர்பழிச்ச மெய்யன்பர் ருதுகலிப்ப
நாதரினி தருள்காட்சி நயனமலர்ந் தெதிர்கண்டாள்

இருங்கண்ணிற் சிறந்தவுறுப் பில்லையெனன் முகமனே
கருங்கண்க டம்பிரான் காட்சியினாற் களித்தலொடும்
பெருங்களிநெஞ் சகங்கொள்ளப் பேரமைத்தோண் முலைவிம்ம
வொருங்குருவ மனைத்துமெழி லோங்கினவா லுமையவட்கே.

அல்வரைந்த மலர்க்கூந்த லகிலாண்ட நாயகிபின்
வல்விரைந்து பதமலரின் வணங்கியொரு பானிற்பக்
கல்வரைந்த வெறுழ்த்திண்டோட் காபாலி கண்ணளித்துச்
சொல்வரைந்த கருணையினாற் றூக்கவரங் கொள்கென்றான்.

எவ்வுயிர்க்கு மெஞ்ஞான்று மிருங்கிழவ னாய்நிற்கு
மவ்வுயிரின் கிழவனையே யருங்கிழவ னெனச்சார்ந்த
கொவ்வைநறுங் கனிவாயாள் கொண்கர்திரு வருணோக்கி
மூவ்வுலகு மெளிதுய்ய முன்னிவரங் கொள்ளுமால்.

# வரங்கொள்படலம்.

இமையார்க டொழுதேத்து மெம்பெருமா னெனையாள விலிங்க மாகி
யமிழ்தேச னெனச்சம்பு மூலத்தி லமர்ந்தனையே யனைய தான
வமிழ்தேச னெனுநாமங் கேட்டவர்கள் சாலோக மடைக வன்பா
லமிழ்தேச னெனுங்குறியைக் கண்டவர்கள் சாமீப மடைக மாதோ.

திப்பியமா கியவமுத லிங்கத்தைத் தியானித்துத் தெரிசித் தோர்க
ளொப்பரிய நின்னுருவ முறுகவந்தச் சிவலிங்கத் துவந்து பூசை
யெப்பொழுதி னெப்பொருள்கொண் டியற்றினோ ரும்வினையி னிரியல் போக
வைப்பனைய நினதடிக்கீழ் மாறுத சிவானுபவ மருவி வாழ்க.

பெருமானே யமுதலிங்கத் தொருநாளைப் பூசனைக்குப் பெட்பி னோடும்
பொருளாதி கொடுத்தவர்க ளிம்மையிலே வேட்டபெரும் போக மூழ்கி
யொருவாத சிவலோகத் தாண்டிலக்க முறைந்துள்ள முன்னிற் றெல்லா
மருகாமை யெதிர்நிற்பப் பெரும்போகத் திடையழுந்தி யருளிற் சேர்க.

இன்னல்கெட நின்முடியின் மனுவோதி யெளியனே னெடுத்திங் காட்டு
மன்னியசீ மத்தீர்த்த தெரிசனத்தாற் பரிசத்தால் வருநீர் வேட்கை
பின்னமுறு பானத்தா லூர்வனவு முத்திநிலை பெறுக வேட்ட
வெந்நலமு மத்தீர்த்த முரைத்தவரும் பெற்றின்ப முத்தி சேர்க.

மாதவங்க ளத்தகுசீ மத்தீர்த்தத் தருகிருந்து வயக்கி னோர்க்கு
மேதகைய பயனனந்த மாயுறுக கோதானம் விரும்பி யொன்று
கோதகலு மந்தணர்க்குக் கொடுத்தவர்க்குப் பரிமேதங் குயின்ற பேறு
தீதகல வுளதாக சிரித்தெயின்மூன் றெருங்கெரித்த தேவ தேவே.

திலதானம் புரிந்தவர்க்குச் செறிந்தபல பாவமெலாந் தேய்ந்து மாய்க
வுலவாத செழுங்கனக முதவுநர்கள் பரிதிபதத் துறைந்து வாழ்க
விலகாத சுவைநறுநெய் வீசிநருக் கக்கினிட்டோ மத்தின் மேவு
பலனுர்க பாணிவளர் பகழிவிழி கிடங்தொளிரும் பதுமத் தாளோய்.

வத்திரதா னங்கொடுப்போ ராயுளொடு பெருஞ்செல்வ மருவி யீற்றிற்
பொத்தியசீர் வருணபத முறுகதா னியதானம் புகன்று செய்வோர்
பத்தியெவ ரும்புரியத் தெய்வதமாய் விளங்குகபைங் கழையின் கட்டி
யுத்தமருக் குதவினோ ருறுதகநன் னுகர்ச்சியென வுரைப்ப வெல்லாம்.

தவளவிர சிதங்கொடுப்போர் சந்திரன்வாழ் பதமுறுக தரணி யீவோர்
திவளுமுடி யிந்திரனாய் விண்முழுதும் புரக்கதிக பூப்பீ வோர்க
டுவளவரு மிடும்பையெலாந் துமித்தின்ப முறுகதுவர்க் கனிவாய் வேய்த்தோ
குவளைவிழிக் கன்னியரைக் கொடுப்பவர்கள் விண்டுபதங் குலாவி வாழ்க.

அன்னதா னம்புரிவோ ரன்னமொரோ வொன்றினுக்குக் கற்ப மொவ்வொன்
றென்னையா ளுடையபிரான் சிவலோகத் தினிதமர்க விலிங்க மீவோர்
துன்னுபோ கம்பலவு மீண்டெய்தித் தோலாத வின்ப மெல்லா
மன்னுமீ சுரபதத்தி னேற்றவர்க ளொடுமினிது மருவி வாழ்க.

சிவநிசியிற் சிவலிங்க முபகரணத் தொடுமளிப்போர் சிறப்ப வேற்றிட்
டவமறுபூ சனைபுரிவோ ரப்பொழுதே சீவன்முத்த ராக நெஞ்சக்
கவலையறு கண்மணிக ளீவோரு மேற்பவருங் கயிலா யத்து
முவமையறு சிவபுரத்து மொரோரொவொன் றுக்கொருபதிற்றுண் டுறைந்து வாழ்க.

மும்மலந்துட் படப்படுக்கு மித்தலத்தின் முற்றவங்கண் முயன்ற பேற்றாற்
செம்மைபெறுஞ் சிவஞான மளிப்பவரு மேற்பவருஞ் செயிரிற் றீர்ந்து
விம்மியபே ரானந்த வெள்ளத்துள் வாதனையும் விலகி மூழ்க
வம்மவிந்த ஞானதல மமுதேச மெனும்பெயரு மணிவ தாக.

அமுதேச மெனப்படுமித் தலத்தெல்லை யைங்குரோ சத்தி னுள்ளா
லமையாத காதலினு லந்தணரைப் பதிட்டைசெய்வோ ரலக்க ணீங்கி
யிமையார்க ளழுக்கறுப்பப் பிரமத்தின் வாழ்கவிவர்க் கவனி யீந்தோ
ரமையாளு நாயகசா ரூபத்திற் சீவன்முத்தி யெய்தி வாழ்க.

திருமாலைப் பதிட்டைசெய்வோர் திப்பியமாம் வைகுந்தஞ் சேர்ந்து வாழ்க
பொருவேது மில்லாத சிவலிங்கப் பதிட்டைசெய்வோர் பொக்க நீங்கி
யொருவாத விம்மைமறு மையிற்போக நுகர்ந்துயர்ந்த வீடு சேர்க
பெருவாழ்வு தருமிந்தத் தலம்வசிப்போர் நின்னடியைப் பிரியா ராக.

வேறுவே றிவ்வாறு வரம்பலவும் விழைந்திரந்து வியந்து போற்றி
நாறுபூங் குழலுமையா ளுதர்திரு முகநோக்கி நம்ப யான்முன்
கூறியதோர் வினவினுக்குத் தரமீண்டு கொடுத்துமெனக் குறித்தி யன்றே
தேறுமா றினியதுவுந் தெரித்தருளா யெனக்கேட்ட தேவ தேவன்.

இரந்தபல் வரங்களு மீந்திட் டாமதுச்
சுரந்தபன் மலர்க்குழற் றோகை மற்றினி
யரந்தைவை யகந்தனக் கறவி லுயதற்
குரந்திக ழிறையுமிங் குரைத்து மென்றுபின்.

நன்னிழற் பாப்புறு நாவற் றுருவாய்
முன்னுறுஞ் சம்புமா முனியை நோக்கினு

னன்னது தெரிந்தவ னுடித் தாழ்ந்தெழூந்
துன்னருங் களிப்பினு லுரைத்தன் மேயினுன். 16

அடியனே னுய்ந்தன னடிய னேனுறுங்
குடிமுத லெழூமையுங் கோதற் றுய்ந்தன
முடிபொதிர்த் தெழுந்தவிம் முறிசெய் நாவலங
கடிகிழற் கருணையிற் கலந்த நீர்மையால். 17

எழிலமு தீச்சர மென்னு மித்தலந், தொழுதகு சம்புவீச் சரமென் றேதவு
நிழலிதி னென்றுநீ நிலையின் வைகவு, மழகிய வரமென வருளல் வேண்மெல். 18

என்றுபல் வரங்களு மிரப்ப வெம்பிரா, னன்றென வவையெலா நல்கிப் பாங்கரிற்
றுன்றிய மறைபல துதிக்கும் வேதன்மே, லொன்றிய வருள்விழி யுறுத்தி னனரோ.

கமலமெல்லணையினுன் கசிந்துதாழ்ந்தெழுந், தமலனேயுய்ந்தனேனகிலகோடியுந்
திமிரவல்வினைகளிற்றீர்ந்தின்றுய்ந்தவென், றிமிழ்கொளுமன்பினுலினிதுகூறுவா
[ன்.

காசின மிலகிய கண்டத் தெம்பிரான், மாசிமா மதிவரு மதியி னுளெனப்
பேசிய மிருகசீ ரிடத்திற் பேணிய, தேசவிர் விடைக்கொடி சிறப்ப வேற்றுபு. 21

பொங்கெழிற் றிருவிழாப் பொலியச் செய்துபின்
பங்குனி மதியிடைப் பகரென் னுளெனத்
தங்கிய வுரோகணி தன்னி னீள்கொடி
யிங்குயி ரனைத்துமின் பெய்தத் தாழ்த்துபு. 22

அற்றைநா ளென்பெய ரணிந்த தீர்த்தத்தி
னுற்றவ ரனைவரு முவந்து தோயவு
மற்றவர் வேட்டபல் வரங்க ளெய்தவும்
பற்றிய தென துளம் பணிக்க வென்றனன். 23

பங்கய னின்னணம் பகரக் கேட்டரு
ளங்கண னன்னண மாக வென்றுபின்
றங்கினின் றேத்துநர் தங்கண் மேலெலாம்
பொங்கருள் விழியெதிர் புகுத்தி னனரோ. 24

அவரவர் மகிழ்ச்சியி னடிகள் போற்றிநின்
றிவறிய வரமெலா மியம்பிப் பெற்றனர்
சிவபிரா னின்னணம் வரங்கள் சேர்த்தென
வுவமையி லருளுமைக் குதவப் புக்கனன். 25

# ஞானோபதேசப்படலம்.

சந்த வான்மதி மிலைச்சிய தாழ்சடை யழகர்
நந்தி வாண்முக நோக்கினர் நந்திதாழ்ந் தெழுந்து
முந்த னார்திரு வுளத்தெழு முன்னமிக் கறிந்திட்
டந்தின் மேயினா ரியாரையும் புடையகற் றினனால்.

சம்பு மாதவ னந்தியென் றிருவருந் தவங்க
ளும்ப ரார்க்கரி யனமிக வுஞற்றிய பேற்றா
லம்பர் மாதுமை யாளொடுங் கேட்கிய வருள்பெற்
றெம்பி ரானிருந் தருள்புரி மண்டப மிழைத்தார்.

சிமைய மால்வரை யெனச்சிறந் தொளிருமண் டபத்தி
னமையு மாதனத் தங்கணன் வீற்றிருந் தருளி
யுமையை நோக்கிநீ யோகுழப் பதின்வினா யினையாற்
சமைய மாறுமுய்ந் திடவது கேளெனச் சாற்றும்.

உலக மியாவையு மோங்கிய நமதருள் வழியி
னிலவு நீர்மைய தாதலி னிழன்மணிப் பூணா
யிலக வாட்டிவா னாடிமுன் காட்டுமா றென்னப்
பலவு நாம்பயின் றுலகினைப் பயிற்றுதல் வேண்டும்.

ஆகை யான்மல பந்தமா கியவுயிர் மாயா
போக மார்தர நிற்றழீஇப் போகியா யிருந்தும்
யோக மாற்றிமெய்ஞ் ஞானமுற் றுயர்சிவ யோகத்
தேக மாகிவீ டெய்திட யோகியா யிருந்தும்.

விரைத்த மென்மலர் வாளியான் விளிந்தகா ரணமு
நிரைத்த வையகத் தியாவரு நேரிழை யவர்பால்
வரைத்த வின்னல நுகர்ந்தகா ரணமுமா னனையா
யுரைத்த வொண்பொரு ளிரண்டிற்குஞ் சான்றென வுணர்தி.

என்று கூறலு மகிழ்ந்துமை யிறைஞ்சியீ துரைக்கு
மொன்று மாமலத் தழுந்திய வுயிரெலா மாயைத்
துன்று போகமுற் றுனதருண் ஞானத்தாற் றுகடீர்
நன்று வீட்டினை நண்ணுமென் றுரைத்திநா யகனே.

## ஞானோபதேசப்படலம்.

இருளு மாமலம் யாதுயிர் யாதியா மாயை
கரும மியாதுமெய்ஞ் ஞானமியா தியாதுகாண் முத்தி
பொருவி லாவிவை யனைத்தையும் புகாற வடியேன்
றெருளு மாறரு ளுதியெனச் செய்யவாய் மலர்ந்தாள்.

சிலையு யிர்த்தவ ளின்னணம் வினவலுந் தெரிக்குங்
கலைம லர்க்கரத் தணிந்தருள் கண்ணுதற் பெருமா
னிலைமு கத்தபூ ணிளமுலை மாதரா யெல்லா
மலைவ றத்தெளிப் பாமதி யெனவிறை வழங்கும்.

காள வன்மல மூலந்தங் காலவெல் லைகளின்
மீளு மெண்ணருஞ் சத்திக ளுடையதாய் விரவிக்
கோளு றும்பசு வறிவினைக் கூட்டொடு மறைக்கும்
வாளு றும்பல விழியினை மறைத்திடு மிருள்போல்.

எண்ணி றந்தன சிற்றறி வினும்பல வியல்பி
னண்ணி நிற்பன சார்ந்ததன் வண்ணமாய் நவில்வ
வண்ணு சிற்றறி வினுஞ்சுதந் தரத்தன வல்ல
வுண்ண யந்தநா முணர்த்திடி னுணர்வன வுயிரே.

மாயை சுத்தமே யசுத்தமே யெனவிரு வகையா
மாய மாயைக ளிரண்டுமெய் யறிவுரு வல்லாற்
றேயு றுதநம் மருளினாற் றொழிலுற்று றுயிர்க்கு
மேய சீர்த்தனு வாதிக ளைங்குமாய் விரியும்.

கரும மென்பது மாயையே கருவிக ளாகத்
தெருள்வ ழங்குநம் மருளெனப் படுந்திரோ தானப்
பொருவில் சத்தியின் சகாயத்தாற் புல்லறி வுயிர்கண்
முருகு விம்மிய குழலினாய் முனைந்துசெய் தொழிலாம்.

புந்தி வாக்குரு வத்தினும புரியுமன் னதுதான
வந்து நல்லதுந் தீயது மெனவிரு வகையா
மந்த நல்லதுந் தீயதுஞ் சஞ்சித மாகிப்
பிந்தி யாருயிர்க் குணவுமாய்ப் பிறப்புக்கும் வித்தாம்.

உருவத் தாற்கரு மந்தவ வீட்டியு முருவங்
கருமத் தாற்றவ வீட்டியுங் காழ்த்தவா ணவமே
மருவத் தாழ்ந்தகே வலத்திடை மன்னிய வுயிரிற்
றிருவத் தாஞ்சக லத்தியா னெனதெனச் செருக்கும்.

இதமெ னப்படு நல்வினை யின்பமே பயக்கு
மிதமெ னப்படாத் தீவினை யின்னலே பயக்கு

# திருவானைக்காப்புராணம்.

மதர்நெ டுங்கணுமை மற்றவை யறிந்துசெய் வினையுங்
கதுவு நெஞ்சறி யாதுசெய் வினையுமாய்க் கலவும்.

புடைபெ யர்ந்திடும் வினைபுடை பெயர்தரா வினையென்
றடைவி னோதிய வவ்வினை யிவ்விதத் திரண்டாந்
தொடைம லர்க்குழன் மாயையுங் கருமமுந் தொகுத்துத்
தடைசெய் யாணவத் தொடுமல மூன்றெனத் தருமால்.

மாயை காரிய மானமா மாயையு நமது
தூய சீரரு ளனுந்திரோ தாயியுந் தொகுத்திட்
டாயு நூன்மல மைந்தென வறைவது முண்டாற்
றேயு நூலிடை வருத்திய திதலைமென் முலையாய்.

இனைய வைம்மல பந்தமு மிரண்டெனும் பழைய
வினையும் வன்மல வேருமான் மாவினுக் கல்லாற்
றினையு நந்தமக் கில்லைநந் திருவரு ளொழிய
வனைய மாயையுங் கருமமு மாவியு மசையா.

இந்த மாயையுங் கருமமும் பந்தமே யிவற்றைத்
தந்த தாருயிர்க் கென்னெனிற் சாற்றுதுங் கேண்மோ
முந்து மாணவ முரண்கெட மூட்டின மாசு
சிந்த வேறுமா சறுவையிற் செறித்திடு மாபோல்.

படைத்த லும்புவ னங்களைப் பாதுகாத் தலும்பின்
றுடைத்த லுந்தக நிறுத்தலு மருடுறுத் தலுமென்
றடுத்த வைந்தொழி லயன்முத லைவரு மாய்நா
மெடுத்து நின்றன மாயினு மெமக்கிலை விகாரம்.

விரவு மாயையெம் முடைமையற் றாயினும் விடந்தா
னரவை யென்செய்யு மங்கியைச் சூடெவன் செய்யும்
பரவு மிந்திர ஞாலம்பண் ணுநரையென் செய்யுங்
குரவ மாலையா யெமக்கது கொடாதுகாண் மயக்கம்.

அல்ல தூஉமிரு ளாணவ மயக்குவ ததனு
னல்ல மாயையுங் கருமமு நாடிய வுயிரை
வல்ல வாறெலா மயக்குவ மயக்குமா ணவந்தேய்ந்
தில்லை யேலவை யுயிரையு மயக்குவ திலையே.

தேங்கு பேரொளி யாகிய சிவமெனு நாமு
நீங்கு றாதநஞ் சத்தியாய் நிலைபெறு மருளுந்
தூங்கு மாவியுந் தொடர்திரோ தாயியும் பிந்த
வோங்கு மாணவத் தெறுழ்வலி யுரைப்பரி தணங்கே.

## 5சப்படலம்.

கரிய வாணவந் தேயுமா கலந்தநஞ் சத்தி
யுரிய தாஞ்சிவ புண்ணிய முடன்விரா யூட்டும்
பெரிய வாட்கலுறய் பின்மல பாகமாம் பின்னர்
விரியுஞ் சத்திநி பாதம்பின் வினையொப்பு மேவும்.

ஆய வேலையின் மலமென வறைதிரோ தாயி
மாயி ரும்பொருள் யாவையு மாறவே மாறித்
தூய வின்னரு ளாகியே நின்றிடுந் தோகா
யேயு மிவ்வரு ளாலல திருதுயிர்க் கிருளே.

இச்சை ஞானமுங் கிரியையு மானவிவ் வருளே
துச்சி லாகிய கலாதியிச் சையுந்தொலைத் திட்டு
வெச்செ ஞணவம் விழுங்கிடப் பட்டவா ருயிரி
னிச்சை யாதியும் விளக்கியுள் ளிருத்திமே லாகும்.

பிறிவு ருதவெம் மருளினு லெம்மையும் பெயரா
மறிவி னீங்கிய தன்னையு மிலவறத் தெரிந்த
வறிவு பானுவின் விழியென வெம்முளே யடங்கிச்
செறியு மானந்த மொன்றுமே திளைக்குந்தே மொழியாய்.

மருளி ஞன்முத லென்றலு மன்னுயி ரருள்கண்
டருளி ஞன்முத லென்றலு மருண்முத லென்றந்
தெருளி லாததி லழுந்தலுந் தீர்ந்தெம்மோ டறிவா
யிருள்செய் கேவலம் போற்கலந் திருப்பதே முத்தி.

பேத மாகிய பாவனை பேணுவ தெல்லா
மேத மாகிய பந்தமே யெனதியா னெனுமால்
போத வாருயி ரபேதபா வனைபுரி வஃதே
மாத ராயுயர் முத்தியென் றுரைத்திடு மறையும்.

பரிதி முன்னிரு ளனமலம் பரையிடை மாயுங்
கருவி முன்பகல் விளக்கொடு கடுக்குமூ மொன்றே
மருவு மன்னதுங் கருணையால் வாங்குவம் யாமே
பொருவில் சஞ்சித முன்னரே யழிந்தது பூவாய்.

என்ற வூழுட லிருத்தலி னேறும்வல் வினையுந்
தோன்று மேற்றிரு வெழுத்தினைச் சூழ்ந்திடி னழியுஞ்
சான்ற வீட்டினைச் சார்ந்தவர் தமக்குமா லையமுன்
மூன்று மார்வமோ டிறைஞ்சதன் முறைமையா மணங்கே.

தொடுத்த நின்பெருங் கடாவினுக் கவிர்போலங் தொடியாய்
விடுத்த னம்விடை யறிகென விமலனு ரருள

மடுத்த வன்பொடு கேட்டமால் வரைமக ளோடுந்
தடுத்த வைம்பொறி நந்தியுஞ் சம்புமா முனியும்.

அருளெ லாமுளத் தழுத்தினர் தெளிந்தனர் நிட்டை
மருளெ லாந்தப மருவினர் மன்னுமுப் பாழு
மொருவி மேற்பெரும் பாழெனு முலப்பிலா னந்தப்
பொருளொ டேகமாய்ப் பொருந்திடு முத்தரா யிருந்தார்.

சீவன் முத்தியே திகழ்பர முத்தியே யென்ன
மேவு முத்தியோ ரிரண்டினு மேவின ராகி
மூவ ரும்பணி முயன்றிருந் தனரயன் முயன்ற
தேவ ருந்தொழுந் திருவிழாத் திறமினித் தெரிப்பாம்.



# திருவிழாப்படலம்.

பொறிவண் டுழக்க முறுக்கவிழ்ந்து புதுத்தேன் றளிக்குஞ் செழுங்கமல
நறுமென் பொகுட்டு மலர்த்தவிசி னன்கு தலைப்பண் ணவனைவற்
செறிமென் னிழலில் வீற்றிருக்குந் தேவர் தேவ னருள்வரத்தா
னெறிநின் றினிய திருவிழா நிலத்திற் புரிவா னிதுசெய்தான்.

புரிசை யாதி பலவுறுப்பும் பொருப்பென் றெவரு மதிசயிப்ப
வரிசை யாக வாலயநூன் மரபின் வகுத்துக் கிரணங்கள்
விரிசெய் மாட மாளிகைகள் விறந்த பலவீ தியும்போக்கித்
துரிசி லாத மணிநகரந் துறக்க நாண நிருமித்தான்.

நெகிழன் புருக்க வகிலாண்ட நிமலை யுருவ மிருந்தாங்கே
திகழ வுளத்திற் றியானித்துச் சிற்பம் விளங்கத் திருவுருவொன்
றகில வுயிருங் கதிசேர வமைத்து நிறுவிப் பூசித்துப்
புகழைங் கரன்வேண் முதலான புலவ ருருவு மினிதமைத்தான்.

செம்பொன் மணித்தேர் கடாங்கவிழ்க்குஞ் சினவெங் களிறு வாம்புரவி
யம்பொற் சிவிகை கவிகைகொடி யால வட்ட மயிர்க்கவரி
யிம்பர் விழையும் பலபொருளு மீண்ட வாக்கி விழாமுடங்க
லும்பர் முதலோர் வரவிடுத்தா னுலக மாக்கும் பணிதொடுத்தான்.

முடங்க லேற்று மலர்த்தவிசின் முறையி னிருத்தி முடிதாழ்த்தி
மடங்க லறியா மகிழ்சிறப்ப மதர்க்கண் மடமா தர்களோடு
மிடங்கொள் வானத் திமையாரு மெண்மா திரரு முரகர்களும்
விடங்கொப் புளிக்கு மணிவேற்கை வேந்தர் பலருஞ் சென்றிறுத்தார்.

வம்பு விரியுஞ் செழுங்கமல மலர்மேல் லணையான் மகிழ்சிறப்பக்
கும்ப மதியிற் கார்த்திகைநாள் குலவுந் தினத்தி லியமியம்ப
வும்பர் முதலோர் புடைசூழ வொளிர்மண் விதியாற் றினிற்கவர்ந்து
பம்பு மணிப்பா லிகைபலவும் பரப்பிச் சொரிந்து முளைதெளித்தான்.

வழிநா ளடுத்த வுரோகணியின் மதவெள் விடையை யிலேகித்த
செழிவான் படத்திற் பூசித்துத் திகழு மிருக சீரிடத்திற்
கழிவா னவர்க டொழுஞ்சோமாக் கந்த ரெதிரே யெழுந்தருளப்
பழிதீர்ந் துலக முழுதுய்யும் படிவார் கொடியிற் பசுவுயர்த்தான்.

அந்நாண் மாலை முதலாக வந்த நாளுக் காறென்னு
நன்னாட் காலை யீறாக நவிற்று மீரைங் காலத்தும்
பொன்னார் மணிக்கிம் புரிக்கோட்டுப் புத்தேண் முருக வேளிவர்க்குக்
கொன்னா தரவிற் றிருவிழாக் கோலம் பிறங்கக் குயிற்றினான்.

ஆறாந் திருநாண் மாலைமுத லாக வொன்பா னாட்காலை
யீறாங் கால மோராறு மிருண்மா மலத்தி னிகல்கடந்து
வேறாய்ச் சிவத்தி னொன்றாகி விளங்கு நீறுங் கண்மணியும்
பேறாத் தரிக்கு மடியார்க்குப் பிறங்கத் திருச்சா றினிதெடுத்தான்.

ஒன்பான் றிருநாண் மாலைமுத லாக வொருபன் னிரண்டாநா
டன்பாற் காலை யீறாகச் சாற்று மாறு காலத்து
மன்பா தரவிற் கலியாண வழகர் தமக்குத் திருவிழா
நன்பார் முழுதுங் களிதூங்கி நவையிற் றீர வினிதமைத்தான்.

ஒருபன் னிரண்டாந் திருநாளி னுற்ற மாலை முதலாகப்
பொருவில் குண்ட மோரைந்திற் பொங்குந் தழலா குதியோம்பி
மருவு மிருநாற் றிசைமுழுது மனுவாற் றகைத்துப் பலியோக்கிச்
செருவின் மலியத் திரதேவர் தமக்கு விழாமுன் செய்திட்டு.

பதினே ழனவந் திடுந்திருநாட் பயின்ற காலை யீறாக
விதியா னின்ற வீரைந்து காலத் திடத்தும் வெவ்வேறு
கதிசே ரூர்தி மேல்கொண்டு கவின்சந் திரசே கரர்போத
நிதியார் பலருந் தானங்க ணிகழ்த்தி வணங்க விழாவெடுத்தான்.

அந்தப் பதினே ழனுந்திருநா ளந்திக் காலத் திமிலேற்றுச்
சந்தப் படமோ ரெட்டினையுந் தயங்கப் பூசை யினிதமைத்துப்
பந்தப் பழைய வினைமுருங்கப் பதினெட் டெனுநாட் காலைதனில்
வந்தப் பணிந்தா ரெதிர்நிற்ப வயங்கெண் கொடியும் பசுவுயர்த்தான்.

ஒன்பா னிரட்டித் திருநாளென் றுரைத்த வைகன் முதலாக
வொன்பான் மணிக்குண் டமுஞ்செந்தீ யொளிர வந்நாண் மாலையினில்
வன்பார் மகள்செய் தவம்வாய்ப்ப மணிநித் திலப்பந் தரினீழ
லென்பா பரணப் பெருமானா ரெதிரில் வீசி யுலாப்போந்தார்.

புணரு மிடனாம் வரைக்கிள்ளை பூங்கைக் கருப்புச் சிலைமலர்க்கோ
லணைவு தொழிற்கேற் புறக்கிரியி னணங்கு செலுத்த வவட்கினிய
கணவர் பூத நாதரெனக் கரையும் பெயர்க்கேற் புறப்பூதத்
தணிவி னூர்தி பத்தொன்பா னாளிற் றயங்கக் கடாவினார்.

திருமா றனது கூறேயாஞ் செயலைத் தெரித்தாங் கவனணையை
யொருபா லுமையாள் கொளக்கொடைமைக் கொருவ ரிவரே யெனவெவை

# திருவிழாப்படலம்.

மருளா துணரக் கொடைவழங்கு மலர்க்கற் பகத்தை யண்ணலா
ரிருபான் றினத்திற் றிருவீதி யெழில்கொப் புளிப்பத் தூண்டினார்.

மன்ற வடியார் புரிகுற்ற மதியா தவர்செய் குணங்கொள்ளு
நன்றி தெரித்தாங் கறனீக்கி நற்பா லுணும்புள் ளுமையூரக்
குன்று நினைந்தாங் கியல்கொள்கை கொள்ள வெவருங் கயிலாய
மொன்று தலைப்பெ யிருபானா ளுவப்புற் றிறைவ ரூந்தினார்.

தரும விடையு மால்விடையுஞ் சகல பொருளு மொருபாதி
மருவு வுருவிற் பாதியுறு மாதுந் தாமும் பகுத்தாங்குப்
பொருவெள் விடைகள் வெவ்வேறு பூங்க ணுமையு மொருதாமுந்
தெருவி னிருப திரண்டாநாட் செம்மற் சிவனார் நடாவினார்.

மூன்று தலைப்பெய் யிருபதென மொழியுந் திருநா ளவிர்செம்பொ
னான்ற மணித்தே ரைங்கரனு மயில்வே லிறையுஞ் சண்டனுங்கான்
கான்ற வெறிப்பூங் குழற்கொடியுங் கதுமென் றுகைப்பப் புரமடுநாட்
சான்ற நிலத்தேர் பொருமணித்தேர் சங்கத் தலைவ ருருட்டினார்.

விலங்கற் கரசன் றரமகளிர்க் கரசாய் விளங்குந் தனக்கியைய
விலங்குக் கரசை யகிலாண்ட விமலை யுகைப்ப வமுதேசர்
மலங்க டுமித்தார் வடிவிடத்தும் வதித றெரித்தாங் கருண்மயமா
யிலங்கு நந்தி தனையறுநான் கென்னு நாளி னியக்கினார்.

ஐயைந் தெனவந் திடுந்திருநா ளாந்தோ ளியின்மா துமையேக
வையந் தரித்த வயிற்றிவுளி மல்குங் கலியிற் றீயோர்க
ளையுந் திறஞ்செய் வரம்பெறவா னாடிச் சுமந்த தெனவணப்புச்
செய்யும் புரவி மேற்கொண்டு செக்கர்ச் சடையா ரூக்கினார்.

பயில்வா னவர்கள் பலர்காவப் பசும்பொற் குழைக்கா துமைமாது
செயிர்தீர் சிவிகை மேற்கொள்ளத் திகழ்ந்த வாதிப் பெருஞ்செல்வப்
பெயரா தரிக்குஞ் செயற்கேற்பப் பேணு மிருபத் தாறுநா
ளயிரா வணத்தை வெண்ணாவ லடிவீற் றிருந்தா ரினிதுகைத்தார்.

மன்றி னடிக்கும் பெருமானார் வயங்க விருபத் தேழாநா
ளொன்றும் விடியற் சிறுகாலை யுவப்பக் காட்சி கொடுத்ததற்பி
னன்று வருமு ரோகணிகண் பகலி னயனார் தீர்த்தத்திற்
கொன்றை முடியா ரிருந்தீர்த்தங் கொடுத்தா ருலகங் குறைதீர.

அந்நாண் மாலை யெண்கொடியு மாண்ட பசுவே றினிதிறங்கப்
பின்னு மிருபத் தெட்டாநாட் பேணு மாலை முதலாக
முந்நாண் மாலை யீறாக மூன்று பொழுதுஞ் சிவிகையின்மே
லென்னாள் பள்ளி யறைப்பெருமா னெழிலார் கோயி லுலாப்போந்தான்.

மோன முறுநற் றிருவிழா முப்பத் தொருநாண் முதலாக
வீன மகல மூன்றுநா ளியங்க முப்பத் தொருநான்கென்
றுன தினமுன் மூன்றுநா ளருள்சேர்ந் திலகு சண்டீச
னூன மகன்ற மணிமுத்தி னூர்தி நிழலி லுலாப்போந்தான்.

மொழிந்த சண்டன் றிருவிழா முடிவா முப்பத் தாறுநா
ளிழிந்த குணத்தார் மனமேபோன் றிருண்ட கங்கு விணர்மலர்கள்
பொழிந்து புலவர் போற்றிசைப்பப் போற்று மடியார் மும்மலமு
மழிந்து விடமற் றொருகொடியி னூனே றிறக்கி யயன்றொழுதான்.

மறைசூத் திரமே புராணமே வயங்கு கீத மேநிருத்த
நிறைவாத் தியமே யெனவைந்து நேரே யியம்ப வளமெல்லா
முறையா நின்ற வுட்சூழன் முதலா வரண மோரைந்து
மிறையார் முப்பத் தேழாநா ளிமையார் வியப்ப வுலாப்போந்தார்.

துணிநீர்ப் பாங்கர்ச் சூழ்போக்கித் தோடார் மலர்கண் மிகப்பெய்து
மணியா னிரைத்த மண்டபத்தின் வதிந்து முப்பத் தெட்டாநா
ளணிநீ ராடிக் கலவைமுத லணிந்து சுவையா றுணவயின்று
பணியா பரணப் பெருமானூர் பற்றும் விடாயைப் பாற்றினார்.

அற்றைத் திருநாள் வளர்மாலே யவிர்நித் திலப்பந் தரினீழற்
கொற்றக் கவிகை சாந்தாற்றி கோலக் கவரி கொடிபிறவும்
பற்றிக் கடவு ளார்போற்றப் பவனி யினிது போந்திறைவர்
முற்றக் கவினு மணிக்கோயின் முன்னி யுமையோ டமர்ந்திருந்தார்.

இவ்வா றுதிப் பெருஞ்செல்வர்க் கியைய வாதிப் பிரமனார்
செவ்வாய் மையினு லினிதெடுத்த திருவார் விழாவை மானிடரு
மவ்வா னவரு முவந்தாதிப் பிரமோச் சவமென் றன்றுமுதற்
றவ்வா வமிழ்தங் கண்டாரின் வருடந் தோறுந் தொழாநின்றார்.

ஆதிப் பிரமன் றிருவானைக் காவி னமர்ந்தார்க் கினிதெடுத்த
காதற் சிறப்புத் திருவிழாக் கவினைப் புரிந்தோர் தெரிசித்தோர்
தீதற் றவனி முழுதாண்டு தேவர் போகம் பெரிதார்ந்து
சாதற் பிறப்பிற் றலைப்படாத் தனிவீட் டின்பத் தழுந்துவார்.

மூவா முதல்வன் றிருவிழா முடிவிற் பிரம தீர்த்தத்தி
னோவா வன்பிற் படிந்தோரு முலக முழுது மொருதிகிரி
தாவா துருட்டி விண்ணுண்டு சனன மரணப் பெருந்துக்க
நீவா வளர்பே ரின்பநல நீங்கா நிலையிற் றூங்குவார்.

திங்கட் கடவுள் கதிர்க்கடவுள் சேரு முவாத்தோ றொருவருடந்
தங்கு மனைய தீர்த்தத்திற் சார்ந்து படிந்து வெண்ணுவற்

## திருவிழாப்படலம்.

பொங்கு நிழலின் வீற்றிருந்த புனிதர் பாதம் போற்றிசைத்தோர்
துங்க வினையும் பெரும்பிணியுந் தொலைத்தா னந்தத் துறைபடிவார்.

செந்தா துகுக்கு நறுங்கமலச் செம்ம லெடுத்த திருவிழா
நந்தாச் சிறப்பிற் சிறிதுரைத்தா நல்ல தவத்தீர் தசரதன்பால்
வந்தான் வினையி னரக்கனுயிர் மாற்றி னற்கு வரப்பலவுந்
தந்தார் சரிதங் கேண்மினெனச் சாற்றுந் தவத்தி னுயர்சூதன்.



# நீலவிண்டுவீச்சரப்படலம்.

சுரர்க்கு மாற்றல ஞகிய தோல்வியில் வலியோன்
பரக்கு நீர்க்கட ஞப்பணே பயின்றிடு மிலங்கை
யரக்க ஞருயிர் பருகிய வலைகடற் றுயின்று
புரக்கு நாயகன் றசரத ராமனுய்ப் போந்தான்.

தந்தை யேவலில் வனத்திடைச் சரித்திடு நாளில்
வந்தி ராவணன் சீதையை வெளவின னேக
முந்து மானமுந் துயரமு மொருங்குற முடிப்பா
னந்தி வண்ணர்தம் மடிதொழு தருண்மிகக் கொண்டான்.

உடங்கு நின்றதன் னிளவலுந் தானுமொய் யெனச்சென்
றடங்க லாருளம் பனிப்புறு கிட்கிந்தை யமரு
மடங்கு முவிறல் வானரப் படையொடும் வளைந்த
விடங்கொ ளாழியிற் சேதுசெய் திலங்கையிற் புக்கான்.

வெம்பு கின்றவல் லரக்கர்தம் விழுப்படை யோடுங்
கும்ப கன்னனை யிராவணன் றனையுயிர் குடியா
வும்ப ரேக்கறு மிலங்கையை விபீடணற் குதவி
வம்புண் கோதையை யுடன்கொண்டு வழிக்கொண்டு மீண்டான்.

தண்ட மேந்திய கரத்தினர் தயங்கிதழ் மடித்துண்
டண்டம் விண்டென வார்த்திடும் வாயினர் வெருவக்
கொண்ட வாக்கைய ராய்க்கும்ப கன்னனுங் கொற்ற
மண்டி ராவணப் பதகனும் வளைத்திடக் கண்டான்.

மாயை யாலிறந் திடுமுடன் மரீஇயம ருடற்ற
மேயி ஞர்கொலோ வெனவெரீஇ யையமுற் றவர்தஞ்
சாயை யேயிவை தம்மையுந் தாக்குது மென்று
நாய ஞருருச் சேதுவி னிரீஇயங் கெழுந்தான்.

கொன்னி ராவணச் சாயையே யொழிதரக் கும்ப
கன்ன னேர்வருங் கதழுருச் சாயைகை யகலாப்
பின்ன ரேதொடர்ந் தலைசெயப் பிணிப்புறு மனத்தா
னின்ன சாயைமற் றெங்ஙன மிறுத்துமென் றிறப்பான்.

## நீலவிண்டுவீச்சரப்படலம்.

நங்கை பாகற்கு நிழல்செயு நாவன்மா நகரிக்
கைங்கு ரோசமென் றறைந்திடு மெல்லையை யடுத்தான்
பொங்கு காரிரு ளிரவிகண் டெனப்புலர்ந் தாங்குத்
தங்கு மேனவன் சாயையுந் தணந்திடக் கண்டான்.

வினையென வுடன்றொடர் வெய்ய சாயைநோய்
தனையகன் றொழிதலுந் தசர தப்பெயர்
புனைமனு மன்னவன் புதல்வ னேகையோ
டனையதொன் னகரியி னகத்தை நண்ணினான்.

திரைசெயுங் காவிரித் தீர்த்த மாடிப்பின்
றரைசெயுந் தவப்பய னென்னத் தங்கிய
விரைசெய்பஃ றீர்த்தமும் விழைந்து தோய்ந்தனன்
வரைசெய்பொன் வில்லிமுன் வணங்கி னானரோ.

அரிக்குரற் கிண்கிணி யலம்புஞ் சீறடி
வரிக்கயற் கண்ணகி லாண்ட வல்லியைத்
தரிக்குமெய் யன்பொடு சார்ந்து தாழ்ந்தனன்
பரிக்குமுள் ளோகையம் பரவை தோய்ந்தனன்.

கனிவொடுங் கோயிலைக் கைய கன்றவண்
முனிவர ரிருந்தவர் முன்வ ணங்குபு
துனிவுசெய் சாயையந் தொலைவு கூறினா
னினிதெனக் கேட்டவ ரிராமற் கோதுவார்.

தாங்கிய பெரும்புகழ்த் தலனுந் தீர்த்தமு
மோங்கிய மூர்த்தியு முத்த மத்தன
வீங்கிவ ணலகையே யிராக்க தம்பிணி
தீங்கெனப் படுவன யாவுஞ் சேர்தரா.

ஆதலி னீங்குறு தப்பு றத்தினே
பாதகப் பழியுறுப் பாறிற் றிங்கர்
நீதவிர் தரினுறும் யாங்கு நீங்கவே
யாதுசெய் தக்கதீங் கதுசெ யேந்தலே.

செய்யித்தை சிவலிங்கப் பதிட்டை சிந்தையை
வையித்தை யச்சிவன் மாட்டு நீர்மலர்
பெய்யித்தை பேணுமிப் பூசைப் பேற்றினாற்
கொய்யித்தை நினைத்தொடர் கொலையை யென்றனர்.

துறவர்க ளின்னணந் தொகுத்துக் கூறலு
மறம்வளர் கிருதக ரயோத்தி காவல

னுறவிகல் கடந்தவ ேனுக்கு பேரருள்
பெறவடிப் பூசனை பேண வெண்ணினன்.

அங்கதன் றன்னைக் கூவி யருட்சிவ லிங்கந் தானென்
றிங்குநீ கொணர்தி யாலென் றேவின னிருப்பைச் சூழற்
றங்கிய தீர்த்த மொன்று சந்நிதி தனக்கு மேல்பாற்
பொங்கழ கெறிப்பக் கண்டு போந்தவண் வசித்தா னாக.

ஆண்மையின் மிக்க திண்டோ ளங்கத னேகி ஞானக்
கேண்மைமிக் கருளுஞ் சாளக் கிராமமால் வரையைச் சார்ந்து
மாண்மதி யறிவிற் றேர்ந்து மரகத விலிங்கங் கைக்கொண்
டேண்மலி யிராமன் பாங்க ரெய்தின னிராம னிப்பால்.

சிற்பநூல் விதியி னுற்றுச் சிவலிங்கத் தளவைக் கேற்பக்
கற்பகிர்ந் தனைய தீர்த்தக் கரையின்மேல் பாங்கர்க் கோயில்
பொற்புற வமைத்திட் டாத்தன் புகன்றநூல் விதியிற் றாபித்
தற்பகங் கனியப் பூசை யாற்றினன் பரசு வுற்றான்.

எறுழ்வன் கணக்கட் கிறையவனு யிமையா ரெவர்க்கு முத்தமனாய்
மறுவில் வலிமிக் காரெவர்க்கும் வலிமிக் குடைய வீரனாய்ப்
பெறுதற் கரிய கவிக்கெல்லாம் பிறங்குங் கவியா மைங்கரனைத்
தெறுவல் வினைக டெறவளித்த தேவ தேவன் சரணடைந்தாம்.

வேத முடியுங் காணரிய விமலா னந்தப் பெருகொளியை
யேத முயிர்கட் கறப்பணிக்கு மெங்கு நிறைந்த பராபரனைப்
போத மகன்றே ரேகமாய்ப் புசிக்கு மேலாம் போகத்தைச்
சாதல் பிறப்பிற் றலைப்பட்ட தமியே னுரைப்ப தெவ்வாறே.

விரியும் வித்தை யனைத்தினையும் விளக்கு மிறையாய் மறைமுடிக்கு
மரிய பொருளா யிருந்தாலு மடியார்க் குரியன் மதிசூடி
பெரிய கருணைத் தேவேசன் பிறங்கு நீலப் பொன்மயனாய்த்
தெரிவித் தலினப் பசுபதியைச் சிந்தை மகிழப் பழிச்சுவேன்.

எண்ணி லுயிர்க்குந் தனதருளை யீயும் பொருட்டுப் பலவுருவாய்
நண்ணி யுலகுக் கைந்தொழிலு நடத்தி யந்த வுலகத்திற்
பண்ணி னிசையு மலர்மணமும் பழத்தின் சுவையு மெனநிற்கு
மண்ண லெவனே வவனடியை யன்பி னாரப் பரசுவேன்.

ஈச னுடைய தாய்மரண மிரிக்குந் திறத்த தாயீசன்
றேசு விளங்குந் திருமுகங்க ளைந்தி னிடத்துந் திகழ்ந்ததாய்ப்
பேசை வைந்து விதமான பெருமந் திரம்யா
பாச வினைகள் பறிந்தோடப் பனுவ லாற்றிற்

சத்தியமாய்ப் பரப்பிரமந் தானாகிச் சிவாக்கியமாய்ச் சாந்த மாகி
மெத்திரத மாயேக மாயனந்த ரூபமாய் விளக்கஞ் சான்ற
வுத்தமமா யிருக்குமென வுயர்ந்தவரா லுவந்துரைக்கப் பட்டு நிற்கு
மத்தகுமந் திரந்தனையே யடியேனுஞ் சரணமென வடையா நின்றேன்.

மாகாய வாசுகிநாண் மாமேருச் சிலைமாயப் பகழி யேந்தி
யேகாத நிலத்திண்டேர்க் கிரவிமதி கோத்தியக்கி யெயின்மூன் றட்டுப்
போகாத புகழ்நிறுத்த புண்ணியனைப் புகழ்க்கால காலன் றன்னை
யாகாச கேசனைமா புருடனைமா கேச்சுரனை யறியா நின்றேன்.

ஒளிக்கொளியா யேகமாய்ச் சாந்தமா யாதியந்த மொன்று மில்லா
வளிக்களியாய்ப் பிரமமாய்ச் சிவமாகி யானந்த மயமா யெல்லாந்
தெளிக்குமொரு சித்தாகிச் சத்தாகிச் சதசத்தின் செயிர்தீர்த் தின்பம்
வளர்க்குமிறை யெவனந்தத் தேவதே வன்பதத்தை வணங்கா நின்றேன்.

உக்கிரமாய்க் கோரமாய்ப் பயங்கரமா யிருக்குமொரு தனுவை விட்டுத்
தக்கபெரு மங்கலமாய்ச் சாந்தமா யிருக்குமொரு தனுவி னாலே
மிக்கபெருங் கருணையினா லெனைக்காக்க வேண்டுமென விமலா வுன்னைப்
பொக்கமிலன் பானறிய பூழுதற்பல் பொருள்கொண்டு பூசிக் கின்றேன்.

கங்கை நதியு மிளம்பிறையுங் கதிர்க்குஞ் சடிலத் திடைவிளங்க
மங்கை யுமையா ளிடப்பாலின் வயங்க வடியேன் பூசைகொள
விங்கண் விரைவி னெழுந்தருளல் வேண்டு மடியா ரிரும்பேறே
செங்கை மலரி னழலேந்துஞ் செல்வா தேவர் சிங்கமே.

பாவிக்கப் படுவானும் பண்ணுரைத் தோத்திரிக்கப் படுகின் றானுந்
தேவர்க்கு மேலாக விருப்பானுஞ் செறியிதழ்த்தா மரையோ னாதி
மூவர்க்கு முதலான நாயகனு மூவரையு முயிர்த்தான் றானும்
யாவர்க்கு மிறையவனும் யாரந்த மகேச்சுரன்மற் றென்னைக் காக்க.

சத்தியோ சாத ரெனும்பெய ருமக்குத் தங்கலாற் றமியனே னீங்குப்
பத்தியாய்ப் பதிட்டை புரியருட் குறியிற் பதிந்துவல் விரைந்தென துள்ளந்
தித்தியா நிற்ப விட்டகா மியங்கள் செறித்திடக் கடவது நுமக்கே
யத்தரே யந்தச் சத்தியோ சாத ராகிய நும்மையான் றொழுதேன்.

மங்கல மருளு மஞ்சனே தேவ தேவனே மலிந்தவென் பாவ
மிங்குமுற் றகற்றிச் சுகத்தினை யருள்க வெம்பிரா னெனக்கருள் சுரக்க
வெங்கிருந் தனினு மங்கணே விரைய வெழுந்தருள் சொரூபராய் விடையாத்
துங்கவெண் கவச ராயுருத் திரராய்த் துலங்கிய நும்மையான் றொழுதேன்.

உள்ளகக் கமலத் தமர்ந்தநா யகரே யொளிர்சடை மதியுமி ழமிழ்த
வெள்ளமிக் கொழுகி னனைதிரு மேனி விமலரே யம்பிகேச் சுரரே

தெள்ளொளி யிரவி மண்டலத் திருக்குந் தேவரே திகழொளி மயரே
தள்ளரு மகிழ்ச்சி தலைக்கொள விதயந் தனிலுமைத் தியானியா நின்றேன்.

இந்தவடி யேன்றன்னை யந்தவுன தருளொழிலா ருனது தாளிற்
பந்தமுடை யவனாகப் பண்ணுகமற் றதுதாய்போற் பரிந்து காக்க
சந்திரசே கரதேவ சம்போமா திரமன்னந் தலங்க ளான்க
ணந்துவன மனைத்தினுக்கும் பதியாகு நின்பாத நளினம் போற்றி.

கந்தமா ருறு சுவையினு லுண்டி கனியொடு மூட்டுதுஞ் சோமாக்
கந்தராய் விடைமேற் கொண்டெழூந் தருளிக் கைக்கொள்க சங்கர னீசன்
சிந்தைமா சகற்றுஞ் சிவனணி மாதி சித்திகள் சேவியா நின்ற
முந்தனு கையினு லெண்குணச் செல்வ முதலிலா முதல்வதந் தருள்க.

கருமத்தா லறுசுவையாற் புத்திரராற் பவுத்திரராற் கவிகை தனனுற
திருவத்தா லணிமாதி சித்திகளான் மனவாக்குத் தேகந் தம்மாற்
பருவத்தா லொன்றுனு மடையாத முத்தியினைப் பரம ஞான
வுருவத்தா லடைவிப்பா னெவனவனு கியவுன்னை யுரையா நின்றேன்.

குறிகுணங் கரணம் வடிவமா திகளாற் கொளப்படடான் யாவனே வவனை
மறுவறப் பயின்ற யோகிய ரவனை வாஞ்சையி னறிந்தமாத் திரத்திற்
செறிதரு பவங்கள் விளைத்திடு மலநோய் சிதையயா னெனதெனச் செருக்கா
வறிஞராய் முத்த ராகுகின் றுரோ வவனையே வந்தியா நின்றேன்.

தருகவிழி யினைச்செவியைத் தருகபிரா ணனைத்தருக தருக வாயுண்
மருவலரைப் புறங்காண்க மரணத்தைப் போக்குகவெம் மருங்கு மென்பால்
வெருவரலென் றபயத்தைக் கொடுக்கசமு சாரத்தின் விலக்கி யாள்க
விருடருசத் தாதியினின் றெடுக்கவடி கேணும்மை யிறைஞ்சா நின்றேன்.

வாளவுணர் நஞ்சொழுகும் வாலெயிற்றப் பணிபாவம் வறுமை நோயென்
றூளையிடத் தொடரிடரி னொழித்தாள்க பெருஞ்செல்வ முலவா வின்ப
நாளுமினி நீண்டவருள் சுரக்கதே சினைப்புரக்க நளினப் போதொத்
தாளுமலர்த் தாளிணையி னன்பருள்க வமரருக்கு மமர போற்றி.

இராசதவன் குணத்தோடு முலகமெலாம் படைப்பவனு யிருந்தாய் போற்றி
பராவலுறுஞ் சாத்துவிதத் தொடுமுலகம் புரப்பவனுய்ப் பயின்றுய் போற்றி
விராவியதா மதகுணத்தி னெடுமெழிக்கு முருத்திரனுய் மிளிர்ந்தாய் போற்றி
வராகமுத லுருவாயு முகந்தொறும்புல் லாரைவதைக் கின்றுய் போற்றி.

யாவொருவன் றன்விரையாக் கலியினல் வெரீஇயியம னிரியா நிற்கும்
யாவொருவன் றன்விரையாக் கலியினு லிரவிமதி யியங்கா நிற்கும்
யாவொருவன் றன்விரையாக் கலியினற் கடல்கரையி னிகவா நிற்கும்
யாவொருவன் றன்விரையாக் கலியினுயி ருணருமவ னிணைத்தாள் போற்றி.

## நீலவிண்டுவீச்சரப்படலம்.

குருதியுமிழ் முத்தலைவேல் குடங்கையணிந் தோய்நினது கோபம் போற்றி
மருவலர்க்கு நிலையாமை வல்லையுத விடுநின்கை வாளி போற்றி
யொருவவையு நிகராத கனகவரைச் சிலைவாங்கு மொண்டோள் போற்றி
கருதலரைப் பறந்தலையிற் கடக்கவெனக் குரனளித்த கருணை போற்றி.

எவ்வாயுந் திருமுடிக ளெவ்வாயு மொளிநுதலெவ் வாயுங் கண்க
ளெவ்வாயுந் திருச்செவிக ளெவ்வாயுஞ் செவ்வாயெவ் வாயுந் தோள்க
ளெவ்வாயுந் திருக்கரங்க ளெவ்வாயுந் திருவயிறெவ் வாயுந் தாள்க
ளெவ்வாயுந் திருமேனி யெனநிற்குந் தனிமுதல்வ னெம்மைக் காக்க.

எம்பெருமான் திருவடிப்பூ சனைபுரிந்து மேத்தெடுத்து மிருண்ட பாச
நம்பிநருக் கறுத்தருளு நாமத்தை நாவார நவின்று மேலாஞ்
செம்பொருள்சேர் புகழ்க்காதை செவிமடுத்துந் திருமேனி திகழக் கண்டு
மம்புவியி னிருக்கின்ற மடியேமை யீன்றவர்போ லருளிக் காக்க.

அஞ்சலென வமைத்தவொரு கரதலமும் வரதமென வமைத்த கையுங்
கஞ்சமல ரேந்துமிரு கரதலமு மூற்றிருக்குங் கருணை நோக்கும்
பஞ்சிகமழ் சீறடியு மழகெறிப்ப வணிகலன்கள் பலவுந் தாங்கி
வஞ்சமல விருள்சீக்கு மகிலாண்ட நாயகிதன் வடிவம் போற்றி.

என்றி ராம னியம்பிய தோத்திரம் யாவையு
நன்று சென்று திருச்செவி யேறலு நாதனூர்
மன்ற லோதி மடந்தையொர் பாகம் வயங்குற
வென்றி மால்விடை மேல்வெளி நின்றனர் காணவே.

கண்ட கண்கள் கவிழ்க்கு நறும்புனல் கால்செயாக்
கொண்டன் மேனிக் குரூஉக்கவ யம்பெறு சீற்றினை
வண்டல் செய்யக் கரைந்து கரைந்துவ ணங்கிறு
னண்டர் கோனருள் கூர்ந்தவற் கீதுரை செய்யுமால்.

இராம நீயெமை யேத்திய தியாவர்க ளேத்தினும்
பராவி யன்பொடு கேட்பினும் பல்பெரும் பாவமும்
விராவு தீயிடைப் பஞ்சென வெந்தவி யப்பெருந்
தராத லத்துயர் வாழ்வுந் துறக்கமுஞ் சார்வரே.

அடரும் வல்வினைச் சாயையு நீங்கி யயோத்திபுக்
கிடர்து ரந்துபன் னாளர சாண்டிருந் தெய்வமாய்த்
தொடரு மாந்தர்க்கு வேட்டவ ரங்கடு றந்திருள்
விடவு யர்ந்தநன் முத்தியை யந்தத்தின் மேவுதி.

சிறந்த மன்னவ செல்லுதி யென்று சிவபிரான்
மறைந்த னன்சிவ லிங்கத்தி ராமனும் வல்விரைந்

# திருவானைக்காப்புராணம்.

தறந்த ழைத்திடு பூசனை முற்றுற வாற்றிப்போ
யுறைந்த னன்னுல காண்டுதன் னூர்வயி னென்பவே.

நீல விண்டுநி கழ்த்துமெய் யன்பொடு பூசனை
சால வாற்றிய நீலவிண் டுப்பெயர்த் தாணுவை
ஞால மீதுப ணிந்தவர் நாமந விற்றினோர்
கோல நோக்கினர் தாமுங்கொ லைப்பழி தீர்வரே.

கையர் சாயை காக்குங் கரியமா லீச்சர
மைய சொற்றன மாங்குப் பராசர னங்கியிற்
பொய்ய ரக்கரைப் பொன்றிய காதையுங் கேண்மினென்
றுய்ய வையக மோதுத லுற்றனன் சூதனே.



# பராசரன்வழிபடுபடலம்.

சுந்தர மிகுந்தபொன் னகரிற் றெல்லைநா
ளிந்திர னரசுவீற் றிருக்கு மண்டபத்
தந்தரத் தமரரு மறிஞர் யாவருஞ்
சிந்தையின் மகிழ்கொளச் சென்று தொக்கனர்.

உத்தம வசிட்டனு முயர்ந்த விச்சுவா
மித்திர முனிவனு மேவி வைகினு
ரத்தலை யுள்ளவ ரவனி மாட்டெவர்
பொய்த்துரை யாதவ ரென்ற போதரோ.

மந்திர வசிட்டன்மன் னவர்க்கு மன்னரிச்
சந்திரன் பொய்சொலா னென்று சாற்றினுன்
வெந்திறல் விச்சுவா மித்தி ரன்முரண்
சிந்தையன் பொய்சொலச் செய்வ லென்றனன்.

வேந்தனொரு பொய்மொழியின் விச்சுவா மித்திரனே
காந்துமணி முடியமரர் கரிகண்டா யடுநரு
மாந்தியவந் தணன்போல வார்துகிலொன் றுடுத்தியமன்
பூந்திசையின் முகநோக்கிப் போதுவலென் றுன்வசிட்டன்.

தஞ்சமறை பயில்வாயாற் சபதமிட வசிட்டமுனி
வெஞ்சினஙீள் விச்சுவா மித்திரனும் விறல்வேந்த
னெஞ்சறிந்தே பொய்மொழிய நிகழ்த்தேனே னீயுரைத்த
வஞ்சினமற் றெனதாகு மெனக்கிளந்து வான்விடுத்தான்.

பூதல மருங்கு போந்து புகழரிச் சந்தி ரன்பா
லேதமெத் துணையு மாற்றி யிபன்மொழி மெய்யிற் றீரா
ஞுதலை யறிந்து தோற்று னரசனுக் கமர ரெல்லா
மேதகு வரங்க ளீந்தார் வேந்தனும் வணங்கிப் பின்னர்.

கடவுளீ ரறிவன் முன்னர்க் கதழ்ந்துரை சபதந் தன்னை
யடியனேன் பொருட்டுச் செய்யா ஞுதலே வேண்டு மென்னப்
படர்பெருங் கருணைத் தேவர் பார்த்திபன் பரிவு நோக்கி
மடனறு முனிவன் சொன்ன வஞ்சினம் புரிய லென்றுர்.

விரைசெறி கற்பத் தண்டார் விண்ணவர் வரங்கள் பெற்ற
வரசனங் ககன்று ளுனைஞ் சலைத்திட வசிட்டன் றன்பா
லுரைசெறி விச்சு வாமித் திரனுறு சீற்றங் கொண்டு
புரைசெறி வேள்வி யொன்று புரிந்தனன் மனுக்க ளோதி.

வெருவரு தோற்றஞ் சான்ற வெந்திறற் பூத மொன்று
கருவரை யென்ன வேள்விக் கனல்கெழு குண்ட நின்று
வருதலு மதனை நோக்கி வசிட்டனைக் கோறி யென்று
னுருவவல் லரக்க னாகி யொய்யெனச் சென்றப் பூதம்.

அருந்தவ வசிட்ட னந்நா ளியல்பினுச் சிரம நீங்கி
யிருந்தன னனையான் மைந்த னியற்பெயர் சத்தி யென்பான்
பொருந்தனை துயிலக் கண்டு பொள்ளெனக் கொன்று மீண்டு
திருந்திய விச்சு வாமித் திரனுள மகிழ்செய் தன்றே.

அருந்துதிக் கற்பின் மிக்கா ளவன்மனை மாது நோக்கி
வருந்திமிக் கழுத லோடு மருங்குளார் தாமுங் கூடிப்
பெருந்துய ருழக்கு மேல்வைப் பெருந்தவ வசிட்டன் போந்து
கருந்துய ருழந்து சோகக் கடலிடை யழுந்தி னானல்.

எந்திதழ்க் கமலச் செம்ம லிம்மென வங்குப் போந்து
வீந்தவ னென்ன வீழ்ந்த விழுத்தவ வசிட்ட னஞ்சி
ஞுந்துய ரகலத் தேற்றி யறைகுவான் சத்தி யாவி
போந்தன னென்று சாலப் பொருமிமிக் கவலஞ் செய்யேல்.

நுன்குலம் விழுப்ப மெய்த நுன்னுடை மருகி மாட்டு
நன்கரு வாய்ந்த தன்றே நற்றவ வஃதா னாகும்
பின்குல வரக்கர் தம்மைப் பெயரொடுங் கெடுக்கு மன்றா
டன்குலச் செவிகள் கேட்ப மறையெலாஞ் சாற்று கென்றான்.

மறையவன் றேற்றத் தேறி மருங்குளார் தம்மைத் தேற்றி
நிறைகுண வசிட்டன் சத்தி நேரிழை மனைவி கேட்ப
முறையுளி வேத மெல்லா மொழிந்தன னவற்றை யெல்லா
முறைதரு வயிற்றி னின்றே யுணர்ந்ததக் கருவிற் பிள்ளை.

ஐயிரு மதியு முற்ற வகட்டுறு கருவி னீங்கி
வையக மிடரு நீங்க வானக மகிழ்ச்சி துன்ன
வெய்யவல் லரக்கர் தேய மிக்கநெய்த் தோரின் மாரி
பெய்யவந் துதித்த தென்ப பிறங்கெழிற் குழவி மாதோ.

தன்னிகர் வசிட்ட மேலோன் சாதக முதல வாற்றிப்
பன்னிரு நாளி னும்ப ராசர னென்று சாற்றிப்

# பராசரன்வழிபடுபடலம்.

பின்னுப நயன மெட்டா மாண்டினிற் பிறங்கச் செய்தான்
மன்னிள மதியம் போல வளர்ந்திடு மைந்த னோர்நாள்.

தாய்முக நோக்கி யன்னா தவ்வென விருத்தி மெய்யி
காணா மவலமோ நின்பாற் கண்டாம்
யாண்டையன் வசிட்டன் யாவன்
றூய்மைநெஞ் சயிர்ப்பி னீங்க வென்றலுஞ் சொல்லு மன்னை.

கொழுகொம் பிழந்த கொடியேபோற் கொழுந னிழந்தேன் பருவரலை
முழுது மகற்ற வந்தகய முனியே முனிவர் செல்வமே
பழுதொன் றியற்று நுந்தையுயிர் படர்ந்தோ ரரக்கன் பருகினான்
வழுவில் வசிட்டன் மூதாதை மதியா யென்று மறுகினாள்.

தன்னாய் மறுகி மூர்ச்சித்துத் தளர நோக்கி முனிச்சிறுவ
னன்னா வன்னா வெனப்பல்கா லங்கைத் தளிராற் புடைத்தெழுப்பி
யின்னா வினைசெ யரக்கர்குல மின்னே யிறுத்தே னெனவணங்கிக்
கொன்னா தரவி னருள்பெற்று வசிட்டன் விடையுங் கொண்டெழுந்தான்.

கள்ளம் படருங் கருத்தினர்க்குக் காண்டற் கரிய தனிமுதல்வன்
வெள்ளம் படருஞ் சடைக்கற்றை விமலன் ஞான தலமெய்தி
வள்ளம் படநின் றலர்கமல மணங்கேழ் தீர்த்தம் பலதோய்ந்தங்
குள்ளம் படரும் பேரன்பி னொளிர்பொற் கோயி னண்ணினான்.

ஆனே றுயர்த்த கொடிப்பாங்க ரகநெக் குருக விழுந்தெழுந்து
மீனே றுயர்த்த கொடிக்காளை வேவ விழித்த பூரணனை
மானே றுயர்த்த கரதலத்து மணியை வணங்கி மறைபாடி
யூனே றுடம்பின் பயன்பெறுவா னுலக முயிர்த்தா ளையும்பணிந்தான்.

அங்க ணகன்று கோயில்வல மாகப் போந்து புறத்தேகித்
துங்க மறையின் விதியாற்றாற் றுவன்றும் பிதிரர் களிதூங்க
வெங்க ணரக்க னாலாவி விளிந்த தாதை தனைக்குறித்துத்
தங்கு கரும மனைத்தினையுந் தழைத்த வன்பி னியற்றினான்.

நொறில்வெள் விடையின் கொடிமேலா னுடங்க விளங்கும் விமானத்திற்
செறிபல் சிறப்பி னொடுமெதிரே சென்று தாதை செப்புவா
னறிவி லரக்க னால்விளிந்த வலகில் பாவத் தொடக்கினாற்
பிறிவி லலகை யாயின்னல் பெரிது முழந்தே னிதுகாறும்.

இன்று சிறுவ நீயிந்த ஞான தலத்தி னினிதியற்று
நன்றி வினையாற் றீவினைக ணழுவ வினைய னாயினேன்
சென்று சேர்து மெனவெழுந்து சிவலோ கத்தை யவனடையப்
பின்றை யரக்கர் குலந்துமியப் பிறங்கு வேள்வி தொடங்குவான்.

கடவுள்வெண் ணாவலங் காமர் நீழல்வாழ்
படவர வணிந்தருள் பரமர் கோயிலின்
வடகிழக் கெல்லையின் வயங்கு குண்டமிட்
டடைவுற வியற்றினு னவி சாரமே.

செந்தழ லாகுதி தேக்கு செவ்வியின்
மந்திரஞ் சென்றுவல் லரக்கர் தானவர்
வெந்திறற் பூதவே தாள மியாவையு
முந்திவந் தொளிரழற் குண்டத் திட்டவே.

தினந்தொறு மந்திரந் தீயிற் றீயர்த
மினங்கெட விறுத்துத்தென் மேற்கி னெய்தினோன்
மனந்தளர் வுறவவன் வாகை வாகனக்
கனங்கெழு பூதமுங் கலங்கப் பற்றின.

பொருதெறும் வலிகெடும் பூத நோக்குபு
நிருதியும் வலியினு னீக்க மாட்டிலன்
றருநய மொழிபல சாற்ற வும்விடா
துருவமந் திரமவ னோடு மீர்த்தவே.

நெஞ்செலா மழிதர நிருதி யென்பவன்
றஞ்சம்வே றிலையெனச் சம்பு நீழல்வாழ்
செஞ்சடா மகுடர்தஞ் சேவ டித்துணைக்
கெஞ்சுறு வன்பினு லேத்தன் மேயினன்.

பாலனுக் காகக் காலன் படவுதை செய்தா யோல
மாலமுண் டமர ராவி யளித்தரு டலைவ வோலம்
வேலனு லவுணர்க் காய்ந்து விண்குடி நிறுத்தா யோலஞ்
சீலமார் சம்பு நீழற் சிவபிரா னேல வோலம்.

பிரமனை மாய னோர்காற் பெறவா மளித்தா யோலம்
பிரமன்மா யவனை யோர்காற் பெறவர மளித்தா யோலம்
பிரமன்மா யவனைப் பல்காற் பெற்றளித் தழிப்பா யோலம்
பிரசமார் சம்பு நீழற் பிஞ்ஞகா வோல வோலம்.

முப்புரம் பொடித்த மேரு மூரிவெஞ் சிலையா யோல
மப்பவிர் வேணி வைத்திட் டகனிலம் புரந்தா யோலஞ்
செப்பிள முலையாள் பூசை செய்தநீர்த் திரளே யோலம்
வைப்பெனச் சம்பு நீழல் வதிந்தருண் முதல்வா வோலம்.

ஐம்புல னீர்க்கப் பட்ட வார்வநெஞ் சுடையார் போலப்
பம்புமந் திரங்க ளீர்ப்பப் படுகின்றே னேல வோல

## பராசரன் வழிபடுபடலம்.

நம்புறு துணைவே றில்லை நாயக வோல வோலம்
வம்புலர்ச் சம்பு நீழல் வானவா வோல வோலம்.

ஒருகணந் தாழ்க்கி ளுய்யே னூர்தியோ டறவு ளுற்றும்
வெருவரு வேள்வித் தீயின் வீழ்வது திண்ண மோலங்
கருணையி னெளிவந் தெம்மைக் காப்பது கடன்மை யோல
மருவுளர் சம்பு நீழல் வள்ளலே யோல வோலம்.

சா லுமெய் யன்பினு னிருதி தாழ்ந்துமிக்
கோவிடத் திருவுள முவந்த நாவலின்
கோலவெண் ணீழலிற் குழக ளுணையா
லேல்வுற வானினூ டெழுந்த தோருரை.

நிருதிதன் பூதவா கனத்தை நீயிவண்
டருமதி யெமக்கெனத் தழங்கும் வான்மொழி
யிருசெவி நுழைதலு மிரும்ப ராசரன்
மருவிய வுவகையன் வான நோக்கினன்.

பூதமு நிருதியும் பொள்ளென் றண்மையிற்
போதலு மவர்தமைப் புடையி ருத்தினு
ளுதரு வஞ்சின மத்னின் வேள்விமுன்
னீத்லே சிறப்பென வியைந்து ளேனென்றான்.

ஈந்தனே னென்னுமு னிணர்த்த நாவலி
னூர்ந்ததண் ணீழலி னமர்ந்த நாயகன்
சாந்தமென் முலையுமைத் தயலொ டேற்றின்மேற்
போந்தனன் விசும்பிடைப் புலவர் போற்றவே.

கண்டன னெழுந்தனன் கரங்கள் சென்னிமேற்
கொண்டன னுடினன் குவல யந்தனிற்
றண்டென விழுந்தன னெழுந்து தட்டமிட்
டண்டர்நா யகன்சர ணன்பி னேத்துவான். 39

ஆதிப் பெருஞ்செல் வவருட் கடலே யடியா ரிளைப்பா றுமலர்த் தருவே
பூதிக் கவயத் திருமே னியனே புரமூன் றுமெரித் தபுரா தனனே
காதிப் பழவல் வினையைச் சிறியேன் கருதா ரையுநீற் றியகண் ணுதலே
சோதிப் பொருளே தொழுவார் பருகுஞ் சுடர்வா னமிழ்தே சரணஞ் சரணம்.

ஆறு டியவே ணியின்மீ மிசைமிக் கமிழ்தா டியவெண் மதிக்கண் ணியனே
பாறு டியமுத் தலைவே லவனே பழியா டியவெண் டலைமா லையனே
கூறு டியகோ மளவல் லியனே குன்று டியகொற் றவிலங் கையனே
வீறு டியவெள் விடைவா கனனே விண்ணோ ரிறையே சரணஞ் சரணம்.

நவதீர்த் தழுமா டுபயன் செறியு நவசா ளரசந் நிதியா சரணை
மவநீங் கறலா டவிதித் தபொரு ளாறைந் தெனவே யறிவித் தொருபா
லிவர்மாட் சியின்முப் பதுசா ளரநின் றிலகுந் திருக்கோ யிலுளாய் சரணந்
தவநீ டியசம் புமுனிக் கருளுந் தனிநா யகனே சரணஞ் சரணம்.

ஆரந் தொடையான் மனையாள் களநீங் காரம் புனலோ டுகுடத் துநுழைந்
தீரந் திகழ்சென் னியினுட் டொழூ திலகுந் திருமே னியணிந் தருளி
வாரந் தருநல் லருள்வைத் தவனே மணியே மலர்பம் பியகா விரியின்
றீரந் திகழ்நள் ளிடையே வதியுஞ் சிவனே பவனே சரணஞ் சரணம்.

உழுவ லன்பிற் பராசரனென் றுரைக்கும் பெயரா னிவ்வாறு
பழுதில் புகழ்கள் புகழ்ந்திறைஞ்சப் பாய்வெள் விடைமே லெதிர்நின்ற
முழுது முணர்ந்த நாயகனூர் முனிவில் வரங்கள் கொள்கென்றூர்
வழுவின் முனிவன் மீட்டெதிரே வணங்கி வரங்கள் வேண்டுமால்.

மன்ற வடியேன் புரிவேள்வி மணிச்சா லையிற்றென் மேற்றிசையி
லொன்று நிருதிக் கெறும்பூத மூதவும் படியில் கருணையா
லென்று நினக்குப் பச்சாதா பேச னெனும்பே ரினிதுறுக
வென்றி விடையாய் நினதாளின் வீயாப் பத்தி யெனக்குறுக.

எனமா தவத்துப் பராசரன்மற் றிரந்த வரங்கள் கொடுத்தருளித்
தனிநா வலின்கீழ்ச் சிவலிங்கந் தன்னி லிறைவ னமர்ந்திருந்தா
னனிநா னிலத்தி லன்றுமுத லென்று நாவ னிழலுடையார்க்
கினிதாம் பெயர்தான் பச்சாதா பேச னெனவு மிலங்கியதே.

கருணைப் பெருமா னருள்பெற்ற காளை முனிவன் மகமுடித்துப்
பொருவில் வரங்க ளொடுந்தாதை தாதைப் பாங்கர்ப் போய்வாழ்ந்தா
னிருதி பச்சா தாபேச ரளித்த நீடு பூதத்தின்
மருவு தனது திசைசென்று பண்டு போல வாழ்ந்திருந்தான்.

மல்குந் தவத்து வசிட்டமுனி மருமான் வழிபாட் டினைப்புகன்று
நல்குந் திருமான் ஞானதல மெனவாங் கிருந்து நாடோறும்
பல்கும் பயன்றந் திடுமோறும் பண்பிற் கேண்மி னெனச்சூதன்
புல்குங் குணத்து முனிவரர்க்குப் புரிந்து புகறன் மேயினான்.



# திருமால்வழிபடுபடலம்.

வானவர்க் கிடையூ றுற்று மறமலி யரக்கர் சேனை
வானரப் படையாற் றுக்கி வன்பகை கடந்த யோத்தி
தானமர்ந் தரசு பூண்ட தசரத ராமன் பாங்கர்
வேனவில் கடகத் திண்டோள் விபீடணன் விடைகொள் காலை.

திருமறு மார்பத் தண்ண றிருவுரு வொன்றுஞ் சிறப்பத்
தூருவஞர் விமான மொன்று முவந்தவ னளிப்பக் கொண்டு
மருவிய வயோத்தி நீங்கி மன்னிய விலங்கை சேர
வெருவருந் தானை யோடும் வியனில நெளியச் செல்வான்.

கண்ணுத லமர்ந்த தானங் கண்டன பலவும் போற்றிப்
பண்ணையும் வரையுங் கானும் பற்பல நீந்தி யென்றாழ்
விண்ணவ னுச்சி யெய்தும் வேலைவெவ் வெரிவாய்க் கும்பி
நண்ணிய தனைய தாங்கோர் நனந்தலைப் பழுவஞ் சார்ந்தான்.

உருத்தி ரப்பெய ராண்டகைக் கொன்னலார் தம்மை
வருத்த மிக்கெழும் வெகுளியந் தழலவர் மடிந்தும்
பெருத்த நிற்பமற் றதுதனைப் பெயர்த்தெழுந் தோறு
மிருத்தி வைக்குமோர் வைப்புமா யிலகுமச் சுரமே.

மாய னாதிப்பல் லுயிர்களும் வளரிளைப் பாற
ஆய மாயையின் காரிய மனைத்தையும் விழியாற்
காயு நாளையிற் சூற்படைக் கடவுணின் றுடுந்
தூய வாரழற் கானமுந் துணைவதக் கானம்.

கங்கை வான்மதி சூடிதன் கரத்திடை முனிவ
ரங்கி சேர்ந்தது மாழியில் வடவைசார்ந் தனுஞ்சீர்
பொங்கு மாதவன் வைகலும் புணரிமூழ் குவதுந்
தங்கு தீச்சுரந் தழற்றுதா பந்தபும் பொருட்டே.

தூல தேக்மே யன்றிவண் சூக்கும வுடலுஞ்
சால நீற்றுவ தனையது தழல்பரந் தொழுகிக்
கோல மார்தரு மராமரங் குழையடை யிருப்பை
பாலை யாதியுங் கரிந்திட மேயதப் பழுவம்.

உடைந்து சார்வட வைத்தழற் குதவிசெய் வாமென்
றடைந்து சாகரம் போர்த்ததே யனையது வெண்டேர்
மிடைந்த தீச்சுரம் வெதுப்பலின் மேவிய புணரி
யிடைந்து ருவகை பதைப்பதே பொருமத னியக்கம்.

விரிந்த பூதலம் விண்டது விண்டவாய் தோறுஞ்
சொரிந்த தீத்திர வெண்டன பாதலத் துரகம்
பொரிந்த மானினம் பொடிந்தன வுலகங்கள்புள் ளினங்கள்
கரிந்த நீறின காயமா மழையுநே ரியங்கா.

தழலை யல்லது பிறிதொன்றுந் தன்னிடைக் காட்டா
தழலும் வெஞ்சுர மடுத்தவன் சேனைக ளோடு
கழிபெ ருந்துய ருழந்தது கடந்துசெல் காலை
விழைத கும்புனற் காவிரி விளங்குறக் கண்டான்.

நரக வெந்துய ருழந்தவிண் ணண்ணினு ரெனவுங்
குரவ மல்கிய கொன்றையான் கோபத்தி னவிந்து
விரவி யன்னவ னருடா விளங்கினு ரெனவும்
பரவு தண்புனற் காவிரி நள்ளுறப் படர்ந்தான்.

தரங்க வார்நதி தவழ்நறுந் தென்றல்சார்ந் துலவக்
குரங்கு சாகையங் குளிர்கிழற் பொதும்பரிற் கடல்போ
லிரங்கு தானையோ டெய்தினு னிருந்தயர் வுயிர்த்தான்.
புரங்கொல் சேவகன் றிருவடி நீழல்புக் கார்போல்.

கார்த்த பூம்பொழில் கலந்தயர் வுயிர்த்தபி னரக்க
னார்த்தெ ழுந்துசெல் காவிரி யளிபுன லாடிச்
சீர்த்த வெண்பொடி கண்மணி திகழமெய் யணிந்து
கீர்த்தி மேம்படுங் கேசவன் பூசையும் புரிந்தான்.

பூசை முற்றுறப் புரிந்தபின் புயனிறத் தவனைக்
காசு மல்கிய விமானத்துக் கதுவித் ததனைத்
தேசு மல்கிய வெக்கரி விருத்தினன் சிறப்ப
வாசை மல்கிய வறுசுவை யடிசிலு மயின்றான்.

இலங்கை மாநக ரினிப்புகு வாமென வெழுந்திட்
டலங்கன் மார்பகந் துயல்வர விமானத்தை யடுத்து
வலங்கொ டோளினுற் பெயர்த்தனன் மற்றது பெயரா
நிலங்கொ ளேன்றிய தறிந்தன னெடுந்துய ருழந்தான்.

கவலை யுற்றவ னிருந்துழிக் கனவிடைத் தேன்றிப்
புவன முண்டவன் விபீடண கேளெனப் புகல்வான்

சவலை நெஞ்சினை யுடையையாய்த் தளரலை யிந்த
வவனி ஞானகேத் திரமென வறைந்திடப் படுமால். 16

அகில லோகமு மளிப்பவ ளருந்தவம் புரிந்து
நிகரி லாதமெய்ஞ் ஞானநின் மலன்றரப் பெற்றுப்
புகரெ லாங்கெடுத் துயிர்க்கெலாம் புகன்றபல் வரமு
மிகவில் சீர்த்தியோ யினிதளித் தருள்வதிவ் விடமே. 17

சம்பு மாதவன் பராசரன் றுமறைக் கிழவன்
கும்ப மாமுனி தினகரன் குளிர்மதி யிராம
னும்பர் கோனழற் கடவுளென் றிவர்க்கெலா முவந்து
தம்பி ரானரு டழைதரக் கொடுத்ததித் தலமே. 18

மூர்த்தி மேன்மைமிக் குடையது மொழிந்தவித் தலமே
தீர்த்த மேன்மைமிக் குடையதுஞ் சிறந்தவித் தலமே
கார்த்த கண்டனூர் காதல்செய் பலதலத் துள்ளுங்
கீர்த்தி போர்த்துமேம் பட்டதுங் கெழீஇயவித் தலமே. 19

மறையின் வார்புனற் பொன்னியின் ஞானகேத் திரத்தின்
மிறையி னீங்கி லாண்டநர் யகியின்மேம் பட்ட
முறைசெய் நூனதி தலமுழுச் சத்தியு மில்லை
யிறைசெய் நாவலின் மூர்த்தியின் மூர்த்தியு மில்லை. 20

ஏனை வைப்பிடை யெம்பிரான் றனதொரு கூற்றுற்
றுன மர்ந்துபல் வரங்களுந் ததைதர வழங்கு
மீன முற்றற முழுவது மித்தலத் திருந்து
ஞான மற்றைய பொருள்களு நலத்தக வழங்கும். 21

திங்கள் சூடினூர் சிவணிய சிவதலந் தோறுந்
தங்கி நாளுமென் கூற்றினூற் றுழ்ந்துவாழ் யானு
மிங்க ணொடொறு முழுவது மிருந்துவெண் ணுறைவற்
பொங்கு நீழல்வாழ் புனிதரைப் போற்றிட வலித்தேன். 22

கள்ளு மிழ்ந்தலர் கொன்றையங் கண்ணியான் கருணை
கொள்ளை கொள்ளுவான் குறித்தருந் தவத்தினிற் கூர்ந்து
விள்ள ரும்பெரும் பத்தியின் விழைந்திருக் கின்றுண்
முள்ள ரைச்செழுந் தாமரை முற்றிலக் குமியும். 23

ஈங்கு வாழ்தலே யன்றிமற் றிலங்கையிற் படரேன்
நீங்கி லாநட மிலக்குமி செய்யுமா றியக்கி
யோங்கு நாவலி னொருவனூர் திருவருள் பெரிதுந்
தாங்கு மார்வமுந் தழுவிய நெஞ்சினேன் கண்டாய். 24

# திருவானைக்காப்புராணம்.

திருவின் மாதரா ளுடைகஞ் செய்யுமித் தானத்
துருவ மாநக ரொன்றுசீ ரங்கமென் றுளதா
மருவு சீரங்க நாதரென் றெமக்குரை வழங்கும்
பொருவில் பூசனை விழாமுத லெமக்கிவட் பொலியும்.

ஆண்டு தோறுமிங் கடுத்துநீ யெமதடி மலரு
மீண்டு நாவலி னிறைவனார் பாததா மரையும்
பூண்ட வன்பினுற் போற்றுதி போதுதி யென்று
நீண்ட மாதவ னிகழ்த்தினன் மறைந்தனன் மாதோ.

கனவினை நனவெனக் காதல் செய்தெழுந்
தனகனை யானைக்கா வகத்துப் போற்றிப்போய்
வினைதப வீடணப் பெயரின் மேயினுன்
றனைநிக ரிலங்கையிற் சார்ந்து வாழ்ந்தனன்.

ஆயிடை வதிவதே யாத ரித்திடு
மாயனு நாவலின் மருங்கு வைகிய
நாயகன் பூசனை நயந்து தன்னுயிர்
நாயகி தனைநட நவில்வித் தானரோ.

பதுமைநன் கியற்றிடும் பரவை நோக்குபு
கதுமென நாவலிற் கலந்த கண்ணுதல்
விதுவணி சடைமுடி விளங்க முன்னுற்றீ
யெதுவரங் கொள்கென விறைஞ்சி மாதவன்.

நின்னடித் தெரிசன நிச்சம் யான்புரிந்
தின்னவல் வினையெலா மிரித்தல் வேண்டுநீர்
மன்னிய சடைமுடி வள்ளல் யாவரு
மென்னிடை வரம்பல வெய்தல் வேண்டுமால்.

விழாமுதற் சிறப்பின்மேம் பாடு வைகலும்
வழாவகை யெனக்கிவண் வளர்தல் வேண்டுநிற்
றொழாதவர் மாட்டுறுத் தொடிக்கை மாமகள்
குழாமணி நாடகங் குயின்ற வைப்பிது.

சீரங்க நகரெனச் சிறத்தல் வேண்டுமா
லோரங்க மிரிய லான வுத்தம
கூரங்கி நிகருருக் குழக வென்றனன்
பேரங்க மறையினுன் பெறுக வென்றனன்.

சம்புநா யகனரு டாங்கி மாயவ
னும்பரார் விழைதக வோங்கு சீரங்கப்

## திருமால் வழிபடுபடலம்.

பைம்பொன்மா மதினகர் பயிற்றி வைகினா
னிம்பர்வா ழனைவரு மின்ப மெய்தவே.

நெடியவன் வழிபடு நிலைமை கூறினாஞ்
சுடர்மணி யாரமுன் சோழன் சத்திய
வடைவினி யறிந்தவா றறைது மாலென
விடலருங் கருணையால் விளம்புஞ் சூதனே.



# சாத்துபடலம்.

சிறந்த பொன்னி வளஞ்சுரப்பத் தெய்வங் கமழுந் தீம்புனனு
டறந்தங் கியவே னையநாட்டுக் கணியாய் விளங்கு மாறேபோற்
புறந்தந் திடுபெல் லூர்க்கெல்லாம் போற்ற வணியாய் நனிவிளங்கு
முறந்தை நகரின் வீற்றிருந்திட் டுலகம் புரக்கு மொருசோழன்.

அகன்மா நிலத்தைப் பொதுநீக்கி யாண்டு திகிரி திசையுருட்டி
யிகன்மா ணரையர் பகைமுருக்கி யிசைமிக் கீட்ட லேயன்றித்
தகையா ணவத்தின் பகைதனையுஞ் சவட்டி ஞானப் பொருளீட்டிப்
புகலீச் சுரனே யெனவவர்தம் புரைதீர் பணியிற் றலைநின்றான்.

நிசுளா புரியென் றுலகேத்து நிகரி லுறையூர் முதலாகப்
பசுவே றுயர்த்தார் தலந்தோறும் பரிந்து பூசை விழாவாதி
திசையோ ரெட்டுங் குதுகலிப்பச் செய்து வருநாட் பனிப்பருவம்
பசைதீர்ந் தொழிய விளவேனிற் பருவ மொன்று படர்ந்தன்றே.

அறிஞர் தம்மை யடுத்தவரு மறிஞ ரேபோ லுயிர்க்கிதமே
செறிய வுதவி செய்கின்ற திறத்தை விளக்கு மாபோலக்
குறிய முனிவன் பொதியவரைக் குலவு தென்றன் மென்குளிரு
நறிய மணமுந் தழீஇயெவரு நயப்ப மெல்லத் தவழ்ந்ததே.

பேணுங் கழைவில் விறைதனக்குப் பெருநா ளடுத்த தெனமகளிர்
பூணுந் துகிலு முதலான புதிய வணிவ தறிந்தின்பங்
காணும் பனிப்பூம் பொழிறுமுங் கவின்கொள் வனபோற் சரகுதிர்த்து
மாணுந் தளிர்மெல் லரும்பாதி வரிசை யாக வுயிர்க்குமால்.

தேனார் பலமா மலருள்ளுஞ் சிறந்த கமல முதன்முருக்கு
மாறுப் பகைமைப் பனிப்பருவ மகலச் சிவந்த சிவப்பேபோல்
வானார் சினைமெல் விணர்தெய்வ மகளிர் முலையோ டமராடுங்
கானார் சோலை மாமுழுதுங் கவினத் தளிர்த்து வயங்கினவே.

தம்மை வணக்கு மெழில்வாய்ந்த தையன் மடவா ருளம்வணக்கச்
செம்மன் மதவேள் விழாக்கொண்டு செருச்செய் கால மிதுவாமென்
றம்ம வவன்மிக் கமொழியா தாற்ற மலர்வா ளிகளனந்தம்
விம்ம வுயிர்த்த வானிழன்ற விரைசூழ் பொதும்பர் தொறுங்கொம்பர்.

## ஹாரஞ்சாத்துபடலம்

செய்ய தளிரி னிடையிடையே தீந்தேன் மலர்கள் பலநெருங்கல்
வைய முழுதும் பணிகேட்ப வார்ந்த கருப்புச் சிலைகோட்டி
யெய்யு மதவேள் கணைகூர்மை யியற்றப் பருவ மெனுங்கொல்லன்
வெய்ய வுலைவெந் தழலிடையே விளங்கத் துறுத்த பரிசேய்க்கும்.

நிச்சமு மென்றா ழன்ப னெருக்குமப் பகைமீக் கொண்டு
நச்சன பனிக டாக்க நலிந்ததா மரைபின் வெய்யோன்
வெச்சென முழுது மாற்றி மேம்பட நோக்கி நோக்கிக்
கச்சமின் மகிழ்ச்சி பொங்கக் கருவிள கயங்க டோறும்.

ஆடவர் குழாங்கண் மாட்டு மருப்பிளங் கொங்கைச் செவ்வாய்த்
தோடவிழ் மலர்மென் கூந்தற் றேரைகையர் மாட்டு மார
னேடவிழ் மலரின் வாளி யெய்யும்வார் சிலைநா ணேதை
பீடுகொண் டார்ப்ப போலும் பிரமரத் தழனி யீட்டம்.

மலர்தொறும் வண்டு பாய்ந்து வண்டுக ளுகுத்துச் செந்தே
னலநுகர்ந் துழக்குந் தோற்ற நாமவே லமர ரென்னுங்
கலதிசெய் தெவ்வர் வாழுங் காமரில் லகமிவ் வென்றே
வலனுய ரவுணர் கூடி மாணின்மை புரிவ போலும்.

காமரு துறக்க வைப்பிற் கார்வரச் சென்ற வன்னந்
தாமரை வளங்கூர் காலஞ் சார்ந்ததென் றடுக்குந் தோற்ற
மேமரு மிளைய வேனி லின்பங்க ளுகரத் தாமும்
வீமலி கற்ப நாட்டு மெல்லியர் வருதல் போலாம்.

இசைமொழி யாதி வெவ்வே றிடம்பொரத் தருவின் மாட்டும்
பசையொடு வதியும் வாணி பண்ணொடு பயில்வ தேபோ
னசையொடு மகிழ்ச்சி பொங்க நலத்தகு கலைக ளெல்லாம்
வசையறு கிள்ளை பூவை வயக்குவ சோலை தோறும்.

பாலையே கொள்ளும் வேனிற் பருவத்து முல்லை யாதி
வாலிய பருவத் தின்ப மருவிய மயிலின் கூட்ட
மாலுவ தடாமை யெண்ணி யடங்குவ தறிந்து வல்லே
சாலவுண் மகிழ்வி ளார்ப்ப தாய்மனி குயிலி னீட்டம்.

ஏந்திணர்க் கொங்கைக் கொம்பி னேழையர் தளிர்ச்செவ் வாய்த்தேன்
மாந்துமென் குயிலின் சொல்லின் மலிவன முசுக்கள் பாயப்
பூந்துண ருகுக்குந் தேறல் புயலென வெழுந்து மஞ்ஞை
யோய்ந்தன கனவி னுரி னுளத்தெழு மகிழ்ச்சி யோடும்.

பூந்துகள் விரவித் தோற்றுப் புதுமதுக் கவர்ந்து தேனீ
மாந்துதன் மாந்தி யெஞ்சு மதுவெலாந் திரட்டி நாளு

மேந்திணர்க் கொம்பு தோறு மிருல்பல தொடுத்து மாந்தர்
போந்தனர் கொள்ள வைப்ப புண்ணியம் விழைந்த தேபோல்

இலஞ்சி பொய்கைநீ ரோடையே யெந்திர வாவி
நலஞ்சி றந்துநீர் சுருங்கிநாண் மலர்பல பூத்துப்
பொலஞ்சி றைச்செழும் பவளவாய்த் தோவடிப் புள்ளின்
குலஞ்செ றிந்தெழில் கூர்ந்தொளி கொண்டன யாங்கும்.

அயிர்வ ரித்தறல் வார்த்துமெய் யடியவ ரகம்போற்
செயிர றத்தவத் தெளிந்துசின் னீர்புடை யொழுகப்
பயிலும் வெண்மணற் குன்றமும் பாய்மணற் பரப்பும்
வியன்க ரைத்தரு நீழல்சேர்ந் தாரெழின் மிகுந்த.

ஆய தண்பனிக் குடைந்திடும் போர்வையி னறையிற்
பாய தண்புன றிரண்டுவீழ் வனபடர் வேனின்
மேய தென்றணி போர்வையை வியத்தகச் சுருக்குந்
தூய வுத்தரா சங்கமே துணைவன வரைகள்.

ஆன வேனிலின் மாந்தர்போ லலர்த்தடம் பொழிலுந்
தானு மாடுதல் கருதியோ வறிந்திலஞ் சையத்
தேன முவரைத் திகழ்ந்தெழு காவிரிக் குடிளைப்
பேன வார்திரைப் புதுப்புனல் பெயர்ந்தொழு கியதால்.

தேசத் துள்ளவ ரனைவருந் தேம்பொழில் புகுந்தும்
வாசத் தென்றன்மெய் யேற்றும்வண் காவிரி யாற்றுட்
பூசற் றண்புன லாடியும் பொங்கிய வெப்பம்
வீசத் தங்கிய புறநகர் மேவுதல் வலித்தார்.

காந்து பன்மணிக் கலன்களுங் காமர்பூந் துகிலுஞ்
சாந்துந் தண்பனி நீர்களுந் தமனியப் பொடியும்
பூந்தண் டேறலு முண்டியும் பொறபவெவ் வேறங்
கேந்து சேடிய ரிடந்தொறு மீண்டினர் சூழ.

களிறு பண்ணியுங் கவனவாம் புரவிபண் ணியுமிக்
கொளிறு பன்மணித் தேர்பல பண்ணியு முவந்து
வெளிறி லன்பரு ருடன்றழீஇ யூர்தர மேவிப்
பிளிறு கார்தவழ் சோலைபுக் கனர்பிணை யனையார்.

காமவே ளெனுமரசன் கைக்கொண்டு பகைகடக்கு
நாமவா ளிகடாமு நன்றேந்தத் துணிந்தார்போ
லேமமார் தருசேனை யெனுமடவார் பொழிலுலாய்
வாமமே கலைகதிர்ப்ப வயின்வயிற்சென் றலர்கொய்தார்,

## றாரஞ்சாத்துபடலம்.

மலர்க்கனத்தாற் பொறையாற்று வணங்கினமைக் கிரங்கியோ
நலக்குமெழி றமதுருப்போ னனிவாய்ந்த பகைகுறித்தோ
வலக்கணுற வளிக்குலங்க ளலர்பலவும் பசுங்கொம்பர்
விலக்கருநல் வனப்பிழப்ப மிகப்பறித்தார் மடமாதர்.

அடியானும் விழியானு மணைப்பானுஞ் சுவைப்பானும்
வடிவாரு நிழலானும் வசையானு மிசையானு
நடமாடுந் தொழிலானு நகையானு நட்பானுங்
கடியார மலர்ந்துசில காரிகையார் வழிநின்ற.

கைத்தளிரு மியற்றளிருங் காற்றளிரு முலைத்தொத்து
மெய்த்தவெழின் முகமலரும் விழிவண்டும் வாய்க்கனியும்
வைத்திருக்கு மடமாதர் மருங்குபெயர்ந் தாலன்றி
யொத்தமலர்ப் பசுங்கொம்ப ரொடுவேறு தெரிப்பரிதாம்.

கொம்பரெனச் சிலர்சிலரைக் குறுகியவை யவந்தம்மைப்
பம்புமல ரெனப்பறிப்பப் பற்றியுள நாணுவார்
வெம்புமது நுகரிளைஞர் வேணவா வொடுங்கொம்பை
வம்பவிழ்கோ தையரென்று தழீஇவெள்கி மருங்ககல்வார்.

சிறுபுறத்தின் மயிர்க்கற்றை சேர்ந்தலையப் பசுங்கொம்பி
னறுமலர்கொய் விழவினு னடக்கின்ற மாதர்தமை
யுறுகலவ மயிலென்ன வுளங்கொண்டு பெடைமஞ்ஞை
முறுகியவன் பொடுதொடர்ந்து மூக்கினைக்கண் டயருமால்.

மதுவிதழின் முறுக்கவிழ்த்து வார்ந்தொழுகுஞ் செண்பகத்தின்
புதுமலரே யிபன்மணத்திற் பொன்றுமை நிலைநின்ற
கதுமெனச்சென் றனர்கொய்யுங் காரிகையா ருயிர்ப்புறலான்
முதுசுவைத்தே மலரனைத்து மொய்த்தவியன் மணந்திரிந்த.

கொய்யுநறு மலர்த்தாதுங் கொழுந்தேனுஞ் சிந்துதலான்
மெய்யளைந்து மணங்கமழ மெல்லியலா ரிடைவண்டு
பையவணைந் தவருயிர்ப்பாற் பயந்தோடி யாடவர்தோள்
வெய்யமலர்த் தொடைவீழ்வ தூதுரைப்ப மேவுவபோல்.

துவ்வாத வமிழ்தனைய தொடித்தோளின் மடமாத
ரிவ்வாறு மலர்பலகொய் தெழிலாரத் தொடுத்தமைத்துச்
செவ்வாசப் பொற்சுண்ணஞ் சிவிறிமுத லியதழீஇ
யவ்வார்தண் புனலாட வன்பரொடு நதியடுத்தார்.

காரமர் குழல்வளர் சைவலங் கண்கய லொளிநகை நித்திலஞ்
சீரத ரம்பவ ளந்தனந் திகழ்தரு புற்புத முந்திநல்

வேலணி சுழிகரங் கான்மல ரெனவொளிர் மாதர்கு ழாங்கொடு
நீரணி நதியொடு நதிபொர நேர்ந்தென நதியுளி றங்கினார்.

கண்ணொடு கயலெதிர் பாய்ந்தன கையொடு மகரம லைத்தன
வெண்ணுறு கைவிர லொடுகெளி றேற்றன வுதரம டிப்பொடு
தண்ணிய திரைபல முட்டின தாளொரு மூன்றொடு ஞெண்டுக
டிண்ணிய வரால்கம டஞ்சமர் செய்தன மகளிர்நீ ராடினார்.

குங்குமம் விரவிய தண்புனல் குமரர்கள் சிவிறியின்
றங்கலுழ் மேனியர் கொங்கைநே ரண்ணுற விட்டன
மங்கைய ரவையிடை யிடைவிழ வார்தரு பந்தின்மு றுக்குபு
பொங்கறன் மேற்செல வுந்தினர் பொருசிலை வீரர்க ளம்பொர.

வானொழு கியவொளி மின்னன மாதரு மெறுழ்வலி மைந்தருந்
தேனொழு கியமல ரெதிரெதிர் செல்லுற வுந்தின ராடினர்
கூனொழு கியகழை வண்சிலைக் குமரனு மிரதியு மனேகராய்க்
கானொழு கியமலர் வாளிகள் கடவினர் பொருசமர் நிகரவே.

எதிரெதி ரொருவர்க ளொருவர்மே லெறிதரு மலருளர் வண்டுக
ளதிகுர லினவவர் மாலையி னணவின சிவிறியி னீர்பொர
முதிர்துய ரொடுபுனன் மலர்மலர் முற்றின வலைகள லைத்தலிற்
கதுவின பயில்பொழி லிடர்புறங் கண்டவர் தந்நிலை கொண்டென.

குதலைமென் மொழியரு மைந்தருங் குஞ்சர மமர்செய்க ளம்பொர
மதலைக ளெதிரெதிர் நடவுபு வளையென விண்டையெ றிந்தனர்
கதமலி பாசமெ னத்தொடர் கண்முறை வீசினர் தண்டினற்
புதமுறு தொடலையு ரம்புகப் போக்கின ரார்த்தன ராடினார்.

சுண்ணமு நறுமலர்ச் சுண்ணமுந் தூயதண் குங்குமச் சாந்தமுங்
கண்ணியு மிளகிய தளிர்களுங் கையரிக் கொண்டுசெல் காவிரி
நண்ணலி னெடுகிய புணரியு நாறிய புலவினொ ழிந்துடன்
மண்ணினர் மண்ணவர் மகிழ்கொள மல்கிய நறுமணங் கமழுமே.

இன்னண மாடிய வனைவரு மேறினர் கரைமிசை வார்பொழிற்
றுன்னின ரணிகள ணிந்தனர் சுவையமு தாரவ யின்றனர்
மன்னிய காதலி னன்பர்தோண் மருவினர் வேனிலு ருப்பினைப்
பின்னிலை கண்டன ரிங்ஙனம் பெருகிய வேனிலு நின்றதே.

அனைய காலையிற் கோழியி னிருந்தர சாள்வோ
னெனையு மாண்டருள் புரிதரு மிறைவனொ ருருவிற்
றினையும் வேனில்வெப் புறுவகை செய்துமென் றெண்ணிப்
புனையு மாலயந் தொறுஞ்சிறப் பெடுக்கெனப் புகன்றான்.

## ஹாரஞ்சாத்துபடலம்.

ஞான கேத்திரத் திருந்தரு ணம்பஞ் ருருவி
னுண வேனில்வெப் பகற்றவு மரும்பொருள் பலவு
மீன நீங்கிய வுழையரி னெடுத்தனன் விடுத்தான்
ருனு மேருவான் றன்மனை யாளொடு மெழுந்தான்.

உடங்கு மாவொடு செல்பவ னுளியுமிழ் தரள
வடங்கு லாயவண் முலைகளின் வருடிவில் விடக்கண்
டடங்க லார்புர நீற்றிய வண்ணலார்க் கிதனைத்
தடங்கை வாங்குபு சாற்றுது மெனத்தனி நினைந்தான்.

காவி ரிக்கரை யடுத்தனன் காதலி யோடு
கூவி ரத்தடந் தேரினன் கூர்த்தபொற் சுண்ணம்
பூவி ரைத்தசாந் தாதிதூய்ப் புனல்விளை யாடி
மாவி ரைத்தெழும் பூம்புனல் வார்கரை யிவர்ந்தான்.

தரங்க வார்புன லலைத்தலிற் றனிக்கள னீங்கிப்
புரங்கொல் சேவகற் கமைத்தபூங் கதிர்பொழி யார
மிரங்கு காவிரி யாற்றுநீ ரொழுக்கொடு மிறந்த
தரங்கு தீவினை யானஃ தறிந்தனன் மாதோ.

நின்ம லாயணி யாரநா னினக்கென நினைந்தேன்
புன்மை யால்வரு காவிரிப் பூம்புனல் வீழ்த்தே
னன்மை மேவிய நானிலம் விற்குமன் னதற்கே
யின்மை வேறுமோ ராரமெவ் வுலகினு மிணையே.

ஆத லாலடி யேனது கெடுத்தவன் பிழையிற்
றீர்த லேபுரிந் தாண்டருள் புரிவையே லதுநின்
மாதர் மேனியி லணிந்துகொள் கெனமதி மாழாந்
தோதி னுள முருகினன் செய்கடன் முடித்தான்.

மன்னர் மன்னரு மமைச்சரு மருங்குளார் பலருந்
துன்ன நன்னதி நீங்கினன் சுடர்மணிக் கழலா
னென்னை யாளுடை யானிருந் தருள்வளங் கொழிக்கு
நன்னர் ஞானகேத் திரத்தினை நடந்துசென் றடுத்தான்.

அகில காரணர் வினைஞர்பாற் பூதியை யளித்து
முகில்சு லாவநன் கிழைத்தமா மதிலைமுன் வணங்கி
நிகரின் மாமணி நிழற்றுகோ புரநெடு வாயில்
புகரில் கேள்வியான் கடந்துபோர் விடைப்புறத் தடுத்தான்.

எட்டு றுப்பினு மைந்துறுப் பினுமினி திறைஞ்சிக்
கட்டு பொற்செழுங் கோயிற் காமர்பன் மறுகு

# திருவானைக்காப்புராணம்.

மட்டு குத்தவார்ந் தொடைமுடி மன்னவன் சூழ்போந்
துட்ட தைந்தபே ரன்பொடு முள்ளுறப் புகுந்தான்.

ஆய வேலையின் முன்னரே திருமுடி யாட்டத்
தூய சீர்த்திரு மஞ்சனஞ் சுடர்மணிக் குடத்துட்
பாய காவிரிப் பைம்புனல் பரிசன முகந்தூற்
றீய வாங்கியாட் டினனிறை பூசனை முடிப்போன்.

அன்ப ரன்பினுக் கெளிவரு மமுதநா யகனார்
பொன்பி றங்கிய புனலொடுங் குடம்புகுந் தார
மின்பி றங்குதம் முடிமிசை மிளிர்தரக் கருணை
மன்பி றங்கிய சோழன்மேல் வழங்குகா ரணத்தால்.

அன்ன வாறுநீர்க் குடத்தினு ளடுத்தமா ரை
மன்னு தார்முடி விழுதலும் பூசைசெய் மறைஞன்
றுன்னு மோகையன் சுடரணி யெவற்றினு மேலான்
மின்ன வாங்கணிந் திருந்தமை கண்டனன் வேந்தன்.

சம்பு மூலத்தின் வீற்றிருந் தருளிய தலைவ
வெம்பி ரானின தருளெனக் கிருந்தவா றென்னே
வம்பு நீணதிக் கெடுத்தமா ரைநின் முடிமே
லும்ப ராருநன் றதிசய முறவணிந் தனையே.

என்று நாயகன் திருமுடி யிருந்தமா ரை
நன்று நோக்கிய நாமவே லரையனைத் தெடுத்தா
னன்று சூழ்ந்தவ ரனைவருங் கண்டதி சயித்தார்
நின்ற தாலவன் பெரும்புக ழின்றுநீ ணிலத்தில்.

ஏக நாயக னருளினுக் கிலக்கமா யரையன்
மாகர் சூழகி லாண்டநா யகியையும் வணங்கி
மேக மேலுறங் கெழின்மதின் முற்றுறச் சூழ்ந்து
போக பூமியிற் பொலிந்ததன் னகர்புகுந் திருந்தான்.

அறையூ ருவின்வெற் பிறையுயிர்த்த வணங்கை யிருத்துந் தலைவனுக்குக்
கறையூ ரயில்வேல் கரத்தோச்சிக் கருதா ருயிர்மேற் கொறுகொறுக்கு
முறையூர்ச் சோழன் மணியாரஞ் சாத்திற் றுரைத்தா மும்பலொடு
முறையூர் சிலம்பி யிவையிரண்டு முயன்ற பணியு மொழிகுவாம்.



# கஜாரண்யப்படலம்.

மதும லர்ப்பொழின் ஞானபூ மியின்வட மேல்பாற்
புதும லர்த்திர ளணிந்துபொன் மணிபல கொழித்துப்
பதும குண்டலி யெனப்படும் பசும்புனற் றீர்த்தங்
கதுவி நின்றது சுவேதவெற் பெனவொரு கல்லு.

ஆரந் தேக்ககி லசோகுசண் பகமகிழ் கன்னி
காரம் பாடலங் குங்குமங் கணிவழை சிந்து
வாரங் கூவிளந் தாதகி மருதுமந் தாரம்
வேர லாதிகண் மிடைந்தகா னுடுத்ததவ் விலங்கல்.

வருடை சாமரை மாமரை வாரண முழுவை
யெருமை கேழல்பஞ் சானனம் யாளியெண் காமா
வருண மாதிய மிருகங்க ளடர்ந்தவக் கானத்
தொருவில் வாழ்க்கைகொண் டிடுமொரு சுவேதவெண் களிறு.

வழுவி லாதமெய் யன்பினுல் வையக மயின்றோன்
பழுதில் பூசனை புரிதரப் பல்வரங் கொடுத்து
முழுது மானவ னிருந்தவம் மூரிமால் வரையால்
விழும மேவுநாண் மேலைநல் வினையும்வந் தடுப்ப.

அளகி ஞேடுவன் குராஸ்பயின் முழையினவ் வடுக்க
விளகு கானகத் திடைநின்று மெழுந்துவல் விரைந்து
குளகு தேரிய செல்வது கொள்ளிடங் கடந்து
வளகு நீடிய ஞானபூ மியைமரு வியதே.

ஞான பூமியை நண்ண லோடுமங், கான மெய்யுணர் வகத்து தித்தெழத்
தான மாமழைத் தறுகண் வாரணம், வான ளாவுவார் பொழிலின் மேயதே.

இரைநு கர்ந்திடு மெண்ண நீங்குபு, விரைய வார்பொழின் மேவ லோடுமங்
குரையி றந்தவ னுருவ நாவலின், புரையு நீழலிற் பொலியக் கண்டதே.

அசித்து முப்புர மழித்த நாதனே, நசித்து வல்வினை நழுவ நோக்கலும்
பசித்த கன்றுதாய் பாற்ப டர்ந்தென, விசித்த வன்பொடும் விரைந்த டுத்ததே.

மெய்வி திர்ப்புற விழியி னீருகக், கைபெ டுத்துமுன் கால்வ ளைத்துமண்
ணையெ னப்படுத் தமுத நாயகன், செய்ய சேவடி சென்னி வைத்ததே.

எழுந்து சூழ்ந்துமுன் னெய்திக் கூத்துமிட், டழுந்து நீர்க்கட லயின்ற கார்க்குரல்
விழுந்து கீழ்ப்பட மிக்கு லம்பிமால், கொழுந்து கொண்டெழ விதுகு றிக்குமே.10

பண்டைவல் வினையின் றிருக்கினா லுடலம் பற்பல வெடுத்திது காறு
மண்டிய துயரி னழுந்திநின் றழிந்தா மற்றுமுன் செய்தவம் யாதோ
தொண்டுகொண் டருளு மமுதநா யகனைத் துணையிலா வெமதுயிர்த் துணையை
யண்டருக் கரிய வமரனை நாவ லணிநிழ லெளிவரக் கண்டாம். 11

இனியிவற் குரிய பூசனை யியற்றி யிருண்மல முதலொடுந் துமியப்
புனிதமெய்ஞ் ஞான வின்பமுத் தியினைப் பொருந்துவ தேகட னென்னக்
கனியுள முருகக் கதிர்பொழி தரளங் கனைநெடுந் திரையெடுத் தெறியும்
பனிமலர்த் தீர்த்தம் பலவுமாங் கெய்திப் படிந்திருங் கரையினே றியதே.

நீட்டிவார் கரத்திற் கோட்டுறு மலரு நிலத்தலர் மலரும்பைங் கொடிகள்
காட்டுபன் மலரும் புனல்வளர் மலருங் கவின்றளிர் காய்கனி பலவும்
வேட்டன மிதப்பப் பறித்துவெண் ணாவல் விரிநிழ லொருசிறை யிருத்திப்
பாட்டளி முரலத் தழைகொடு திருமுன் பயிறுரா றுடைத்தகற் றியதே.

செம்பொன்னு நவமணியுஞ் செழுமலருங் கொணர்ந்திருக்கு
மம்பொன்னிப் புனல்புழைக்கை யகநிரப்பிப் போதந்து
முன்பன்ன மறியாத முதல்வனார் முடியாட்டி
மன்பன்ன மலர்பலவு மல்க

தீங்கனிகா யெதிர்வைத்துத் திருவமுது செய்வித்துப்
பாங்குபெறத் தனக்கியன்ற பணிபலவு மினிதாற்றி
நீங்கருமெய் யன்பினொடு நின்றுதுதி முழக்கெழுப்பி
யாங்குவலம் வந்தொருசா ரமர்ந்துதியா னித்திறைஞ்சி.

கறைகொண்ட நெடுஞ்சூல காபாலி மகிழ்கூர
விறைகொண்ட வித்தலத்தி னிருந்துசல மலம்விடுப்பி
னிறைகொண்ட பிழைவந்து நிற்குமென வரிதகன்று
நறைகொண்ட தன்கான நண்ணியதவ் வயக்களிறு.

இன்னவா றிபம்பூசை யியற்றிவருங் காலத்து
முன்னரே யாங்கொருசார் முருகவிழ்பூ மாத்துதித்து
நன்னர்நூ லிழைத்திழைத்து நண்ணுவது வெண்ணாவ
றன்னைநேர் கண்டதனிற் சார்ந்ததா லொருசிலம்பி.

முன்செய்த தவப்பயத்தான் முருகவிழ்மென் மலர்நாவன்
மன்செய்த பசுங்கோட்டின் மனைதனக்குச் செயமுயன்று
மின்செய்த நூலிழைத்து மேலொடுகீ ழுழிதருங்காற்
கொன்செய்த பெருமானார் திருமுன்னர்க் குறுகியதே.

## கஜாரண்யப்படலம்.

சேஞரு மணிமேருச் சிலைவளைத்த செழுமலையைப்
பூஞர மென்னாகம் பூண்டாரும் பூரணனைக்
கோஞக வணையானுங் குறுகரிய குருஉமணியை
மாஞத மலந்துமிய மருங்கெதிர்கண் டதுமாதோ.

செஞ்சுடரோன் றனைக்கண்ட திகழ்விழியி னிருளேபோன்
மஞ்சனுருக் கண்டலுமே மறைத்தமலம் பெரிதிரியத்
துஞ்சியநல் லறிவுதிப்பத் தொழுதெழுந்தென் னேயென்னே
கஞ்சனரி தமக்கரியான் காட்சிகொடுத் தனனென்ஞ.

கழிகாத லுளத்தெழலுங் கண்ணுதலைப் பிரியாது
வழிபாடு செயல்வேண்டு மற்றதற்கு மனுவேந்தா
யொழியாது பொருள்பலவு முழையர்தரப் பெற்றிலனென்
றழியாமற் றினநூலி லுலயஞ்செய் தெனத்துணிந்து.

வானளவு தூவிகையின் மணிக்கோயின் மண்டபங்க
ளானபெருங் கோபுரங்க ளணிகெழுமா மதிற்குலங்க
ளூனமற வுறுப்பிஞெடு முஞற்றுவவே யனையபலவு
மீனமற வாய்நூலி னிழைத்துநிரப் பியதன்றே.

வெண்ஞவ னறுங்கனிமேல் விறந்தொளிர்தா ரகைநிகர்ப்பத்
மண்ஞர்வெண் மதிநிரம்பித் தயங்கியுமண் டலமேபோ
னண்ஞநின் றதுகோயி லுற்றிசையும் போக்கியநூன்
மண்ஞரத் தூங்கியன மதிக்கிரணம் போன்றனவே.

கலதிபுரி கொடுஞ்சாபங் கையகலத் தவமுன்பு
நிலவுபுரிந் தொளிர்கலைக ணிரம்பியது மறுவலும்புக்
கலகிறவங் குயின்றுகறை யகன்றுமுழு வடிவானு
மிலகமலன் முடிக்கணியா யிருந்ததூஉம் பொருங்கோயில்.

கடிகமழும் வெண்ஞவல் கஞலியபா சடைதொடுத்து
வடிநெடுநூ லிழைத்தெடுத்த மணிக்கோயில் வார்கொடியி
னிடியுயர்த்தோ னெனத்தாஞ மினியவரங் கொளமேக
மடிகண்முடி மிசையமுத தாரைகளாட் டுதல்போலும்.

ஆயிரங்கண் ணுடையவன்முன் னடுத்துநாண் மிசைகவித்த
மாயிருந்தண் டாளமா லிகைக்குடையும் பொருமவஞற்
பாயிருந்த நித்திலப்பூம் பந்தருமொத் திடுமெங்கு
மூயிலங்கி யிறையவஞர் முடிமிசைமல் கியகோயில்.

ஒருகங்கை தனைச்சடையி னொளித்திருந்தா னெனவேனை
யிருகங்கை நதியும்விசும் பிடைநின்று மிறைவனொடு

பொருந்தக் கங்கையினைப் புயக்கமிசைக் கவிந்ததூஉ-
மருவும்புல் லியசிலம்பி வாய்நூலின் மணிக்கோயில்.

கங்கையணிந் ததுமன்றிக் காமர்திரு வுருமுழுதும்
பொங்குபுனற் றிரளான புண்ணியர்பால் வழியாட்டிற்
றங்குவதே கடனென்று தாங்கநெடும் பார்புணரி
யங்கணைந்து முடிமிசைபோர்த் தலங்கியதூஉம் பொரூஉங்கோயில்.

உரைத்தபெரும் பூதங்க ளோரைந்து ளொருதான்மற்
றிரைத்தபுனற் சடைக்கற்றை யெம்பிரா னுருவாகித்
தரைத்தலைவை கியதேவர்க்குஞ் சான்றுரைத்தா லெனப்புனலே
நிரைத்தமணிக் கோயிலுமாய் நிற்பதூஉம் பொருமதுவே.

பைத்தபாம் பணையானும் பங்கயனும் வானவருந்
தத்துநீர்க் கடல்புடைசூழ் தரையவரும் பணிந்திரப்ப
முத்தியா திகள்கொடுக்கு முதிர்ந்தபெரும் புகழ்சூழ்ந்து
மெத்திமேக் குறநிவந்து விளங்கியதும் பொருங்கோயில்.

வேற்றொருமால் வரைச்சிலையால் வேறொருவர் திருக்கோயி
லாற்றுதல்வேண் டாவெனவே யவிரொளிவெள் ளியங்கிரியே
போற்றுமெழிற் கோயிலுமாய்ப் போந்துசெழு நீர்த்திரளார்
வீற்றிருப்ப விருந்ததூஉம் விழையுமொரு நூற்கோயில்.

எந்தவுயி ரடித்தொண்டி னியல்கின்ற தந்தவுயிர்
தந்தவுடல் பொருளுயிருந் தகவேற்றுக் கருணைசெய்யு
மந்தமதி முடிவேய்ந்தா ரன்புமிகுஞ் சிலம்பியின்வாய்
வந்தசிறு நூற்கோயின் மணிக்கோயி லெனக்கொண்டார்.

உந்தவுகு சிறுநூலி னொருகோயில் வெண்ணாவற்
சீதநிழ லமர்ந்தபிரான் றிருக்கோயி லெனக்கொண்டா
ராதலினெவ் வுயிரெதனை யளிப்பினுமன் பொன்றுளதேற்
சாதல்பிறப் பிணையறுக்குந் தவமாக முடியுமே.

புல்லியமெல் லுடற்சிலம்பி புனிதர்மகிழ் திருக்கோயின்
மெல்லிழையி னனிவருந்தி மிகவியற்றுந் திறமறிந்து
நல்லவுடல் பொருளாதி நன்குடைய செல்வன்றே
வொல்லுநெறி பாற்பணிசெய் தொழுகாமைக் கென்செய்கேன்.

உறுநூலின் முறையாற்று னுஞற்றுபணி யினுஞ்சிறப்பச்
சிறுநூலின் மணிக்கோயில் செய்துமுடித் திடுசிலம்பி
நறுநாவ லிடைவதித னமையென்று முன்புதான்
பெறுநீர்மை மரமெய்திப் பேணியிருந் ததையன்றே.

சிலம்பிசிறு நூற்கோயில் செய்திறைஞ்சி வலம்வந்து சென்று பாங்கர்
நலம்பெறுதன் னிருக்கையினை நண்ணியவந் நாள்விடிய னணுகுங் கால
மலங்குமணிக் காவிரியிற் புனலாடி யலர்கனிகாயமையக் கொண்டு
புலம்புகளி யளியுளரும் புகர்முகத்த கடகளிறு புகுந்த தன்றே. 36

கதழ்ந்துபுகு மதவேழங் காமருநூற் கோயிலெதிர் கண்டு கண்டோ
ரிதந்தழுவு சிவபெருமான் சூழலெலா மிதுவளைந்த தென்கொல் கெட்டேன்
பதந்தழுவு மடியார்க ளிதுசூழ்ந்த பனிமலரும் பறித்துச் சாத்தார்
மதந்தழுவு புல்லியர்போல் வந்ததனைக் கொல்வலென மதித்துப் பின்னர். 37

நெடும்புழைக்கைத் தலத்திருந்த மலர்முதற்பல் பொருளொருபா னிறுவி வாசம்
படும்பசுந்தண் பொழின்முழுதுந் துளவிவிழிக் கெதிர்சிலம்பி படாத வாற்றுற்
கொடும்பனிவெண் மதிக்கொழுந்து மிலைத்தவர்தந் திருமுன்பு குறுகி நூலா
லிடும்பெரிய கோயிலினைச் சிதைத்திடமெல் லாம்புனித மியற்றிச் சென்று. 38

நீட்டுசிறு நூற்றிரளா னிரந்தரித்த கோயிலெலா நிமிடப் போதில்
வீட்டிநனி யுழக்குதலான் மிளிர்தருமந் நூற்பரிசம் விரவுந் தீமை
யோட்டநறும் புனன்மீட்டு முறத்தோய்ந்து வெண்ணாவன் மூல மெய்தி
யேட்டையற முன்புபோற் பூசித்துத் தனதிருக்கைக் கேகிற் றம்மா. 39

நெருநனூற் றிரளினு னிகழ்த்துங் கோயிற்
கருணையங் கடலினைக் கண்டு சூழ்ந்தவன்
மருமலர்ச் சேவடி வணங்கு வாமெனப்
பொருவறு சிலம்பியும் புகுந்த தென்பவே. 40

நறுங்கனி தூங்குவெண் ணாவன் மென்னிழல்
பெறுங்கட வுளர்பிரான் பேணு மாலய
மிறுங்கரி சதிந்திஃதி யார்செய் தாரென
வறுங்களங் கண்டவ ரென்ன மாழ்குமே. 41

மண்ணிடை வீழுமெழு மறுகு நாவலி
னண்ணிய சரகொடு நவையு றுவகை
யண்ணலுக் கிழைத்தவா லயமுஞ் சிந்துமே
யெண்ணிய தெண்ணமென் னுய் தென்னுமே. 42

ஆவவென் செய்குவ லமல னார்முடி
நாவலின் சரகலா னவமு தாகவே
பூவலர் தளிர்தழை பொதுளிற் றீதென்ன
பாவமென் றினையுமெய் பதைக்குஞ் சோருமே. 43

கையெனக் கில்லைசெய் கரிச நீக்குறச்
செய்யமே னியின்வெ செறிந்து நிற்பதோ

# திருவானைக்காப்புராணம்.

வையவோ வடியனு லாவ தென்னெனக்
கையறு கவலையிற் கலங்கிக் கன்றுமே.

மண்டிலை சரகுகா நிற்ப மற்றிது
கண்டுநிற் பதும்பிழை கதுவு மேதுயர்
கொண்டல மருதலே கொள்கைத் தன்றென
விண்டொட ராலயம் விதித்துப் போந்ததே.

நாடொறுங் கடகரி நலிந்து செல்லவுங்
கோடலின் மனத்தொடுங் கோயி லாக்குபு
பீடுறச் செல்லலிற் பெருகு வெஞ்சின
நீடலிற் சிலம்பிமற் றிதுநி னைத்ததே.

உருவநூற் கோயிலை யுலைத்துக் குப்பையை
வெருளுரு வுளத்தொடும் விமலன் மெய்யுறீஇத்
திருவடிப் பிழைத்தவா றுயிர்செ குத்தலே
பொருளெனக் கரந்தது புடையி ருந்ததே.

இரவினுந் துயிலறச் சிலம்பி யின்னணங்
கரவொடு மிருப்பவெங் களிறு புக்குலாய்
விரவிழைக் கோயிலை விளித்து முன்புபோற்
பரவிய பூசனை பயிற்றி நின்றதே.

ஒளித்தொரு மருங்கு வைகு மொள்ளிய சிலம்பி நோக்கித்
தெளித்தரு ளிறைவன் பூசை செய்திடி னிழைத்த கோயில்
விளித்தலும் வேண்டுங் கொல்லோ வெனவெழும் வெகுளி யூக்கத்
துளித்திழி மதமால் யானைத் தூங்குகைத் துளைபுக் கன்றே.

ஏகநா யகனே டொற்றித் திருந்தியா னத்தி னின்ற
நாகநீள் கரத்தி னூடு நண்ணிய சிலம்பி யென்னே
வேகமாய்க் கபாலத் தேறி வெச்செனக் கறித்த லோடு
மூகமாங் கிருந்த தோட வுலம்பிமண் ணிடைவீழ்ந் தன்றே.

இடியெனப் பிளிறுங் கையை யெடுத்தெடுத் தெறியு மண்ணி
னடியுராய்ப் புழுதி பொங்க வலமரும் புரளும் பொங்கும்
படியினின் றெழுந்து சாலப் பன்முறை யுயிர்க்குஞ் சாய்த்து
முடிநனி துளக்கும் வீழ்ந்து முடிந்தது தறுகண் வேழம்.

வார்ந்தகை நுதியை வாயின் வவ்விமால் யானை சாம்பச்
சார்ந்துமண் ணிழிய வாய்த ருன்றடை யுறுத லாலே
யூர்ந்துளர் சிலம்பி தானு முறுதுய ருழந்து மாய்ந்த
தார்ந்ததொல் பகையும் வீந்த தவையிரண் டற்கு மாதோ.

மண்ணிடைச் சிலம்பி யென்ன மதமலை யென்ன நன்றோர்
பண்ணவ ராஞர் நாவற் பனிமலர் நிழலி ஞரும்
விண்ணவர் சொரிபூ மாரி மிடைதரக் கணங்கள் சூழப்
புண்ணிய விடைமேல் கொண்டு பூவையோ டெதிரே நின்றார். 53

கண்டன ரிறைவ ஞரைக் கடவுள ரான வன்பர்
கொண்டனர் மகிழ்ச்சி யுச்சிக் கூப்பினர் செங்கை கண்க
ளுண்டுளி சிந்தச் சூழ்ந்து நூபுரஞ் சிலம்புந் தாளிற்
றண்டென விழுந்தங் காடித் தட்டமிட் டேத்தா நின்றார். 54

செழுநீர்த் திரளே திவண்மா மணியே
கழுதார் வனமா டியகண் ணுதலே
தொழுவா ரமுதே துரிசார் தமியேம்
பழுதார் பணியும் பணியாக் கிணையே. 55

அற்றார்க் கலதின் பருளா
வற்ரு தவருட் பெருவா ரிதியே
செற்றார் புரநீற் றியசே வகனே
பற்ருப் பணியும் பணியாக் கிணையே. 56

மடமா திடமா கியவாழ்க் கையனே
சுடர்மா மதிவேய்ந் தருள்சுந் தரனே
யடர்தீ விணையே மையுமாண் டருளப்
படராப் பணியும் பணியாக் கிணையே. 57

என்று தோத்திர மியம்பலு மெம்பிரான் மகிழ்ந்து
நன்று கூறுவா னயத்தகு மன்புடை யமரீர்
வென்று தீவினை யனைத்தையும் விளங்குமித் தலத்தி
ஞென்று நாம்விழை பூசனை யுஞற்றுகா ரணத்தால். 58

இழிந்த யோனியென் றியம்பிடப் படுநும தருவங்
கழிந்த தாலிவண் யாவருங் காமுறுந் தேசு
பொழிந்த வாக்கைய ராயினீர் புல்லுதீ வினையு
மொழிந்த நீயிர்மிக் குயர்ந்தனீ ரும்பரா ரிறைஞ்ச. 59

ஒருத்த லாக்கையிற் றீர்ந்தவ ருயர்ந்தநம் மூலகிற்
கருத்து மேதகும் பெருங்கண நாதரு யக்கலந்து
வருத்து மாமலம் விடைகொள வயங்குநம் மருளாற்
றிருத்த மேவரு மானந்தத் தவசமாய்த் திளைக்க. 60

ஞான கேத்திர மானவித் தலத்திடை ஞான
மோன வீட்டினை முற்றுவான் முயன்றகா ரணத்தா

வினை நீக்குமித் திருநக ரென்றுநின் பெயரான்
வான நாடரும் வழங்கிடப் பட்டுவாழ்ந் திருக்க. 61

சிலம்பி யாக்கையிற் றீர்ந்தவன் றிகிரியோன் றருட்டி
யலம்பு தீம்புனற் காவிரி நாடர சாள்வோர்
குலம்பு காவல காண்டுநங் குரைகழற் பணியாற்
புலம்பு தீர்ந்துயர் வீட்டினைப் புணர்கெனப் புகன்று. 62

அமுத நாயக ரவிர்செழு நீர்த்திரட் குறியிற்
குமுத வாயுமை யாளொடுங் கொம்மென மறைந்தார்
சுமுக ராயருள் வழங்கினர் மறையுமுன் சுகுணச்
சமுக ராயிமை யார்விமா னங்கொடு சார்ந்தார். 63

களிற்றிற் றீர்ந்தவன் கடிகெழு நாவலின் மூலப்
பிளிற்றுத் தோலுரி யாரடி பெயர்த்தும்வந் தனைசெய்
தொளிற்றுத் தேசுடை விமானமூர்ந் துயர்சிவ புரத்தின்
ஈர்ந் தானந்த வெள்ளத்துட் குளித்தான். 64

தேனைக் காதலித் துளரளி செறிகவுட் கடாத்த
வானைக் காருள் புரிதலி னானைக்கா வாயிற்
றேனைக் காவுடை யிரும்பதி யெவற்றினு மேலா
ஈனக் காமுறு வுயர்வருண் ஞானகேத் திரமே. 65

ஞான கேத்திர மானைக்கா வானது நவின்று
மான மால்விடை யூர்தியா ரருளிய வரத்தான்
மான வேலுடைச் சோழனுய்ச் சிலம்பிவா னவனு
மூன நீத்தது கேண்மினென் றுரைத்திடுஞ் சூதன். 66



# கோச்செங்கணூர் வழிபடுபடலம்.

தருமந்தி கழுமுளத்துத் தவமுனிவர் தொழுதேத்த
வருமந்தி நிறப்பெருமான் மகிழ்ந்தாடு மரங்காகுங்
தருமந்தி முசுவுகளுங் கடிபொழில்சூழ்ந் தடைந்தவர்க்குத்
திருமந்தி யாதருளுஞ் சிதம்பரமென் றொருதலமே.

என்றுவரு நமக்கருளென் றிரங்கலுறு வீரந்தோ
வென்றுவருந் தவிர்மணியி னிரணியமன் றிறைஞ்சாமை
யென்றுவரு மலக்கடலு மெண்ணியதும் வரும்பணிமி
னென்றுவருங் கடலறத்தே னிழிபொழிற்பூ வைகள்விளக்கும்.

தருக்கமல மலமென்னத் தத்தைகள்பே சுவபொழில்கண்
மருக்கமல மலர்மன்னும் வண்டிசைபா டுவதடங்க
ளிருக்கமல மலரமுறை யியம்புவன விருங்கிடைகண்
முருக்கமல மலகிடமெந் திரவழன்முற் றுவமனைகள்.

இருப்புலக்கைத் தொடர்க்காத்த விபமமர்செய் வனவெளிகள்
விருப்புலக்கைப் புயக்களமர் வினைபுரிவ தடம்பணைகள்
செருப்புலக்கை யரைப்படுக்குஞ் செறிபொழில்வை குவமதில்கள்
உருப்புலக்கை யணிந்தவர்மெய் யுரைபயில்வ திருமடங்கள்.

நதிக்கோட்டந் தருக்காமை நாணமதுப் பொழிந்தளிக்கும்
மதிக்கோட்டந் தருக்காமை மங்கையர்வா ணுதல்கதிர்க்கும்
நிதிக்கோட்டந் தருக்காமை யலைநீக்கென் றிடினிருதன்
கதிக்கோட்டந் தருக்காமை யடியாரைக் களிப்பிக்கும்.

மருந்துதரு வனமொழியார் மருந்துதரு வனமொழியா
ரருந்துதிக்குக் கற்பணியா ரருந்துதிக்குக் கற்பணியார்
பொருந்துவசத் திறந்திகழ்வார் பொருந்துவசத் திறந்திகழ்வார்
இருந்தவள மாடவணி யிருந்தவள மாடவணி.

இவ்வாறு வளஞ்சிறந்த வீரும்புலியூ ரெனும்பதியி
னெவ்வார்க டிறையளப்ப வொருமதிவெண் குடைகவித்துச்
செவ்வாய்மை யரசாளுஞ் செங்கோலி னெறிசோழன்
றவ்வாத மன்றமிழ்தின் றொழும்புபுரி சுபதேவன்.

மன்னவற்குத் திருமனையாள் வாய்ந்தபெருங் கற்புடையாள்
கன்னியர்க ளரசென்னுங் கமலவதி யெனும்பெயரா
ளின்னவர்பா லுலகுய்ய வெம்பெருமா னருள்செய்த
வன்னவரத் தாற்சிலம்பி யமரனுதிப் பானுனன்.

இருதிங்கள் சுபதேவ னெழில்வயிற்றிற் சுவையொடும்போ
யொருதிங்கள் புறங்கொடுக்கு மொளிமுகத்தாள் வயிற்றேறி
விருதிங்க ளொருபஃதும் வளர்ந்துபிறந் தறிந்தொன்றாப்
பொருதிங்க ணரசாண்டு புரிந்தபணி புகல்வாமால்.

மன்னவர் திறைமுன் னிட்டு மலரடி வணங்கிச் சூழத்
தொன்னிலங் காவல் பூண்ட சுபதேவ னென்னுஞ் சோழன்
றன்னருட் குரவன் சாரத் தாளிணைக் கமலந் தாழ்ந்து
நன்னய மொழிக ளார்த்தி நகைமுகத் திதனை வேண்டும்.

அடியனேன் மக்கட் பேறிங் காதரித் தரிய நோன்பு
நெடியவ னறியா முக்க ணிருமலற் குறித்துச் செய்தேன்
படியிலப் பயத்தான் மைந்தர்ப் பயப்பதற் கைய மின்றே
யடிகளப் புதல்வர் நல்லா றறநெறி யருளு கென்றான்.

வெற்றிவே லரசன் வேண்ட வினைத்திருக் கிரித்த மேன்மை
யுற்றவா சிரியன் சால வுவந்துமன் னவர்க ளேறே
பற்றுநூல் விதிக ளெல்லாம் பயிற்றுதுந் தெளிதி நீயென்
றற்றமில் விதிகள் சால வடைவினுற் கிளக்கப் புக்கான்.

வைதிகஞ் சைவ மென்ன வகுத்துறை யிரண்டன் மாட்டு
மெய்திடுங் கிழமை யாள ரின்னுயி ரென்ன வோம்பிச்
செய்திடத் தக்க வான திருவளர் கரும மீரெட்
டெய்திதந் தருளு மீச னுரைத்திடப் பட்டு நிற்கும்.

பூணிருது சங்கமநங் கருப்பா தானம் புஞ்சவநஞ் சீமந்தஞ் சாத கன்மம்
பேணுமுத்தா பநநாம கரண மன்னப் பிராசநமே பிரவாசம் பிண்ட விர்த்தி
காணலுறுஞ் சவுளமுப நயநங் காண்டோ பக்கிரம ணங்காண்ட மோச நஞ்சீர்
மாணுசமா வர்த்தநமே விவாக மின்ன வகுத்தபதி னறுமென மதிக்க மன்று.

பின்னரிந்நூல் பிரேதசமக் காரத் தோடு
பிறங்குசபிண் டீகரணம் பேசு மீங்குச்
சொன்னவற்று ளுத்தாநஞ் சாத கன்மத்
துறையினுஞ்சோ றூட்டுதலிற் பிண்ட விர்த்தி
தன்னையுநல் லுபநயநந் தனிற்காண் டோபக்
கிரமணந்தன் னையுமடக்கித் தகவு றலொன்று.

## கோச்செங்கணார் வழிபடுபடலம்.

நன்னர்விண்டு பலியசுபத் திரண்டுங் கூட்டி
நவிலும்விண்டு பலிசேமர் தத்தி னண்ணும்.

மறையவர்முன் மூவர்க்குந் தீக்கை யுண்டேல்
வைதிகந்தாந் திரம்விரவி வருத்த லாகு
மறைதருதாந் திரமொன்றாற் புரித ருனு
மமையுமருட் டீக்கையில தாயின் வேத
முறையுளிச்செய் திடன்முறையாம் பின்னோன் றீக்கை
முற்றினனே லாகமத்தான் முடித்த லேயா
நிறைதருதாந் திரத்தியற்று ராயிற் றீக்கை
நெடும்பயனின் றுந்தீக்கை நிகழ்ந்து ளார்க்கே.

தீக்கையிலாச் சூத்திரர்க்கு மனுக்க ளின்றிச்
செய்வதுதாந் திரவிதிமுன் செப்பு நால்வர்
நோக்கியமந் திரமுரைத்த ருனு நான்கா
னொறில்பரித்தேர் மன்னவனே நுவலக் கேளா
யாக்கமுறும் பிரணவமுன் னமோந்தம் பார்ப்பா
னரசன்சுவா காந்தம்வழ டந்தஞ் செல்வந்
தேக்குவணி கன்வவுழ டந்தம் பின்னோன்
பாஞ் சிறந்தமனு வாறுண் மாதோ.

அங்கிகாத் தந்தணரு ரடியா ராக
வலைகடற்பா யலிற்றுயின்ற னடியா ராகத்
துங்கமரு டீக்கையில ரேலன் னோர்க்குத்
தூயபிர ணவமின்றி நமோந்த மாகத்
தங்கியிடுந் தேவதோத் திரத்தைச் செய்து
தருங்கிரியை யியற்றுவது தகுதி யாகுங்
கொங்குகமழ்ந் தினவண்டின் குழுவை யோம்புங்
குருமலர்த்தார் துயல்வருந்திண் குவவுத் தோளாய்.

தூயவுப நயநமில்லா வொருமூ வர்க்குஞ்
சூத்திரர்க்கு மடவார்க்கு நமோந்த மாக
மேயபிர ணவமின்றி மனுக்க ளெல்லாம்

யாயமனு வாற்கிரியை புரியா ராயி
னும்பயனு மில்லையவ ரங்கைப் பட்ட
பாயபுனல் சுராபானம் பொருள்க ளெல்லாம்
பசுவிறைச்சி நுகர்ச்சியெனப் படுநல் வேந்தே.

புரையகற்றுந் தீக்கையுள்ளான் றீக்கை யில்லாப்
பூவையைக்கைப் பிடிப்பினவன் போற்று மன்ற
லுரைகருப்பா தானமுதற் கிரியை யெல்லா
முயர்ந்தவா கமவிதியா னுஞற்றல் வேண்டும்
வரைநிகர்த்த தடந்தோளா யனைய மாதின்
மைந்தருக்கும் வழியதுவே யாகுங் கண்டாய்
கரையனுலோ மாதியர்க்கு மனுக்க ளின்றிக்
கரிசறுக்குந் தந்திரமாத் திரமே யாகும்.

மறையவர்முன் மூவர்க்கு முரிய வாக
வருஞ்சவுச மாசமந மலிநீ ராடல்
கறையகலுஞ் சந்திதருப் பணமே யோமங்
கரைமறையோ துதல்சோம யாக மாதி
நிறைகருப்பா தானாதி தகந மாதி
நித்தியநை மித்திகமென் றிவைக ளெல்லா
மறையுமனு லோமருக்கு வேத மார்க்கத்
தடாதனவா மழலுயிர்க்கு மடல்வேன் மன்ற.

சாதகன்ம நாமமிட லன்ன மூட்டல்
சவுளமுப நயநமெனுஞ் சமக்கா ரங்கண்
மேதகவெய் திலராயி னுயர்மூ வர்க்கும்
வேதமோ துதலென்று மேலா திங்க
ணோதுசமக் காரங்க ளுற்ற்ற் றேனு
முரைத்ததம தொழுக்கநிலை யொழிந்தா ராயி
னேதமறச் சுதந்திரமாய்க் கிரியை யொன்று
மியையாதா லவர்க்குலக மேந்து தோளாய்.

வருணநிலை யொழுக்கங்கள் வழீஇய வன்னோர்
மலந்துமியச் சிவானந்த வாரி மூழ்குந்
திருவினரை யடுத்தொழுகிச் சுத்த ராயிற்
றிகழ்கருமஞ் சுதந்திரமாய்ச் செய்தன் மேவுங்
கரிசில்சமக் காரமைந்து மெய்தா ராயிற்
கரைந்தவவாந் தரசைவன் றனக்குங் கன்மத்
துரிமையிலை யாதலினாற் கிரியை யெல்லா
மொழியாமை யவனுக்கு முஞற்றல் வேண்டும்.

துலக்கமுறுந் தீக்கைதனக் குரிய ராவார்
தொகுத்தமறை யோராதி மூவர் தாமுங்

# கோச்செங்கணார் வழிபடுபடலம்.

கலக்கமில்சற் சூத்திராரு மூரிய ராகக்
கரைந்தவனு லோமருமென் றிவரே நூல்கள்
விலக்குமசற் சூத்திரர்க்கும் வளர்நீ சர்க்கும்
வெய்யகா ருகர்க்குஞ்சாங் கரர்க்கு மேனை
யலக்கணுறு மிழிகுலத்து ளமர்ந்து ளார்க்கு
மருட்டீக்கை யொருநாளு மடாது வேந்தே.

தள்ளுமசற் சூத்திரனை முதலா னோருந்
தக்கசிவ பத்திமிகுந் துயர்ந்தோர் தம்மை
நள்ளியவர் பணிபலவு நயந்து பாத
நறும்புனன்மிச் சிலுநுகரு நன்மை யெய்தி
னெள்ளுவர்கண் மலமைந்துங் குலத்தி னன்மை
யெய்திமது வனுகரா தரத்திற் சிந்தை
விள்ளிலதேல் விளங்கசற்சூத் திரனு மன்ற
வேந்தர்குலத் தோடொப்பன் வேந்தர் வேந்தே.

எத்தலுறுந் தீக்கையுள்ளா ரெவரோ யாக
வியம்புவரு ணாச்சிரம வொழுக்கந் தன்னை
நீத்தனரேற் றீக்கையிலா தவரோ டொப்பர்
நீத்தவொழுக் கத்தொருநால் வருமந் நன்மை
பாத்தியமா தருமலியுஞ் செவிடும் பித்தும்
பயில்குருடு மையுந்தீக்கைக் குரிய வாகா
சூத்திரனு மொழுக்கமுறின் மறையோ னொப்பான்
சூத்திரனொப் பான்மறையோ னொழுக்கம் விட்டால்.

துங்கஞ்சேர் தீக்கையொழுக் கத்தி னின்ற
சூத்திரன்சற் சூத்திரனு மவற்றிற் சாலாப்
பங்கஞ்சார்ந் தவனசற்சூத் திரனுஞ் சாதிப்
பகுப்புவே றிலையிருவர் தமக்கு மூவர்க்
கெங்கெங்கே யாகமத்தின் விதிக்கப் பட்ட
தியாததுமற் றங்கங்கே யெழுசேர் தீக்கை
தங்குசூத் திரர்க்குரித்தா மயில்வே லோச்சித்
தரியலரைப் புறங்காணுந் தறுகட் கோவே.

மூவருக்கும் வேதமந் திரமெங் கெங்கே
மொழிந்திடப்பட் டனவவற்றிற் கெல்லா மாங்காங்
கோவிலருள் வளரிதய மனுவைப் பின்னோ
ருரைக்கமனு வனைத்தினையு முரைக்க வந்து

# திருவானைக்காப்புராணம்.

மேவுபய னனைத்தினையுங் கொடுக்க வல்ல
　　விழுத்தகுமந் திரமதுவா தலின்வேன் மன்று
தாவின்மறை யவர்தமக்கே யாசீர் வாதஞ்
　　சாற்றுமுறை யேபுரித றகுதி யாகும்.

அரசர்முதன் மூவர்க்கு மாசீர் வாத
　　மகத்துறுபா வனையேயா மதுவே தென்னிற்
பரசறுகு சூடன்முத லியகாப் பாகப்
　　பண்ணுவது பார்த்திபனே பத்தோர் டாறு
கிரியைகளுக் குரியரிவ ரெனவு மந்தக்
　　கிரியைபுரி நூன்முறையுங் கிளந்தா மிப்பாற்
கிரியைகளுக் கின்றியமை யாத காப்புங்
　　கிளருமங்கு ராற்பணமுங் கிளப்பா முன்னர்.

இட்ட காமிய மியாவையுஞ் சித்திக்கும் பொருட்டுக்
கட்டு வார்கரஞ் சூத்திரங் காலநற் கிரியை
தொட்ட நாண்முத ஞளிர வேதொடங் கியநா
ளொட்டு காலையே வினைசெயு முன்னிவற் றென்றும்.

பொருந்து புண்ணியா வாசந முந்துறப் புரிந்து
திருந்து தண்டில நெல்லினாற் செய்திடைக் கமலம்
வரைந்து வெண்பொரி திலங்குசை மலர்கண்மேற் பரப்பி
விரிந்த வட்டத்துப் படலிகை மீமிசை யிருத்தி.

பொழிந்து தண்டுலந் தாழையின் புதுக்கனி பூதி
கிழிந்த வாடின வில்லிய கிளர்நுதி விளைந்த
வொழிந்த மெல்லிலைப் பாகுவைத் தொளிர்பொன்று லியன்ற
செழுந்தண் பாசம்வெண் சந்தனந் திமிர்ந்துடன் வைத்து.

புரிந்த புண்ணியா வாசநப் பூம்புனல் புரோக்கித்
திருந்த தண்டிலத் திணங்கவா தாரசத் தியையுந்
தெரிந்த வட்டத்தின் காலின்முத் தத்துவத் தினையும்
பரந்த வான்பிர கிருதியைப் படலிகை யிடத்தும்.

ஏழு கோடிமா மனுவையு மிலகரி சியினுந்
தாழை வான்கனித் தந்திமா முகனையு மதியைக்
கேழில் பாகடை யினுங்கிள ரிலகுளீ சுரனை
வாழு நற்றினும வார்ந்தசூத் திரத்தனந் தனையும்.

பூசை செய்துசீ டரைப்புரோக் கண்முறப் புரிந்து
தேசி கன்றிக மூநாமிகை யங்குட்டஞ் செறியப்

## கோச்செங்கணார் வழிபடுபடலம்.

பாச நன்கெடுத் தாடவர் பயில்வலக் கரத்தும்
பேசு மங்கைய ரிடக்கரத் தினும்பெறத் தரித்தல்.

ஒள்ளி தாகிய கனகசூத் திரமுத வாதேல்
வெள்ளி தாகிய பட்டுநூற் பாசமு மேவு
நன்றா றுதெனி லதுவுநற் பருத்திநூற் கயிறுங்
கொள்ள லாகுமாற் குருமதிக் கவிகைமன் னவனே.

கவச மந்திரத் திணக்கிய கயிற்றுறு முடியி
னவிர்வெண் பூதிமூ லத்தினா லணிவது முறையாம்
புவிபு ரப்பவ புண்ணியா வாசநங் காப்பென்
றிவைசெ யாதுசெய் கருமங்க ளெங்கணு மிலையே.

அங்கு ரம்புரி வினைகளுக் கதுபுரி யாரேன்
மங்க லம்பய னுருவிலக் கியவரு வினைக்குத்
தங்க வங்குரம் புரிதரிற் சகலமுங் கேடா
மிங்க ணிவ்விரு திறத்தையு மியம்புது மன்னா.

தகுமீரெண் கிரியையுளும் புஞ்சவனஞ் சீமந்தஞ் சாத கன்மம்
வருநாம கரணஞ்சோ றூட்ட லுப நிட்கிர மணமு நீக்கி
மிகுமேனைக் கிரியையினும் பவுட்டிகத்தும் வேறுமங்க லத்தின் மாட்டுந்
திகழ்தேவ தாபநத்து மேனையதா பநத்தினுஞ்சீர் விழாவின் மாட்டும்.

சம்புரோக் கணநபனஞ் சிவதீக்கை தருந்தீக்கை யபிடே கங்கள்
வம்பதா மனைபுகுதல் புதுநகரம் புகுதல்வளர் விமான மாக்கல்
வெம்பவார் செவிதுளைத்தல் வேழ்விழா வேழத்தின் மருப்பை யீர்தல்
பம்புவான் படையெடுத்தல் பால்குடித்தல் பட்டாபி டேகம் பண்ணல்.

வேள்விபவுத் திரமினைய கிரியையினு முளைவித்தல் விதிய தாகுந்
தாழ்வுபெறு சிராத்தமுத லசுபத்துஞ் சாந்தியினு மவிசா ரத்தும்
வாழ்வுபெறு தேவயாத் திரைமாட்டுஞ் சூத்திரகன் மங்கண் மாட்டும்
பாழ்வினையா மெப்பொருளும் பகர்ந்தவங்கு ராற்பணத்தைப் பண்ணின் மன்னா. 41

திங்கள்பயிர் வளர்த்தலினா லதற்குரிய விரவகத்துச் செய்த னன்றாந்
தங்குமிர வொழிந்தசிறு காலையுமாஞ் சவுளமுப நயநம் வாத்துக்
கன்மமிவை பகலன்றிக் கைக்கொளார் தேவருக்குங் கங்கு லன்றி
யங்குரம்வித் துதல்புரியா ரருமறையா கமவிதியை யறிந்து ளோரே. 42

நித்தியநை மித்திகமே பிரதிட்டை விழாவிடுநீள் சங்கி ராந்தி
சத்துருசங் காரங்கி ரகணங்கருப்பா தானாதி தகந மாதி
மெத்துகழு வாய்பவுத்தி ரந்தீக்கை மிகுசாந்தி சம்பத் தோமங்
கொத்துமற் றனைத்தினுஞ்செந் தீவளர்த்தன் முறையாகுங் கொற்ற வேந்தே. 43

# திருவானைக்காப்புராணம்.

இருது சங்கம மின்றெனிற் கருப்பமின் றதனு
விருது சங்கமத் தியலையு மியம்புதுங் கேளாய்
பொருவின் மன்னவ பூத்தவண் மூன்றிர வொழிய
மருவு தண்புனல் விதியுளி யாடுதல் வழக்காம்.

மல்குவை கறையி னன்றி மாலையா மத்திற் பூப்பிற்
புல்குமத் தினமுன் னுக மூன்றுநாட் புறத்தே வைகிப்
பல்கிய நான்கிற் றூநீர் படிந்துகொண் கனையுள் ளெண்ணிப்
பில்கொளிப் பரிதி நோக்கிப் பின்மனைச் சேறல் வேண்டும்.

பிரிவில்சண் டாளி யென்று பிரமகா தகியே யென்று
விரசகி யென்று மூன்று மியம்பிய முறையே பூப்பு
விரவிய முதனு ளாதி மேவிய முந்நாள் காறுங்
கரிசுறப் பூத்துள் ளார்க்குக் கட்டுரைத் திடுவ தாகும்.

ஒளிநகை யுறக்கோ றின்ற லொருபொழு தன்றி யுண்டல்
வளமனை காத்து வைகல் வளர்பக லுறங்கல் பேச
லளவளாய் வேறு பூத்த வணங்கினர் தம்மைத் தீண்டல்
வெளியுறு மாத ரார்க்கு மேவுறு வெற்றி வேந்தே.

அறல்படிந் தகத்தைச் சார்ந்தா ளாவினைந் தருந்தி வைகி
மறுவலும் புனலிற் றோய்ந்து மனைவளர் பாத்தி ரங்க
ளுறுகர முறுமை யன்று முழுவது முறைந்தைந் தாநா
ணறுவிரைப் புனலிற் றோய்ந்து நற்பணிக் குரிய ளாவாள்.

முந்திய பூப்பே யாயின் முற்றிய நான்கா நாளிற்
பிந்திய நறுநீர்த் தோய்ந்த பேதையை யலங்கா ரித்துக்
கந்தமென் புனலிற் றோய்ந்து காந்தனுந் தூய னாகி
வெந்தநீ றுருத்தி ராக்கம் விழுமிய வணியுந் தாங்கி.

புண்ணியா வாச னத்துப் பூம்புனல் வித்தி யாங்கத்
திண்ணிய மனுவா லாசான் றெளித்திடப் பட்டு வாம
நண்ணுற மாதை வைத்து நவின்றுசங் கிதையைக் கும்பத்
தண்ணலைப் பூசை யாற்றி யழலிடை யோமஞ் செய்து.

ஆயிரத் தெட்டே யாக வறையுநூற் றெட்டே யாக
மாயிரும் பிரம மைந்தின் வயங்கவா குதிசெய் தாலின்
மேயமென் முகுமு மூந்தை விரைத்தபால் சொரிந்த ரக்கிப்
பாயவத் திரத்தி லிட்டுப் பரமனைத் தியானம் பண்ணி.

அமுகையே யிரும றும்ம லாவித்தல் வெகுளல் வாசச்
செழுமுடி துளக்க லின்றித் தெரிவைநே ரிருப்பச் செய்து

விழுமிய மைந்தன் வேண்டின் வியன்வல நாசி யுள்ளே
யொழுகுறப் பிழிந்து வாயா லுண்ணுவித் திடுதல் வேண்டும். 52

மாசறு புண்ணி யாக வாசந மீட்டும் பண்ணித்
தேசவிர் குரவன் பூசை செய்துவே தியர்முன் ளுேரைப்
போசனம் பண்ணு வித்துப் புசிப்பது விதியா மேனை
யேசறு கிரியை யீற்று மின்னணம் புரிக மன்னே. 53

அற்றைநா ளிரவிற் பாற்சோ றயின்றிரு வோருந் தம்மை
முற்றுமாய் நிறைந்த வீசன் முயங்கருட் சத்தி யென்னப்
பற்றுற நினைந்து மைந்தர்ப் பயத்தலே யேது வாகத்
தெற்றென மதித்து மாரன் றிகழ்கலை நடாத்தல் வேண்டும். 54

பூத்துநீ ராடியநாண் முதலாகப் பன்னிருநாள் பூவை மார்க்கு
வாய்த்தகு லுறுங்கால மாதலிரு லந்நாளுண் மகமே மூலம்
பாத்தசீர் விரததினந் தனக்காகா நாள்பஞ்ச பருவ மெல்லா
நீத்துநூல் விதித்ததினம் புணராளேற் கருவொன்று நீக்கி ஞறும். 55

இருதுவின்சங் கமம்புகன்று மினியெறழுத்தோண் மன்னவனே
யியம்பக் கேளாய்
திருவளருஞ் சுபக்கிரியை யனைத்தினுக்கு நாந்திமுகஞ்
செய்தல் வேண்டு
மருவுவது வையின்காறுங் கிரியையெலாம் பிதாபுரிக
மைந்த னப்பாற்
கிரியைபுரி வதுவழக்காங் கிளர்கருப்பா தாகவிதி
கிளப்பர் மன்றே. 56

கருப்பமியைந் தமைகுறிப்பா னறிந்தநா யகன்விதிசெய் கால மந்தத்
திருப்பொலியு மதிவாரந் திங்கள்புதன் குருவெள்ளி சிறந்த நாள்க
ளருத்திமிகும் புநர்பூசம் பூசமுரோ கிணிசதய மத்த மோணம்
வருத்தமிலுத் திரத்திரைய மான்றலைசித் திரையனுடம் வங்கஞ் சோதி. 57

ஈங்குரைத்த கிழமையொரு நாளேனைக் கிரியையெவற் றினுக்கு மாகு
மோங்கியபூ ரணைபதினுன் கொருபஃதட் டமியாறைந் தொருநான் கின்ன
நீங்குதிதி களினெட்டா மிடஞ்சுத்தி யாங்கருப்ப நிலைசீ மந்தம்
வீங்குபுஞ்சு வநம்வதுவை வேள்விகுடிப் புகன்மனைக்கு மேவ நாள்பார். 58

இல்லவள்சூல் வயிற்றினளே லிருங்கணவன் முன்மேற் றிடுதல் கோயி
லில்லமுத லியவிழைத்தல் விழவுமுதற் கிரியைசெய லீன்றோர்க் கன்றிப்
புல்லசுபக் கிரியைசெய றீர்த்தயாத் திரைபிறர்பாற் புசித்தல் சார்ந்த
நல்லகட லாட்றலை மழுக்கலிவை செய்யற்க நாம வேலோய். 59

கரிசொழிய முதற்கருப்பம் வயிற்றிலுறு மாதருக்கே கருப்பா தானக்
கிரியையொடு புஞ்சுவனஞ் சீமந்த மிவைபுரியக் கிளத்து நூல்கள்
வரிசையுறப் பின்னவர்தம் வயிற்றிலுறு சூலினுக்கு வகுத்து முன்னர்ப்
புரியலுறுங் கிரியைகளே பயன்கொடுக்கும் வெவ்வேறு புரிதல் வேண்டா.

சுத்தியோ சாதத்தி னிருநான்கு தலைப்பெய்த சதவோ மஞ்செய்
தொத்தபா றயிர்நறுநெய் யவையுழுந்தும் விராயீசத் தோம மாற்றி
யெச்சமா னதைமனைவி வயிற்றிடைத்தற் புருடமனு வியம்பிக் கையை
வைச்சுநா யகனவளை நுகர்வித்த லாம்புஞ்சு வனமுங் கேளாய்.

கிழவனிறந் திடிற்கிழவன் கிழத்தியிவர் தந்தையரிக் கிரியை செய்க
கிழமையுறு மவருமில ராயினவ ருடன்பிறந்தார் கிளர்ந்து செய்க
கெழுவலுறு மவருமில ராயினவர் கிளையினுளார் யாவ ரேனுங்
கழுமலறப் புரிகவிது சீமந்த மாதிகட்குங் கடவ தாகும்.

இருமதி நான்கு மதியினு மிரநூற் றெட்டெனு மிரண்டனு மொன்று
மருவுற வோமம் வாமதே வத்தின் வயக்கியம் மனுவினு லாவி
னுருவளர் முகிழ்பா லுழுந்திவை முன்போ லொண்டொடி நாசியிற் பிழிக
பொருவரு புஞ்சு வனமிது வாகும் புகலுதுஞ் சீமந்தங் கேளாய்.

ஈரிரு மதியி னாறினெண் மதியி னெழில்வியா கிருதிமந்
சீரிய வகோர மனுவினூற் றெட்டுச் சிறப்புற வாகுதி புரிந்து
கூரிய தருப்பை யுதும்பரக் கொம்பு கோலத்தின் முள்ளிவை கூட்டி
நேருறு வித்தி யாங்கமந் திரத்தா னெற்றிமுன் றொடுத்துமே விழுத்தல்.

புதியவத் திரங்கள் பூந்தொடை கலன்கள் பொற்புற வணிந்துமூந் தாதி
முதிரொளி யழலின் முன்புபோ லோம முடித்துயர் சிவமனு வாற்கை
யுதரம்வைத் துரைத்தல் சீமந்த மாகு முலகமாண் மன்னவு வயிற்றுப்
பதிதரு கருப்ப மெறும்கொள விண்டு பலியையீங் கியற்றுதல் வேண்டும்.

இருடி கேசன் கோவிந்த னெழில்வா மனனு ராயணன்சீ
தரனற் றிருவிக் கிரமன்மா தவனே மதுசூ தனன்முமோ
தானற் பதும நாபனெனத் தக்க விண்டு வெனும்பெயரா
லரியைக் காலை நண்பகலி னுவா ககஞ்செய் தர்ச்சித்து.

அகோர மனுவால் வியாகிருதி யானு நூற்றெட் டாகுதியு
முகாத வன்பின் விண்டுமனு வுரைத்துச் சருவா ருகுதியு
மிகாநெய் யினிலா ருகுதியு மிழைத்தெண் பிரம சாரியரை
விகார மறச்சோ றூட்டுதலே விண்டு பலியாம் வேல்வேந்தே.

தரும மாதி மழவினுக்குத் தழையும் பொருட்டுச் சாதகன்மம்
புரிய லுறுவோர் மகவுயிர்க்கப் பொருந்துந் திசையின் ம

## கோச்செங்கணர் வழிபடுபடலம்.

பரிவின் மெழுகிக் கடுகெள்ளுப் பம்பப் புகைத்து நன்முகூர்த்தத்
துரிய மகளி ரோடுமெங்கட் கருப்ப வதியை யுறுத்துகவே.

சருமன் வருமன் றனன்குசன். சார்த்தி வழங்கு மியற்பெயர்கள்
பிரமன் முதனல் வருணத்துப் பிறந்தோர்க் கெல்லா மிடப்படுமா
விரவி னகத்து மகவுயிர்ப்பி னின்றே னிரகெட் டிரானுடனே
பரவு புனலிற் றுடுமெனப்போய்ப் பாய்ந்து முழுகி வினைபுரிக.

மக்கட் பவத்தி னெக்கியத்தின் மாதம் பிறக்கு மமையத்திற்
றெருக்குச் சுடரை மணியரவந் தொடருங் காலத் திரவிடைநீர்ப்
புக்குப் படிய வளர்மிருதி சாரம் புகலப் பட்டதுகாண்
மிக்குப் பகையின் வலிமுருக்கி விரிநீ ருலகம் புரக்கின்றோய்.

பிறந்த வுடனன் றெனின்முலைப்பால் பேணிக் கொடுக்கு முன்கொப்பூழ்
விறந்த நாளம் வீட்டிடுமுன் வெந்நீ ராட்டி யுறுப்பனைத்து
நிறைந்த குழவி முகந்தாதை நிகரி லிதயத் தாற்கண்டு
சிறந்த மகனை யிரணியமாச் சிந்தித் திரும்பொன் வழங்குகவே.

சதமா குதியத் திரத்தியற்றித் தழைந்த வாம மந்திரத்தி
னிதமார் காவற் பொருட்டிளவன் முகத்தை மீட்டு மெதிர்நோக்கிப்
பதமார் பஞ்சப் பிரமங்கள் பகர்ந்துச் சிசையோந் தெழிற்புருட
மதமார் மனுவை வலக்காதின் மடுக்க விஃது சாதகன்மம்.

வெல்ல நறுநெய் தேன்மூன்றும் விரவிக் குழந்தை வாய்ப்பெய்து
மல்லன் முலைகள் கழீஇவலப்பால் வயங்கு முலைப்பால் பிராசனஞ்
சொல்லி யருத்தி யத்திரத்தாற் றொடர்ந்த வுந்தி நாளத்தை
மெல்ல வரிந்து புறத்தொழிக்க வில்விட் டிலகு மணிப்பூணோய்.

அருமை மகவின் சிரப்புறத்தி லகோராத் திரத்தான் மணிக்கும்ப
மிருவி யீரைந் தினமுமிரு போதும் பூசை யினிதியற்றிப்
பொருவி லாபச் சத்தமனுப் புகன்று பட்சா குதிபுரிந்து
மருவு மரியா நந்தத்தா னெய்யா குதியு மலிவித்து.

புருட மனுவா னூற்றெட்டா குதியும் புரிந்திட் டரசிலையோ
டுரைசெய் புருடத் தாற்பலியிட் டுவெந்து வெள்ளைக் கடுகொறுங்
கரிசு தபவோ மம்புரிக காமர் குழவிக் கிதுகாப்பாம்
பரவை யுலகந் தடந்தோளிற் பரித்தோ யுத்தா பரங்கேளாய்.

மூன்று தினத்து மைந்தினத்து மொழிந்த வேழா நாளிடத்து
மான்ற குழவிப் படுக்கையினை யாற்ற வுதறிப் போட்டிடுக
வேன்ற வொருப தெனுந்தினத்தி லிருநீ ராட்டிக் குழந்தைதனைச்
சான்ற வேறு மனையகத்துச் சார்வித் திடுக தூயோரால்.

சாம்பல் புளிநெய் நெருப்பிவற்றாற் றகும்வெண் கலமா திகள்புனித
மோம்பி யறுவை யேகாலி யொலித்துத் தாக்கொண் டிலமலினந்
தேம்ப மயமண் ணுன்மெழுகித் தேங்கப் புகைத்து மட்கலம்பா
யாம்பல் பொருளும் புறத்தாக்கி யறலின் முழுகி யிருவோரும்.

பொருந்த வபநம் போற்றியற லாடிப் புண்ணி யாகத்துப்
பரந்த புனலாற் புரோக்ஷிக்கப் பட்ட புனலு மானைந்துஞ்
சொரிந்து மடக்கிற் குசையிட்டுத் துலங்குஞ் சிவமாப் பாவித்துப்
பரிந்து நுகர்க பன்னிரண்டா நாளி னுமம் பகருவதாம்.

திகழ்தரு தசமி முதலிய மூன்று திதியினிற் புண்ணிய திதியி
லகமற நூற்றெட் டாகுதி மூலத் தாக்கியச் சுதஞ்சிரத் திட்டுப்
பகர்தரு வெல்ல மாதிமுன் போலப் பருகுவித் தருமக வினுக்குப்
புகழ்சிவ வத்தம் வைத்தபின் னுமம் புகலுக புகல்வகை கேளாய்.

வயங்குமா தேவன் மயேச்சுரன் கிருத்தி வாசனற் பார்ப்பதிப் பிரியன்
றயங்குசீ கண்டன் றேவதே வேசன் சங்கர னுருத்திர னீச
னயங்கொளு மிடபத் துவசனே காம நாசனன் சிவனெனு நாமத்
தியங்கிய சனன நாண்மதிக் கேற்ப விடுவது முறைமைமன் னவனே.

அம்பிகை பவானி சுராற்சிதை தாட்சா யணியரப் பிரியைபார்ப் பதியே
வம்பறு கிரிசை சிவங்கரி யைம வதியுமை யவண்மகா தேவி
நம்புறு கௌரி யெனும்பெயர் பெண்ணி னுட்டுவ தாங்குரு வீன்றோர்
பம்பிய குடியி னுள்ளவர் பெயரும் பன்னலாம் வேறுபன் னலுமாம்.

ஆண்மக வினுக்குப் புதியநா மங்க ளமைத்திடி னிரட்டையக் கரத்து
மேண்மலி பெண்ணுக் கொற்றையக் கரத்து மியம்புக வெவ்வகைப் பெயர்க்கும்
பூண்மலி சிவாந்த மாக்குக தெத்த புத்திரற் கப்பொழு தேற்போ
னுண்மலி சாத கன்மமா திகண்முன் னடாய்ப்பெய ரிடுகநன் முறையால்.

பெயருறுத் தியபி னிருகரத் தானும் பேணிவெள் ளரிசிபா சறுகை
யியல்பத முழந்தாள் புயஞ்சிரத் திடுக வினியொரு பஃதெனுந் தினத்திற்
பயிலுமுந் நான்கிற் பத்தினே டாறிற் பல்குறு மங்கலப் பொருட்டு
மயர்வறு வனப்பின் பொருட்டும்வார் செவிக ளமைவுறத் துளைத்திடல் விதியாம்.

மும்மதி வரைப்பிற் பரிதிகாட் டுதலு முற்றிய நான்மதி வரைப்பின்
விம்மிய செருத்தற் பசுவொரு கிரண வெண்மதி காட்டலும் பொருந்துஞ்
செம்மையி னுன்கு மதியிடைச் செல்வங் திகழ்தரு மாயுளும் வளர
வம்மழ வினுக்கு நீட்கிரு மணந்தா னுற்றுதல் வேண்டுமென் னவனே.

பத்தா மிடஞ்சுத் தியதாகப் பார்த்துச் சத்தி யோசாதத்
தொத்தா குதிநூற் றெட்டியற்றி யுறுதன் மகவை யலங்கரித்துப்

# கோச்செங்கணுர் வழிபடுபடலம்.

பெற்ருன் சிவவென் ருர்த்துச்சி பிழைதீர் புருடத் தான்மோந்து
மற்ருேர் நால்வ ராலாசீர் வாத மரபிற் புரிவிக்க.

தொடர்சீர் மாமன் மகவெடுப்பச் சுவத்தி முழக்கி ஞெடும்வெளிப்பட்
டிடர்தீர் கோயிற் புகுந்துவிடை யேற்றை விடகா யினிமனுவா
லுடனே தெரிசிப் பித்துவிதி யுளியே சிவனை முருகனையும்
விடியா வன்பிற் பணிவித்து மீண்டு மனையி னீறிடுக.

வகுத்தாம் பிரவா சக்கிரியை மன்ரு வன்னப் பிராசநங்கேள்
முகுர்த்த நாட்கு முதனுளே முனிவின் மறையோர்க் கினிதூட்டி
மிகுத்த பத்தா மிடஞ்சுத்தி மேவ மகவை யலங்கரித்துப்
பகுத்துப் பிரமாங் கம்பதிற்றுப் பத்தா குதிவெவ் வேறியற்றி.

தீம்பா லிதத்தி ருகுதியுஞ் செய்தெஞ் சியபா யசமெச்சி
லோம்பா தொழித்த விளங்குழவிக் கூட்டன் முறையா ருந்திக்க
ளாம்பார்த் திபனே யெண்மதியீ.ரைந்தா மதிபன் னிருமதியு
மேம்பா டாக வுஞ்வேனும் விதியாம் பிண்ட வர்த்தநங்கேள்.

பிரம சிரமந் திரத்தோமம் பேணி நூற்றெட் டிளமகற்கு
விரவு சகளீ கரணத்தை மேவப் புரிந்திட் டாதியந்தம்
பரவ லுறுநற் பிரணவங்கள் பயின்ற வியோம வியாபியினை
யுரமிக் குறவக் குழந்தைவலக் காதி னுபதே சித்திடுக.

மதுநெய் நறும்பால் விராயமதுப் பருக்க மதுவென் மந்திரத்தால்
விதுவின் வளருங் குழந்தைதனை மிசைவித் துரிய ஞாதியரோ
டெதிரில் சுவையி னுணவார்க வீண்டு மாயு ளுடற்கினிமை
முதிர வளரு முத்தரா யணத்திற் சவுள முறைபுரிக.

கருவிற் கொருமூன் ருண்டினுமண் கதவும் பிறவிக் கொருமூன்ரும்
வருட மிகவுத் தமமஞ்சாம் வருட மேழாம் வருடமுமாம்
பொருவில் சவுள மிலையாயிற் புரியுங் கிரியைக் குரிமையிலை
யுருவில் கிரியைக் குரிமைசெயி ஞேராண் டினுள்வேண் டியபொழுதாம்.

மாதா வயிற்றிற் சூலேந்து மதியின் மேற்பட் டிருந்தாலு
மாதா பிதாவென் றிவருயிரை மறலி கவர்ந்தா லுயிடினுந்
தீதாஞ் சவுளம் புரிகிற்பிற் செறிகு லுயிர்த்த பின்னுனு
மேதா மெனச்செப் பியவாண்டொன் றிறந்த பின்னு மியற்றுகவே.

உருத்திரமந் திரத்திஞ லொருநூற்றெட் டாகுதிநன் குளுற்றித் தீமுன்
னிருத்தியமைந் தனையணியி னினிதணிந்திட் டரகரவென் றீண்ட வார்த்து
வருத்தமிரி தருஞ்சுவத்தி மங்கலவா சகத்தாலம் மைந்தன் சென்னி
திருத்தமுறு மறுகரிசி யிட்டதற்பி னிடப்பாலிற் சிறுவ னற்ருய்.

அச்சுதத்தோ டான்மயத்தின் பிண்டமோ ரகலிடைவைத் தங்கையேந்த
வெச்செனுநீர் தண்ணெனுநீர் விராயன்னத் தொடேந்தாதை விளங்கு மைந்த
னுச்சிதெளித் தத்திரத்தா ளுவிதன்வாள் வாங்கியொளிர் தருப்பை வார்வை
வைச்சுமயி ரொடமீசா னுதிமனு வாலேந்து திக்கின் மாட்டும்.

வினைபுரிந்து குறைபட்ட மயிர்தருப்பை வியனகலி னேந்து மாப்பி
தனிலிருத்தி யையைந்து பங்கிலொரு பங்கில்வளர் தலையிற் கேசம்
வினைகுடுமி யெனவிடுத்து மற்றிடமெ லாம்வபநம் வயங்கச் செய்வித்
தினியபுன லாட்டியலங் கரித்துவளர் தீயெதிரே யிருத்திப் பின்னர்.

ஆயிரத்தெட் டொருநூற்றெட் டாகசிவ மந்திரத்தா குதிகள் பேணி
மேயவுருத் திரமனுவாற் பூரணா குதிசெய்து விளம்புஞ் சுத்தி
பாயமறை மொழிந்துபசு வாசிரியன் றனக்குதவி யகலி னுப்பி
யாயதருப் பையிற்பயிரிற் பசுவெதிரத் தியின்மூலத் தொன்றிற் பாற்றல்.

மரபுளிச் சவுளஞ் சொற்ற மன்னுப நயநங் கேளாய்
கருநிலைக் காறு மேழுங் கரைந்தவெண் ணண்டு முன்னோர்க்
குரியன வவற்றி னேரே யோங்கிய பிரம தேசு
விரிதரு மாயுள் செல்வம் வேட்டவர் புரிக மன்னே.

உறுபவத் தினுக்கெண் ணண்டு மொன்பதும் பத்து மாகு
நிறுவிய வருடந் தாழ நீங்கினீ ரெட்டின் காறு
முறைமையா மதுவுந் தப்பின் முடிந்திடப் படாதம் மைந்தர்
மறுவுறு மடியா ளீன்ற மைந்தரு ளொருவ ராவர்.

மண்ணிடை வருதற் கீரை வருடமும் பத்தோ டொன்றுந்
திண்ணிய வரசர் நாய்கர் சிறுவர்க்கா மவைதாந் தப்பி
னண்ணுநா லேந்தின் காறு நவின்றவை யைந்தின் காறும்
பண்ணலா மவையுந் தப்பிற் பகர்ந்தமுன் னவரோ யாவார்.

ஏத்துப நயந முன்ன ரியம்பிய சவுளஞ் செய்தல்
சூத்திரன் றனக்குத் தீக்கை சூழ்ந்துசெய் காலத் தென்னு
மாத்தனூல் பனத்தி மார்க்கு மறைந்தன விரண்டு மன்றல்
காத்திடுங் காலத் தென்னு மிருவருங் கடுத்த வாற்றல்.

அந்தணர் தமக்கு வெள்ளி யரசர்க்கு வியாழப் புத்தேள்
புந்தியங் கடவு ளய்கற் கற்றதொடு புணர்பின் னோற்குச்
சந்திரன் குரவ ராவர் தகுஞ்சிவத் துவிசன் மைந்தர்க்
குந்துப நயந மான வுடன்சிவ தீக்கை செய்தல்.

வெய்தருள் வழங்குந் தீக்கை விரவுமூ வருக்கு முன்னர்
வைதிக சந்தி செய்தே வயங்குறு சைவ சந்தி

செய்திடன் முறையாஞ் சேர்த்த நயிட்டிகன் விரதி யென்போர்க்
குய்திசெய் சைவ சந்தி யொன்றுசெய் திடலு மாகும். 102

ஏர சந்தி தீக்கை யாளர்கள் புரியா ராயி
னத்திரஞ் சுமந்த திண்டோ ளரசனே பதித ராவ
ரத்திர சந்தி தீக்கை யாளரார் றுதலே வேண்டு
மத்திர சந்தி செய்யு மடைவுமிங் கறையக் கேளாய்.

அத்திர மனுவை யுன்னி யலையெறி புனலி னாடி
மெத்திய பிராணா யாமம் விதியுளி யியற்றி நூற்றெட்
டுத்தம சிவாத்தி ரத்தை யுறக்கணித் திரத யத்தைப் . . . .
பத்தியி னுரைத்துக் கொண்டு பாணியஞ் சலிய ராகி.

நின்றுழி நின்றே தன்னு ணின்றநின் மலனை முக்கா
லொன்றுற வலமா வந்திட் டெத்தாந மினிது செய்த
லன்றிய வினைகால் சீக்கு மத்திர சந்தி யாகும்
வென்றியிற் கிளருந் திண்டோள் விறலுடை வேந்தர் வேந்தே.

மொழிதரு மறையோ ராதி மூவர்க்கு முறையே தேசு
பொழியிள வேனில் வெப்புப் புனன்முதிர் வேனில் கூதிர்
பழியறு கால மாகும் பகர்ந்தமுன் னாளே நாண்மார்
கழிசிவத் துவிசன் மைந்தர்க் காதிரை யுத்த மந்தான்.

மறுவறு திருவோ ணந்தான் வைகாந சனுக்கு நன்று
மறையுமிக் திரநாண் மன்ற வாஞ்சவு மணச னுக்குக்
குறைவில்வா ருணநா ளாகுங் குண்டகர் கோள கர்க்கு
நிறைதரு சனன நாளு நிகழ்சில வினைக்குக் கூடும்.

அன்னசெய் வினைகள் யாவை யென்றிடி லன்ன மூட்டன்
மன்னிய சவுள மீங்கு வருமுப நயநம் வேறே
பன்னிடப் பட்ட பட்ட பந்தன நான்கு மாகு
முன்னுறு பக்க நன்றும் பின்னது முனியார் நல்லோர்.

உத்தமஞ்சத் தமிதிரையோ தசிதசமி சட்டி
யுறுதுதிகை திரிதிகைபஞ் சமியிவையோ ரேழு
மத்திமமே காதசிது வாதசியோ டிரண்டும்
வளர்பக்கத் தாமதிதேய் பக்கத்துக் கிரணக்
கொத்துறுசந் திரபலனு மிருப்பின்முதற் றிதியுங்
கொண்டசதுர்த் தசியுமாங் கொழுந்திரையோ தசிமுன்
வைத்ததிதி யொருமூன்று மறவேனைத் திதியும்
வகுத்தனர்க ளொருசாரார் மதிக்குடைமன் னவனே. 109

விடைமிதுனங் கன்னிகட கந்தனுசு மீன
மேவுமங்கு ராற்பணத்துக் கோபேழா நாளு
மடைவுறுமைந தாநாளு மெனும்விவையு மாகு
மறையுமுப நயநத்தோ ரைந்துறுப்புச் சிறந்த
தொடருமுப வீதமுட்டி நீடமுத்த ரீயஞ்
சூழுமே கலைதெண்ட மிவையவைக ளாகும்
படர்சிவத்து விசனுக்கே பகருமுட்டி நீடம்
பன்னுமுத்த ரீயமே கலையும்பின்ஞேர்க் காகா.

அவற்றுளுப வீதமுறை யாற்கொணர்பஞ் சினைநூற்
றங்குலநான் கிடைத்தொண்ணூற் றுறுசுற்றி யதனை
டிவற்றிழைவே றிரண்டிணக்கிப் புனனீற்றிற் கழுவி
யெழிற்சத்தி யோசாதத் திடக்கரங்கீ ழாகக்
கவற்றுவினை தீர்கிழக்கு மேற்குமுக மாகக்
கலந்திருவர் திரித்துவலக் கரங்கீழா லதனைத்
தவற்றகன்முப் புரியாக்கி யிலைமலர்பைந் தருப்பை
தம்முளொன்றிற் கிழக்கிருந்தோன் சார்ந்துமுன்னர் வைக்க.

பிரணவஞ்செங் கனன்மதியா தயன்வளியே பிதிரர்
பிரமனரி யரனிவரொன் றுதியொன்பான் காறும்
விரவுமிழை தமக்குரிய தேவரிரு டிகடாம்
விளம்புமுறை யேவசிட்டர் நாரதர்கா சிபரே
துரிசில்கவு சிகமுனியே யங்கிராபா ரத்து
வாசமுனி பிருகுமுனி மரீசியகத் தியர்சீர்
பரவுமிழை யனைத்தினுக்கும் பிரமந்த சுதான
பார்த்திபனே யினிக்கயிற்றை வாமத்தாற் றெளித்து.

விலங்குறக்கை களிற்பிடித்துத் தற்சனியங் குட்டம்
விரவமுடித் திடுங்காலை மூன்றுசுற்றிட் டவற்று
ளிலங்குகலை மகள்சாவித் திரிகாயத் திரியை
யிருத்தியகோ ராத்திரத்தி னிறுக்கலுப வீதந்
துலங்குபுரி மூன்றிடத்து மயனரியு மரனுந்
தொக்கிருப்பர் பனவர்முத லுல்வருக்கு மிடத்தோட்
பலங்கதுவ வணிமனுத்தாந் தற்புருட மகோரம்
பகர்வாம மாகுமிவை பார்த்திடுமென் னவனே.

சூத்திரர்க்குப் புரியொன்றே முப்புரியு மாகுஞ்
சொற்றிடுமே வருணத்தும் பிரமசரி முதலோர்க்

கியாத்திடுமுப் புரிநூலொன் றிரண்டுமூன் றொருநான்
கெனவியம்புஞ் சுப்பிரபே தம்பிறநூல் வேறும்
பாத்துரைக்கு முபவீத மாதிமட வியர்க்குப்
பகராது பின்னொரு ணயிட்டிகனைங்
ந த்கையுளா னெக்காலு மணிவா
னிகழ்த்தருச்ச ஞதிகளின் மற்றையரு மணிவார். 114

விழாவகத்திற் றீயகத்திற் புரோக்கணத்திற் செபத்தின்
மேவுமுட்டி நீடமுழ மேழாகு மெட்டும்
வழாத்தனைங் கூற்றிலொன்றி லேழிலொன்றி னகல
மருவவிழை மெல்லியதாய் வாலியதா யிருப்பிற்
றழா லுருமற் றதனையிடச் செவியினொரு தானே
சார்ந்துதொங்கச் சுற்றிவலச் செவியினொரு தானே
நழாதுசெரு குதலுத்த ரீயமுந்நூ லொப்ப
நல்லகலை யிருதானை நணுகும்வகை யணிதல். 115

முஞ்சியெனும் புன்மூன்று புரியினுறு கயிறு
மூரிநெடுஞ் சிலைநாணுஞ் சணைக்கயிறு மூவர்க்
கெஞ்சலுறு மேகலைமுச் சுற்றுறமற் றிடைமே
லிணக்குவதா மான்றோலு மியல்பியல்பான் மரித்த
வஞ்சவியன் மயிருறுதோ லங்குலமூன் றிரண்டொன்
றகலமுற விருதலையு முபவீதத் திணக்கி
விஞ்சலுறுஞ் சத்தியோ சாதமுரைத் தணிதல்
விதித்தமுஞ்சி கிடையாதேற் றருப்பையும்வே தியர்க்காம். 116

தண்டமொரு நால்வர்க்கும் பலாசுகருங் காலி
தருமத்தி மூங்கிலிவை தாமுறையே நெற்றி
தண்டமெறுழ்த் தோளுப்பி யளவுயர மாகுந்
தோலுரியா தழகினவாய்க் கோணமை வேண்டுங்
கொண்டவுப வீதமுத லானவெலா முரைத்தாங்
கொற்றவனே யினிச்சவுளம் போல்வபக முடித்து
மண்டறலிற் படிந்துசரு நுகர்ந்தசிறு வனைத்தான்
வன்னியின்றென் புறத்துவட முகமாக விருத்தி. 117

அங்கியினுத் தரத்திலுப வீதமுத லிருத்தி
யான்றசுசி மந்திரத்தா லறலினுற் றெளித்துத்
தங்குசிறு வனைப்பஞ்சப் பிரமத்தாற் றெளித்துத்
தயங்கரிசி யாதிகளா லருச்சித்து நீராற்

பொங்கழலை வியாகிருதி மந்திரத்தால் வளைத்துப்
புகாறுசங் கிதையின்வெவ்வே றைந்தோமம் புரிந்து
பங்கமற வுபவீத மாதிகளைச் சிறுவன்
பகர்தருமந் திரங்களினாற் பரிக்கும்வகை புரிதல்.

ஒக்கவுப மந்திரமந் திரமிரண்டுங் கலைக்கா
முறையைந்தி ருக்குமனு மேகலைக்கத் திரந்தான்
றக்கநெடுந் தண்டினுக்கு முப்புரிநூ றனக்குச்
சாற்றுமது வேயுத்த ரீயத்துக் காகுந்
தொக்கனைத்து மணிந்தவன்பின் காலலம்பி முக்காற்
றோயமுமூந் தளவுநுகர்ந் தங்கிவலஞ் செய்து
மிக்குவளர் பிரமகூர்ச் சத்தின்முறை புரிந்த
விளங்கியவா னைந்துநுகர்ந் தாசமநம் புரிக.

பிரமாங்க மந்திரத்தாற் சம்பாத வோமம்
பேணுகுர வன்பிரம வுபதேசஞ் செய்து
புரைதீர மனுநூற்றெட் டெண்ணலெரி வலமாய்ப்
போந்திறைஞ்சல் செய்வித்துச் சிவாத்திரத்தா குதிநூ
றொருவாது புரிந்தீசா னதியொன்பான் மனுவா
லொன்பதிற்றுச் சமிதையினோ மம்புரிவித் தறலா
லெரிகாயத் திரியின்வியா கிருதியின்வட் டிப்பித்
தேழோமந் தனித்தனிசெய் வித்தல்பிர மாங்கம்.

தேவதே வனைவணங்கி யாசிரியன் பூசை
செய்தவர்க்குத் தனக்கியன்ற செழும்பொருள்க ளுறுத்தி
மேவுகாஞ் சனமாதி யாலியல்பாத் திரத்தை
வியன்புருட மந்திரத்தால் வாங்கிவலக் கரத்திற்
பாவுநீ டண்டமிடக் கரத்தேந்தி யன்னை
பயந்தவளோ டுடன்பிறந்தா டன்னொடுடன் பிறந்த
பூவைமா ரிவருளொரு வரையடுத்துப் பிச்சை
புகரின்மொழி மொழிந்தேற்றன் மூவருக்கு முரித்தே.

பவதிமொழி முன்மொழிதல் பிராமணனுக் குரித்தாம்
பார்த்திபனுக் கிடைமொழிதல் வணிகனுக்குப் பின்னாந்
தவறறுமுத் தினமிவ்வா றிரந்திரண்டு போதுந்
தழலோம்பிச் சமிதையினு நெய்யினுமா குதிசெய்
தவமறநா லாநாளிற் பலாச்வோ மஞ்செய்
தகற்றியுப வீதமுதல் வேறணிதன் முறையா

திவறுசத்தி யோசாதத் தானூற்றெட் டோம
மியற்றிமொழி யாமைமுத லாம்விரத மொழிக்க.

விளங்கழலை முன்போலப் புனலினால் விளைத்து
வியோமவியா பியினூறுங் காண்டரிடி யோமங்
களங்கமற வொருநூறுங் காதலொடு புரிதல்
காண்டோபக் கிரமணந்தான் பிரமசரி யத்துள்
வளங்குலவு நயிட்டிகத்தை வேட்டவன்றன் குருவை
வணங்கியிரந் ததநிலைக்கச் சதவோமம் புரிந்திட்
டுளங்குளிரப் பூரணா குதியுமுறை யியற்றி
யொளியழனித் தலும்வளர்த்த லுரித்தவர்க்கு மன்னா.

மேதகு நயிட்டிக விரத மேற்குமுன்
னோதுப வீதமா திகளை யொண்ணதி
போதவிழ் தடாகமா திகளிற் போக்குபு
கோதற வேறவை யணிதல் கொள்கையே.

அருள்வளர் சிவனையு மங்கி தன்னையுங்
குருவையும் பூசைமுன் குறித்துச் செய்தலான்
மருவுமப் பூசனை மூன்றும் வைகலு
மொருவுவ திலையுப நயநத் தார்க்கெலாம்.

பயிலுப நயநமுன் பண்ண வர்க்கிய

மயரறுஞ் சயாதியோ மத்தை யாக்கியங்
கயர்வற வொடுக்குத லறம தாகுமே.

சத்தியோ சாத மிருக்குநல் வாமந் தயங்கிய வெசுர்மய மகோர
மெத்திய சாம மறைவியன் புருடம் விழுத்தகு மதர்வண மயமாஞ்
சுத்தவி சானஞ் சகலதே வர்களின் சொரூபமா மங்கமந் திரங்கள்
வைத்தவே தாங்க மாறுமாந் தெளிக மன்னவ வகுத்தவிம் மனுவை.

உரைத்தலே வேத முழுவது மோத லுரைப்பித்த லோதுவித் திடுதல்
புரைத்தபு சிவபூ சனைசெயல் வேட்டல் பூசைசெய் வித்தல்வேட் பித்த
னிரைத்ததன் பொருளைத் தக்கவர்க் களித்த னெறியுளி யீதலன் னவர்பாற்
றரைத்தலை வாங்க லேற்றலா மிவைதாந் தகுசிவத் துவிசன்பான் மிகவும்.

மேதகு சிவத்து விசனிவை யுரைத்த விதிப்படி யன்றிவே ருக
வோதிய பனுவல் விதியுளிக் கிரியை யுஞற்றுறின் மறுவலுந் தீக்கை
யாதியிற் புனித னுவனுத் தமமா வறைதரு காலங்கள் கழியிற்
றீதற வுத்தா லகவிர தத்தைச் செய்துப நயநம்பின் புரிக.

உத்தரா யணத்திற் சித்திரை யொழிந்தங் குறுமக மாதிய மதியின்
மெத்துமூ டத்தில் வெள்ளிபொன் னுருத வேலையி னுரைத்தநன் னாளி
னத்தமா வாசை யிருத்தைதிர் திதியி னணுகுமே ழாமிட மன்றச்
சுத்தியா யிருப்ப வதுவைசெய் வதன்முன் றொடங்குக சமாவருத் தநமே.

காப்பணிந் ததற்பின் கரைந்தசுக் கிரிய விரதத்தைக் கரிசறத் தொடங்கி
வாய்ப்புறு மூலத் தாகுதி நூறு வயக்குபு முந்திய விரத
யாப்பினை யகற்றி யில்லினுச் சிரம யாப்பினை யுற்றுவார் சிகையும்
கூர்ப்பர மயிருந் தவிரவே வபநங் குயிற்றிடப் பட்டுநீ ராடல்.

விஞ்சுமீ சான மாதியி னூறு வியத்தகு மாகுதி புரிந்து
முஞ்சியா திகள்விட் டிரண்டுமுப் புரிநூன் மொய்ம்புற வுறீஇமதுப் பருக்கந்
தஞ்சமார் வாம மந்திரத் தருந்தித் தழல்வலஞ் செய்தெதிர் வணங்கிச்
செஞ்செவே நீண்ட தண்டமுங் குடையுந் திகழ்ந்தபுத் தகமுங்கை யேந்தி.

மொழிதரு முபாந பதத்தொடு வடக்கு முகமுறச் சென்றுபெண் கொடிப்போல
கழிமகிழ் வொடுநின் றினியன கிளப்பக் காமரில் வினையடுத் திருந்து
பழியறு மாசீர் வாதமுற் றியபின் பலரொடு முண்பது விதியா
மிழிவறு மிதனோ டரசருக் குரிய வியல்பும்வே றுளதது கேளாய்.

கலிங்கமோ ரிரண்டு தரிக்குமுன் னரசன் கதிருமிழ் படைகரந் தரித்துத்
துலங்குசூ ரியனைத் துற்கையை வணங்கல் சூத்திர னிருகலை யகற்றி
யிலங்குமூன் றணித வியம்புமன் னவனே யியல்சமா வருத்தநத் தயில்கைத்
தலம்படு பொழுதின் மன்றலிற் றத்தந் தைவிக வந்தனை புரிக.

சாற்றுவந் தனைதான் கரும்புகிஞ் சுகம்பைந் தருப்பையென் றிவையொருங் காக
வீற்றுற வொன்றே யாகமன் னவனே விழைவொடு கொண்டுபோய் வளங்க
ளேற்றிய தனது நடுமனை யகத்தே யிருத்திநற் பூசனை புரிதல்
கோற்றொடி யவர்க்கு வதுவைநிச் சயமே கூறிய சமாவருத் தநமாம்.

வரிந்தசா தகத்தான் மன்றலுக் குரிய மாதரா டவர்களா யுளினைத்
தெரிந்துபின் மடவா ரிடப்புறத் தியல்புஞ் செப்புமா டவர்வலப் புறத்தின்
விரிந்தநல் வியல்பு மிருக்குமா நோக்கி விரிச்சியுஞ் சகுநமும் பார்த்துப்
பொருந்துறின் வதுவை புரிவது வழக்காம் பொருந்துறு தெனில்வழக் கன்றும். 1

ஒருவயிற் றுதித்தோ ரிருவருக் கிதுமற் றுடங்குறப் புரிதலோ ராண்டின்
மருவுறப் புரிதல் வழக்கில சவுள மன்னுப நயநத்து மதுவே
யொருகுல மொருகோத் திரமெனி லாகா துற்றதாய் தந்தையர் தமக்கு
வருமுறை யைந்தி னல்லது மன்று மற்றைய முறையினுங் கூடா. 1

குலங்களோ ரிரண்டுந் தூரமில் லனவாய்க் குழுமிய தலைமுறை யீரைந்
தலங்கலில் லாத தூய்மைய வாயி னத்தகு குலத்திடைப் பிறந்த

கலங்கதி ரெறிக்கு மாதராண் மைந்தன் கதுவிய வாயுளிற் றாழ்ந்து
புலங்கொளும் பனுவல் கிளந்தபே ரழகு புணர்ந்திடின் வரைவினுக் குரியள். 138

நாலிரு வயது நண்ணினுள் கவுரி நவையறு மொன்பதாம் பிராய
மேலுற வுடையா ளுரோகிணி பத்தென் றியம்பிய வாயுளாள் கன்னி
மேலுறு மீரா றுண்டினை யுடையாள் விடஎரியென் றுரைத்திடப் படுவார்
மாலறு மிவருட் கவுரியைத் தானம் வழங்கினோன் சுவர்க்கம்வாழ்ந் திருப்பன். 139

உரோகிணி தானம் பண்ணினோன் றிருமா லுறைந்துவா ழுலகில்வாழ்ந் திருப்பன்
பராவுகன் னிகையை வழங்கினோன் பிரமன் பதத்தில்வாழ்ந் திருப்பன்பன்னிரண்டு
பிராயமுற் றவளை வழங்கினோ னிரவு ரவமெனும் பெருநர குழப்பன்
னிராறின்மேம் பட்ட மாதரைக் கொடுப்போற் கிதுபய னென்றியா னறியேன்.

பூத்தவள் வதுவை முற்றுறு திருப்பிற் பூப்பவுங் கொடாதுவைத் தவளைக்
காத்திருப் பவனீ ரியக்கமும் பிதிரர் கைக்கொண்டு நுகர்தலி னந்தோ
மூத்துறு குலமு மழியுமா தலினுன் மொய்த்தபூப் பினுக்குரித் தாக
யாத்தவர் யுளின்மு ளுயுளுங் கதியு மீட்டுவோர் மன்றல்செய் தளிக்க.

பொருள்விழைந் தணங்கைக் கொடுத்தவன் றனக்கும்
புகன்றமுற் குற்றமே யடுக்கும்
பொருள்விழைந் தளித்த பூவையுந் தூய்மை
புணர்கிலள் புழுக்கையே யொப்பா
டருமுறை யின்றி வலியினுற் கவர்ந்த
தையலுங் கருநிலை யாதி
கருமமில் லவளும் விதியுளி வதுவை
காணினு மத்தகை மையரே.

பிரமமே பிரசா பத்தியந் தெய்வம் பேணுமா ரிடம்வள ரசுரம்
பரவுகாந் தருவ மிராக்கதம் பசாச மென்பகர் மன்றலோ ரெட்டாங்
கரவுதீர் பிரம சரியநோற் றவர்க்குக் காமரு செல்வமிக் குடைய
வரவமே கலையை யங்கிமுன் றுன மாகநன் றளிப்பது பிரமம்.

அரிவையைக் கோடற் குரியவன் கொடுத்த வாடகத் திரட்டியம் மகளைப்
பரிவொடு சார்த்திக் கொடுப்பது பிரசா பத்தியம் வேள்விசெய் தவர்க்காங்
குரிமையின் மகளைத் தக்கணை யாக வுதவுத றெய்வமீ ராவைப்
புரியிழை யணிந்து நிதிஇயிடை மகளைப் புரையிலார்க் களிப்பதா ரிடமே.

மகட்பயந் தவனை யிரந்திரந் தீந்து வாங்கலு மொக்கலார்க் கிரும்பொன்
மிகக்கொடுத் தவராற் பயந்தவ னளிப்ப மேவலும் பிறவுமா மசுரந்
தகப்பெருங் காத லாலெதிர் நோக்கித் தங்களுட் கூடல்காந் தருவம்
பகப்பயந் தவனை யலைத்தணங் கலறப் பாழியிற் கொளலிராக் கதமே.

களித்தவர் துயின்றோர் மூத்தவ ரிவரைக் கரவினுற் கவர்வது பசாசந்
தெளித்தன மன்ற லெட்டுமந் தணர்க்கே சிறந்தன முந்திய நான்கு
மளித்தணங் கேற்கு மசுரநால் வருக்கு மாகுஞ்சூத் திரன்முத லோர்க்கு
வளைந்தகந் தருவ மிராக்கத முரிய மருவுறு தொருவர்க்கும் பசாசம்.

இன்னவா றுரைக்குஞ் சுப்பிர பேத மிவற்றினைச் சிறிதுவேற் றுமையாற்
சொன்னநூல் வேறு முளததை நிற்க தொடங்கிய வதுவைவே திகளைப்
பன்னுது மிருபத் தொருமுழ வேதி பனவருக் கரசர்க்குப் பதினைந்
தின்னலில் வணிகர்க் கொன்பது பின்னோர்க் கெழுமுழஞ் சிற்பருக் கைந்தாம். 147

மருவிய வந்த ராளர்க்கு நான்கா மங்கல மனைத்துமைந் தளிக்கும்
பெருகிட மிலையேற் பிராமணன் முதலா நால்வர்க்கும் பிறங்குவே திகைதாம்
வருமுழ மேழா றைந்துநான் காகு மற்றிவை தமக்குநே ராதே
விருமுழத் திரட்டி வேதிகை யெல்லார் தமக்குமா மிகறபு வேந்தே.

மந்திர வாச மேழிரு முழமா மற்றதற் கெட்டிலொன் றகலஞ்
சுந்தர வெண்பட் டிரித்திழை கறுப்புத் துன்னுறுச் சித்திர படமுஞ்
செந்துவர்ப் பருத்திக் கலிங்கமும் விலக்கா திகழுமங் கிலியமாக் கிடும்பொன்
முந்திரு குஞ்ச முதற்பதி னாறு முடிவுமுப் பதுமுடி வினுமாம்.

இலகொரு மருப்ப னெனமலர்க் கமல மெனவெழிற் சிவலிங்க மெனச்செய்
தலரொளி யரும்பைந் திழைத்துறு துணைபா லாக்கிமற் றதனிடை யிரண்டு
குலவிய கனகக் கயிறுகோத் ததுதான் கோதின்மங் கிலியமாங் கண்டாய்
மலர்தலை யுலகம் வியத்தகு மன்றல் வரவினைப் புகலுதுங் கேளாய்.

குருமணிக் கலனு மாலையுந் துகிலுங் கொண்டெழில் கொளவலங் கரித்திட்
டிருவர்க ளுடைய கோத்திர நாம மியம்பிநீ ரோடுதன் மகளைப்
பெருவளம் பிறங்க வீன்றவ னளிக்க பெற்றவ னில்லையேன் மகளைத்
தருமவ னுடனே பிறந்தவன் முதலோர் தம்முளே யொருவனீந் திடுக.

அங்கிமேற் றிசையி னுதன மியற்றி யாங்கொளிர் சிவாகம மனுவாற்
பொங்கெழிற் கலைமென் மலரிவை கொடுத்துப் பொற்புற விடப்புற மாகத்
தங்குவித் ததன்பி னபவிர தயத்தாற் றையலா ளிரதயந் தொட்டு
மங்கலத் திருநாண் மங்கல முழங்க மணமகன் மனைகளத் தணிக.

சத்தியுஞ் சிவமு மெனநினைந் தாசான் றகும்பிர ணவந்தொடர் மூலம்
பத்துறழ் பத்தா குதிபுரிந் தினிமை பயின்மதுப் பருக்கநன் களித்துப்
பொத்திய மணித்திண் கலத்துறு மனலும் பூதகா யத்திரி மனுவால்
வைத்தெதிர் காட்டி வயங்குமா சமநம் வாங்குவித் ததன்பின்னு யகன்முன்.

அறைவியா கிருதி மனுவினூற் றெட்டா குதிபுரிந் தங்கியிற் றென்பா
னிறைபிரா ணுதி யோமமு நிகழ்த்தி நிகழ்கருத் தேனுமந் திரத்தாற்

# கோச்செங்கணார் வழிபடுபடலம்.

கறையறு பசுவுங் கன்றுநே ரடுப்பக் கண்டழ றனக்குமேன் முகத்தின்
மறையுளி யரனைப் பூசனை யியற்றி மாதுதன் வலப்பதம் பிடித்து.

எரியழல் வடபால் வாமதே வத்தி னேழடி யியக்கியம் மியின்மே
லுரைசிவ காயத் திரியினா லெடுத்திட் டொண்டொடி வலக்கரம் பற்றிப்
பொரியுமா மகேசத் தஞ்சலி யோமம் புரிதரச் செய்துவல் வினையை
வரைதரும் வியோம வியாபிமந் திரத்தான் மனையழ லாகுதி வளர்த்து.

மறுவறு மோமம் வியாகிரு தியினும் வயங்கிய நித்தியஞ் சிறப்பென்
றறைவன பிரமாங் கங்களி னாலு மாற்றியெவ் வங்கமந் திரத்துங்
குறைவற வோமங் குயின்றுமுன் போலக் கோற்றொடி கரம்பிடித் தேகி
நிறைசுவைப் பாலிற் கால்கழீஇ யணிக ணிரப்பிய மனையகம் புகுந்து.

சத்தியோ சாதத் தான்மனை புனிதந் தழைதரச் செய்துமங் கிலிய
முத்தநேர் நகையார் நால்வர்க ளிட்ட மூரியம் பாயணை யிடையே
சத்தியே யாக நினைந்தொரு கல்லைத் தங்குவித் தொருவர்மே லொருவ
ரத்தமா டாம லுரையிறந் தலரி யம்புலி நினைந்துறங் குகவே.

வைகறை யெழுந்து நாட்கடன் முடித்து வைகலு மாரழ லோம்பிப்
பொய்கழி யோம நான்கெனுந் தினத்தும் புகல்பிர மாங்கமந் திரத்தாற்
செய்தருந் துதியைக் காட்டுபு சயாதி திகழ்வியா கிருதியா திகளின்
வெய்துறு கழுவா யோமமு மியற்றி வியன்மனை முன்புபோற் புகுந்து.

இயம்பிய வாமத் திருதுசங் கமன மியற்றியைந் தினத்துறு காலை
நயம்பட வபாந நண்ணியூர்க் கிழக்கு நடந்துதும் பரமர நோக்கி
வயம்படு முழங்கா லளவுநீ ரிறங்கி வத்திரத் தாற்கயல் பிடித்துப்
பயம்படு மத்தி மூலநற் பூசை பண்ணுக பார்த்திப ரேறே.

பத்தினில் விசுவ தேவரி தாய வெனுமனுப் பகர்ந்தொரு பதினைந்
தொத்தவா குதிசெய் தொளிர்மனை யத்தே யுறுதச திக்கினும் பூசை
பத்தியிற் புரிந்திட் டெச்சமோ ரைந்தும் பயிற்றியிட் டப்பியா கதரோ
டுத்தம வதிதி பூசையும் புரித லுறுமுறை யாகுமென் றுரைத்தான்.

இன்னவா திருங்கிரியை யீரெட்டு மினிதியம்பு
நன்னரா ரியன்பாத நளினமலர் பணிந்தேத்தித்
துன்னிநீள் பொருள்பலவுந் தொகுத்தவனை யவனிருக்கை

மனைக்குரியாண் முகநோக்கி வயங்கியபூப் புறுநாளி
னினக்குரிய வொழுக்கமிவை நிகழ்த்துதிநீ யெனவியம்பி
யினிக்கவிதித் திடுநாளி வினைவிழைச்சாற் றலுமறுகி
வுறு பனியேபோ ஞாலுண்கருவாய்த் ததுவயிற்றில்.

கருவாய்ந்து வயிற்றகத்துக் கதித்துவளர் செயன்மனையா
ளுருவாய்ந்த குறிகளினு னுணர்ந்துடனே காப்பணிந்து
பெருகார்வத் தொடுமெங்கு மாற்பணமும் பெரிதாற்றித்
தருமானு மிறைகருப்பா தாநவினை தகச்செய்தான்.

இருமதியிற் புஞ்சவந மியற்றியிரு மூன்றென்ன
வருமதியிற் சீமந்தம் வகுத்திட்டான் மனுவேந்த
னொருமதித்தண் கலையென்ன வுறுகருப்பம் வளர்தோறுங்
குருமதியி னொளிர்முகத்துக் கோற்றொடிவே றுருவானாள்.

சுவையாது நுகர்ந்திடினுந் தொகவேற்றிட் டுறுப்பனைத்து
மிவர்சாரம் புகுவிக்கு மெழில்வயிறு கருவேற்றுத்
தவநாளுந் தன்னுருவம் வேறாகித் தக்கவவை
யவநாளும் வேறாகி யலங்கும்வகை புரிந்ததே.

கொண்டல்படிந் திடுஞ்செம்பொற் குவடெனவு மலர்பதத்து
வண்டுபடிந் திடுங்கனக வனசமுகிழ்த் துணையெனவுங்
கண்டவர்கள் வியப்பெய்தக் கடையவொரு தலையாக்கு
மண்டியபொற் செப்பெனவும் வளர்முலைகள் கறுத்தனவே.

மாரவேண் முதற்கணையாய் வயங்குமுலை கறுத்தலொடும்
வீரமார் கடைக்கணையாய் விளங்கும்விழி மலர்நோக்கிக்
கோரமா யெதிர்ந்தவரைக் குமைக்குமருந் திறஞ்சிறிது
தீரவே யுள்வாங்கிச் சிறந்தநிறம் பசந்தனவே.

கண்ணீல மெனுமனையாள் காமர்நிறம் பசத்தலொடு
நண்ணீர்மை நுதலென்னு நகைமதியு நிறம்பசந்த
கண்ணீர்மைக் கணவனருந் தாவமிழ்துள் ளேமிகுந்து
வெண்ணீர்மை போர்த்ததென விளர்த்ததுசெவ் வாயதரம்.

தன்னுருவந் தோற்றுமற் றறுகண்மை யொடுந்தாக்கும்
பொன்னுருவ முலைகறுத்துப் பொலிவழித லெதிர்நோக்கி
மன்னுவகை தலைக்கொள்ள வயங்குருவீங் கியதேய்ப்ப
நிடைவிழிக்குப் புலனாக விளங்கியதே.

அருங்கலம்புத் திரனன்றி யரிவையர்க்குப் பொன்னாதி
யிருங்கலமற் றருங்கலமா யிராதுமிகை யென்பாள்போற்
பெருங்கலன்கள் பொறையாற்றாப் பெற்றியினாற் பேரணியு
மொருங்கலர்மா லையுமுவப்பி னணியாத தளர்வினளே.

கருவிடத்து நீறிடுதல் கடனென்று திருநீறும்
பொருதடந்தோண் மகன்பழகப் புகையுண்ட கருமண்ணுந்

# கோச்செங்கணார் வழிபடுபடலம்.

தெருளுயிரக் கருவினிடைச் சிவணுநிலை யிதுபோலென்
றுருவநறுந் தீம்புளியு முவந்தருந்தும் வயாநிறைந்த.

ஐயிருநன் மதியடுப்ப வகடுளைந்து கமலவதி
மெய்யினையக் கருமதலை மிளிர்ந்துசிரங் கீழ்நோக்க
வொய்யெனச்சென் றரசனிடை யுழையருரைத் தலுங்கணிகள்
பையவிது பொழுதகலிற் பார்த்திபனே நன்றென்றார்.

நன்முகுர்த்தம் வருமளவு நளிமைந்தன் பிறவாமை
யென்முயன்று மெனவாச னினைகின்ற செயல்கேளா
வன்மதியிற் கமலவதி மற்றென்னைத் தலைகீழா
வென்மணிநூ புரத்தாளின் யாத்தினித்தூக் குகவென்றாள்.

ஈங்கிதுவுந் திருவருளா லியன்றதென வலித்தரச
னுங்கதுவே புரிமினென வயலிருந்தா ரதுபுரிந்து
தீங்குறுகா லங்கடந்த செவ்வியினி லிறக்கினா
ரோங்குவலம் புரிமுத்தி னொருமைந்த னுதித்திட்டான்.

தக்கபவ முறுங்காலந் தாழ்த்தலினாற் றனிமைந்தன்
செக்கர்நிற விழியினனாய்த் திகழ்ந்தொளிருஞ் செயனோக்கி
மைக்கணாறு கமலவதி வளர்கோச்செங் கண்ணனோ
தொக்கவறந் தலையெடுப்பத் தோன்றியவிம் மணியென்றாள்.

உறைந்த சோழநா டேயன்றி யுலகெலாம் வியப்ப
விறந்த தேவரும் பிதிரரும் விழுத்தக நினைப்ப
மறந்த வாததெம் மன்னரு மனங்களி கூர்ப்பச்
சிறந்த கான்முளை பிறத்தலுந் திகழ்சுப தேவன்.

அறங்க ளாகுக வாலயந் தொறுஞ்சிறப் பெடுக்க
பிறங்கு மாநகர்த் தெய்வமா திகளும்பே ணிடுக
மறங்கு லாவுதெம் மன்னர்கா ணிகளம்வாய் விடுக்க
வுறங்கு வாருள ரேலவர்க் குறுமகி ழுறுக்க.

திறைகொ டாதுசில் லாண்டுதெம் மன்னரே சிறக்க
கறைகொ டாதுசில் லாண்டுவாழ் குடிகளே களிக்க
குறைகொ டாதமா நகரெலாங் கோடணை கிளக்க
மறைகொ டாதுபண் டாரம்வாய் திறக்கவென் றேவி.

தூய நீர்படிந் தடுத்தனன் றோன்றலை நோக்கி
மேய சாதகன் மத்தினை விதியுளி யியற்றி
யாய காஞ்சன மாதிக டானமா வளித்துப்
பாய வோமமும் பத்துநா ளளவுமாற் றினனால்.

செய்ய கோலுடை மன்னவர் கையுறை செறித்திட்
டைய வோகையின் விஞயிஞர்க் கதிமகிழ் சிறப்ப
வெய்ய வேலினன் விழுக்கலன் பூந்துகில் பிறவும்
பெய்யு மாரிபோல் வழங்கினன் பெரும்புகழ் நிறுத்தான்.

வளருத் தாபகம் வயக்கிவார் காதிணை துளைத்துத்
தெளிபு மாமதி மனைவிகோச் செங்கணு ஞெவென்
றளவி லோகையி னறைந்தவந் நாமமே மகற்கு
வெளிறில் கேள்வியான் விதியுளி யிட்டழைத் தனஞல்.

கொங்கு யிர்த்ததார்க் கொற்றவன் குறித்தநா ளேனை
மங்க லத்தபல் வினைகளு மரபுளி யியற்ற
வங்கண் மெல்லிய லணங்கின ராற்றுவ வாற்றத்
தங்கு மைந்தருந் தனிமதி யெனவளர் கின்றூர்.

இவ்வுலகே நாற்பொருட்கு மிடமென்று காட்டுதல்போ
லெவ்வமறு நிலத்திருகை யிருத்திநெடு வான்போகந்
துவ்வுதல்யான் விழைந்திலே னெனத்தலையைத் துளக்குதல்போற்
செவ்விபெறு முகநிமிர்த்துச் செங்கீரை யாடினர்.

மாயையெனும் பெருந்தொட்டில் வல்வினையின் கயிறியக்கிப்
பாயபெரும் புவனமெனும் பரப்பனைத்துஞ் சென்றுட
லாயவொரு தாலொழிய வடுத்தவரை மணித்தொட்டி
லேயும்வகை யியைவித்திட் டேழையர்தா லாட்டினர்.

எஞ்ஞான மில்லாம விதுகாறு நிலைகாணு
வஞ்ஞானப் பெருங்கடலி லலைப்புண்ட துயர்தீர்க்கு
மெய்ஞ்ஞான வரவறிந்த மிகுமகிழ்வின் விளைவேபோற்
றஞ்ஞானம் பெறவந்தார் சப்பாணி கொட்டினர்.

இரவிமரு மானென்னு மியல்பெவர்க்குந் தெரிப்பவர்போ
லரவமணி மேகலையி னணங்கனையார் முகமென்னும்
புரியிதழ்த்தா மரைமலர்கள் பொற்பவலர் தரச்சென்று
முரிவிலருள் பெறவந்தார் முத்தமளித் தருளினர்.

கானனையின் கற்பகப்பூங் கண்ணியரு மிருடியரும்
பானனையு மணிச்சிறுவாய்ப் பாலன்வரு கெனவிளியாத்
தானனைய பெருந்தவத்தாற் சார்ந்தபெரி யவர்தம்மை
மானனைய விழிமடவார் வருகவரு கெனவிளித்தார்.

சந்திரனீ சூரியனிற் றனிமைந்தன் பயிர்வளர்க்கு
மந்தரனீ யெவ்வுயிரு மளிக்குமிவன் முரணியான்

# கோச்செங்கணார் வழிபடுபடலம்.

சுந்தரமா ரிவனுடனே தொக்காட வருகவெனப்
பைந்தொடியார் மதிவிளிப்பப் பார்த்துமனங் களிகூர்ந்தார்.

உற்றதோர் வினையன்றி யுருதததுசெய் தாலதனைப்
பற்றலா ரெனவழித்துப் பாரளித்த றெளிப்பவர்போன்
முற்றிலான் மணற்கொழித்து மொய்த்தசிறு மியரிழைத்த
சிற்றிலா னவையவர்கள் சினந்தலறச் சிதைத்திட்டார்.

பிறவியெனு நெடும்பகையும் பெருகுகலி யின்பகையு
மறமலிமன் னவர்பகையும் வையகத்தோர் தீவினையு
மறவொழிக வறமனைத்து மமர்கவெனச் சாற்றுதல்போற்
சிறுவிரல்க ளொளிதுளும்பச் சிறுபறைகண் முழக்கினார்.

பறந்தலையி னெதிர்ந்தவர்கள் பன்மணித்தேர் புறங்கொடுப்ப
மறந்தழையு மணிநெடுந்தேர் வல்லையுகைத் திடற்குரியார்
பிறந்தகதிர்க் குலத்தினுக்குப் பெரிதுமிஃ தியைவதெனச்
சிறந்தசிறு வர்களொடும்போய்ச் சிறுதேரங் குருட்டினார்.

இத்தகைய விளையாட்டி னியல்பொழிய வைந்தாண்டிற்
பைத்தநெடுங் கடலுலகம் பரிக்குமொரு சுபதேவன்
மெத்தியபே ருவகையனாய் விழுத்தகுமங் கலஞ்சிறப்பப்
பொத்துமெழிற் கலைமகளைப் புணர்வித்தான் மகனார்க்கு.

சின்னாளிற் பயில்கலைகள் செயிர்தீர மிகப்பயின்று
பின்னார்வத் தொடும்படையின் பெருங்கடலைக் கரைகடந்து
துன்னார்கள் குடர்குழம்பத் துரகதமுங் கடகளிறும்

ஒங்குமுப நயனவினை யொருபதிற்றாண் டினிற்பெற்று
வீங்குமறை முழுதோதி விழுத்தகைமை யொழுக்கெய்திப்
பாங்குபெறும் பதினாறாண் டினில்வதுவை பயின்றுலகந்
தாங்குமுறை மையும்பெற்றார் தறுகண்வினைப் பவமற்றார்.

மண்ணுலகஞ் செங்கோலின் மலிவெய்த வேள்விகளால்
விண்ணுலக மலிவெய்த வேத்தவையின் வீற்றிருந்து
நண்ணலர்கள் பணிகேட்ப நவையனைத்து நலிந்தொழியப்
புண்ணியமெங் கணும்வளரப் புகழரசு புரிகாலை.

விளையாடும் பருவத்தும் வெண்ணாவல் வீற்றிருந்த
வளையாடு மணிநாகத் தகலத்தார் திருவடியே
யுளநாடி வருமவர்தா மோங்கியமுற் பவநினைந்தே
யளவாத திருப்பணிக ளாக்குதற்கு மனம்வைத்தார்.

படிநெளிய நாற்படையும் பரப்பியெழுந் தடையலர்த
முடிகளொடு முடிபுரள மொய்யமரி னுயிர்பருகிக்
கடிகெழுபல் வளங்கவர்ந்து கழலடைந்தோர் திறைவாங்கி
மடிவில்பொரு ளொடுநாவல் வனத்தினைமுற் றினர்மாதோ. 197

முந்திய பவந்தொறு முற்றி நின்றதோ
ரந்தமி லன்புமிக் கார நாவலின்
கந்தமென் னீழலிற் கலந்து ளார்பதஞ்
சிந்தைசென் றிறுகுறச் சென்று தாழ்ந்தனர். 198

திருவுரு நோக்கினர் செங்க ணீருக
வுருகினர் குழைந்தன ருலப்பி லானந்தம்
பருகினர் மறைபல பாடி யாடினர்
பெருகிய வன்பொடும் பெயர்ந்து சூழ்ந்தனர். 199

அரிதவ ணகன்றகி லாண்ட வல்லிதன்
பரிபுரச் சீறடி பணிந்து போற்றினார்
வரியளி முரலுமவ் வனத்தி லோர்சிறை
யுரிமைசெய் பரிசனத் தோடும் வைகினார். 200

சூழ்ச்சியின் மிகுந்தவர் தொகுப்ப நோக்குபு
வாழ்ச்சிவெண் ணாவலின் மருவி னார்க்கிவண்
டாழ்ச்சியில் பொருளெலாந் தயங்கு மாலயம்
வீழ்ச்சியில் வினைஞரால் விதிக்க வென்றனர். 201

அருடலைக் கொண்டுசென் றமைச்ச ராதியோ
ருருவள ருலோகமிக் குருக்கு வாரையுங்
குருமணித் திரள்களைக் குயிற்று வாரையுந்
தருகவென் றேவினர் வியவர் தங்களை. 202

வியவரும் வினைஞரை விளிப்ப வேகினார், நயவரு மிரவியு நரலை சென்றதாங்
கயர்வுறு மாலையு மடுத்த தவ்விராக், கயவுரிப் போர்வையார் கனவிற் சொல்லுவார்.

அடியவர் வேடமோ டடுத்த நாயகர், முடிகெழு வேந்தனை முகத்து நோக்குபு
படிமுழு தாள்பவ பணிபொன் னாதியான், மிடியறச் செய்வது வேட்டு நின்றனை.

வேட்டவவ் வுளத்தினை விடுதி விண்ணவர், நாட்டுள தச்சன்மு னண்ணி நம்முழை
வாட்டமி னிருமித வரங்கொண் முன்னரே, கோட்டமி லாலயங் குயிற்ற வெண்ணினான்.

மேவிய கெண்டகை விலங்கற் சாரலிற்
பாவிய கெண்டகை நதியின் பாங்கரிற்
றூவிகை விமானந்தன் முடிக்கை யாவிழைத்
தோவிலன் பாலிவ ணுறுத்த லூக்கினான். 206

# கோச்செங்கணார் வழிபடுபடலம்.

ஆங்கவற் கதனையவ் வாற்றி னிட்டுநீ
நீங்குகென் றுமது நிகழ்த்தி யன்னவன்
பாங்குறு மித்தலம் படர்ந்து மாதவந்
தாங்கினன் னிருமிதத் தலைமை பூண்டனன்.

ஆதலி னாங்குநீ யடுத்திட் டவ்வயிற்
கோதறு முருத்திரர் கோடி யோர்குழீஇ
மேதகு பூசனை விளைத்துப் போற்றிய
நாதரு முளரவர் தம்மை நண்ணுதி.

முன்னவ ரருளினான் மொழிந்த வாறுநீ
பின்னது தனையிவட் பெயர்த்து வையென
நன்னய மொழியினா னவின்று நீங்கினார்
சொன்னவை நனவெனத் துணிந்து சோழனார்.

விடிந்தபி னமைச்சரை விளித்து மற்றிவண்
முடிந்தது முதல்வனா ரருளி தென்றவர்
தொடர்ந்தவர் நால்வகைச் சேனை சூழ்தரப்
படர்ந்தனர் வடமுகம் பார்த்து வேந்தனார்.

கலைச்செழுங் கரத்தவர் கரைந்த கெண்டகைச்
சிலைத்தலை நதியினைச் சேர்ந்து பாங்கரி
னிலைத்தநின் மலனடி நிகரில் வந்தனை
நலத்தகப் புரிந்துசின் னாளங் குற்றனர்.

முந்திடத் தெய்திமுக் கண்ணர் கூறுவா
ரிந்திடத் துளதஃ தெடுத்து மீட்டுமிங்
குந்திடத் துறுகென வுறுத்திச் சென்மதி
யந்திடத் துறுமென வருளிப் போயினார்.

அயிலுறு சூற்படை யமலர் கூறலும்

பயிலுறு நதியிடைப் படிந்து நேருறக்
கயிலையை நேர்விமா னத்தைக் கண்டனர்.

புரையறு சிற்பநூல் புகன்ற வாற்றினால்
வரையென விலகிய விமானம் வல்லையே
கரைமிசை யேற்றினர் கண்டு மீட்டுமவ்
விரைநதி யிட்டனர் மேவு காங்கென.

விமலரை யாயிடை மீட்டும் போற்றினார்
தமதிருஞ் சேனையுந் தாமு மீண்டுசென்

# திருவானைக்காப்புராணம்.

றிமையவ ரேத்திய நகரை யெய்தினா
ரமுதலிங் கேசரை யன்பிற் போற்றினார்.

திரைதவழ் பொன்னி சார்ந்து செங்கணார் நிற்ப வாக்குக்
கரையர்முன் வடாது திக்கி னமரொரு தடத்தின் மூழ்கி
விரையவை யாற்றுப் பொய்கை மீமிசை யெழுந்தா லென்ன
விரைபுனற் பொன்னி நாப்ப ணெழுந்தது விமான மம்மா.

புற்புத மெழுந்தா லென்னப் புனலிடை விமானந் தோன்றத்
தற்பரன் சரண மன்றிச் சார்புறாத் தலைமை மன்ன
ரற்புத வுளத்த ரானா ரமரரு மிறும்பூ துற்றார்
சொற்பயில் புவியி னோருந் தோல்வியின் மகிழ்ச்சி பூத்தார்.

அடியவர் தமக்கெய் தாத வரும்பெருள் யாதொன் றில்லை
கடிகெழு நாவ னீழற் கண்ணுத லருளி னாலே
படிமிசை யெவருங் காணப் பரந்தகெண் டகைநீ ராற்றி
னிடுசிலை பொன்னி யாற்றி னெழுந்துமேல் விளங்கு மென்றால்.

வினைஞரைக் கூவி யெல்லா மேதகக் கரையி லேற்றி
நனையவிழ் நாவ னீழ னம்பனார்க் கினிது சார்த்தித்
தனைநிக ரதனி லொன்பான் சாளர மேல்பால் வைத்துப்
புனைமணி வாயி றென்பா லாக்கினர் புரைதீ ரன்பர்.

மொழிந்ததென் வாய்த னேரே முப்பது சாலே கத்தோ
டெழுந்துவிண் ணளாவுங் கோயிற் கிணங்குமண் டபமு மற்றுஞ்
செழுந்திருச் சிலையாற் சிங்கத் துருவெனச் சிறந்து தோன்றக்
கொழுந்துகொண் டெழுந்த வன்பிற் கொற்றவர் குறித்துச் செய்தார்.

மண்டபம் பிரகா ரங்கள் வயங்குகோ புரங்க ளாதி
விண்டொட விழைத்திட் டெஞ்சும் விழுநிதி முழுது மோர்சார்
மிண்டறத் தாபித் திட்டு மேக்குற வதற்கு நேரே
கொண்டமண் டபத்து மேலாற் கோயிலொன் றிழைத்திட் டாரால்.

சித்திரக் கோயி லுள்ளே சிவலிங்க மொன்று தாபித்
துத்தம நிதிக ளெல்லா முமதருள் வசமா வீங்கு
வைத்தனன் கைக்கொ ளென்று வணங்கினா ரதனா லந்தப்
பித்தருக் குளதூ லாதிப் பெருஞ்செல்வ ரென்னு நாமம்.

சம்புவீ னீழ லார்க்குத் தக்கவா கமத்திற் செய்யு
நம்புநித் தியமே யாதி நவையறு பூசை யெல்லா
மும்பரும் விழைய வாற்றற் குரியவர் தம்மை நாடி
யிம்பரி னிருத்து வாமென் றெண்ணினா ரிகல்வேன் மன்னர்.

காசிகே தாரங் காஞ்சிக் கடிநக ராதி மூதூர்
மாசுதீர் குலத்தின் மேலாய் வளர்சிவத் துவிசர் தம்மை
நேசமோ டழைத்துப் போந்து நிதிநிலஞ் சுதந்தி ரங்க
ளேசுதீர் மனைகண் மற்று மீந்தனர் தாபித் திட்டார். 224

தருமமுந் தவமும் பேணுந் தலைமைபூண் டமுத லிங்கர்
திருவடிப் போது போற்றுஞ் சிவபத்தர் தமக்கீ றொன்பா
னுருவளர் மடங்க ளாக்கி யூதியம் பலவு நல்கி
யிருநிலம் வியப்ப வெல்லா வியற்கையு நிறுவி னாரால். 225

இவ்வகைப் பணிக ளெல்லா மீங்கிவ ரியற்றா நிற்பச்
செவ்விய வழுதி யாதிச் செருத்திறல் வேந்தர் போந்திட்
டவ்விய மில்லா நெஞ்சி னளவளா யவர்கட் கேன்ற
நவ்வியங் கரத்தி னார்த நற்பணி யியற்றி னாரால். 226

காலமோ ராறும் பூசை கடிவிழா வாதி யெல்லா
மேலுமா றியற்ற நோக்கி யின்பகந் ததும்ப வாங்கே
சாலுநாள் வசித்துப் பின்னர்த் தலந்தொறுஞ் சார்ந்து நம்பர்
கோலமார் பணிக ளெல்லாங் குயின்றுதம் பதியைச் சார்ந்தார். 227

ஆயிடை யிருந்த வாறே யரசுசெய் துலகத் துள்ள
கோயில்க டோறும் பூசை குறைவற வியற்று வித்துப்
பாயின மலங்க டீரப் பரசுக வடிவொ டொன்றாய்
மேயினார் சிவலோ கத்தின் விறற்கண நாத ரென்ன. 228

என்றுமிக் குரைத்த சூத விருடியை முனிவர் நோக்கி
நன்றுறு சரித மீங்கு நவிற்றினை சிலம்பி யானைக்
கொன்றிய பூசை வேட்கை யுற்றவை ஞான பூமி
வென்றிகொ டலைவன் பாத மேவுகா ரணம்யா தென்றார். 229

கடுத்தெதிர் வினவி நின்ற கரிசறு முனிவர் தம்மை
விடுத்தவைம் பொறியி னின்ற மேதகு சூத னோக்கித்
தொடுத்தமெய்ப் பத்தி யோடுஞ் சூழ்ந்துரை வினாவிற் கீங்கே
யடுத்திட விறுத்து மாலென் றறைதரப் புக்கா னன்றே. 230

கயிலைநெடு வரையகத்துக் கணநாதர் பலருள்ளும்
பயிலுமா லியவானும் பகர்புட்ப தந்தனுமென்
றியலியற்கைப் பெயருடையா ரிருவருமுப் புரமெரித்த
சயமுடைய சேவகனார் தகும்பணியிற் றலைநின்றார். 231

ஒருவரொரு வரைநோக்கி யுளத்தெழுந்த பொறாமையினா
லொருவரொரு வரிற்பூசை யுஞற்றுதலான் மேம்படுத

றிருகுமுளத் தொடுங்கினைந்து தினமுமிக வினர்வருங்கா
விருவருமோ ருழியெதிர்நே ரெய்திமிகத் தருக்கினார். 232

தருக்கியிரு வருந்தம்முட் டழல்விழித்து முராணுமிடைப்
பொருக்கெனமா லியவானப் புட்பதந்தன் முகநோக்கி
வெருக்கொளிப மாகென்றான் வெகுண்டிடுமா லியவானைச்
செருக்கிளரும் புட்பதந்தன் சிலம்பியா கெனச்சபித்தான். 233

மாறாத பெருஞ்சாப வலைப்பட்டிங் கிருவோரு
மாறாடு சடைமுடியா ரடிபணிந்து விளைந்ததிது
வேறாக வருளுகென வேண்டினார் வேண்டுதலு
நீறாடுந் திருமேனி நிமலனா ரருள்செய்வார். 234

வானநா டரும்பழிச்சி வரமேற்குஞ் சோணாட்டுண்
ஞானபூ மியையடுத்து நமதருட்பூ சனையாற்றி
யானதோர் தலத்தினுமிக் ககத்திகலி யுயிரிறந்திவ்
வீனமா கியசாப மிழப்புறுவீ ரெனவிடுத்தார். 235

அனையபெருந் தவமுடையா ராதலினா லருந்தவத்தீர்
வினையகலுஞ் சிவபூசை விழைவினொடுஞ் சிவம்பெருக்கித்
தனைநிகரு ஞானதலஞ் சார்ந்தனரென் றிறுத்தப்பாற்
புனைதவத்துக் கவுதமனார் புரிந்தபணி சொலப்புக்கான். 236



# கௌதமப்படலம்.

தவமலி யோகருட் டலைமை சான்றவ
னவமறும் வெண்பொடி யவிரு மெய்யின
ணிவருறு கண்மணி யிலங்கு பூணினன்
கவுதம னெனும்பெயர் கலந்த மாதவன்.

முகிலுறழ் கருங்குழன் முத்தந் தைவரு
நகிலின ணறுமணங் கமழு மெய்யின
ளகலிகை யெனும்பெய ரணங்கு
பகலிக ழன்பனாய்ப் பண்பின் வாழுநாள்.

பொன்னுல காள்பவன் பொருவின் மாதரா
ளின்னலம் விழைந்தன னெதிரி லம்முனி
தன்னுரு வெடுத்தனன் சார்ந்து தையலாய்
நன்னலம் வேட்டன னான்மற் றிந்திரன்.

மாரவேண் மலர்க்கணை மலையப் பட்டுளே
னாரமா முலைக்களி றடுத்து நின்விழிக்
கோரவா ளுறத்தழீஇக் குமைத்து வெம்பகை
வீரநான் பெறத்தகும் வேலை யீதரோ.

கருதலர் போரினாற் காய நீங்குருத்
திருவள ரமுதந்தெண் கடலிற் பெற்றுளே
னுருவிலி போரினா லுயிரு காமைநின்
னுருவள ரமிழ்தமிக் குதவு கென்றனன்.

பண்டைய வூழ்வினைப் பாழி யென்சொல்கேன்
மண்டழன் மெழுகென மனநெ கிழ்ந்துநாண்
விண்டனள் காதலை விழியிற் றேற்றிமால்
கொண்டனள் பின்வருங் குற்ற நாடிலள்.

இந்திர னேநமை யிரக்கின் றானெனப்
புந்தியி னரும்பிய பொருவி லோகைய
ளந்திநெட் டுயிர்த்தன ளாண்ட காயினி
முந்திய தெனக்குமான் முயங்கு

# திருவானைக்காப்புராணம்.

கறையடி வெங்கயங் கடவு குஞ்சர
நிறையெனுங் காவல்கை நெகிழ மாதென
வறைபெறுங் கானகத் தடுத்திட் டைம்புலக்
குறையறு குளகுவாய் குதட்டிச் சென்றதே.

காதன்மொட் டரும்பிமெய்க் காமச் செவ்வியி
னேதமின் மலர்மலர்ந் தின்பத் தேன்கொழித்
தூதகக் களிப்பளி யுலாவ விந்திரப்
பாதவம் படர்ந்தது பசும்பொன் மென்கொடி.

கலவிதுய்த் தின்னணங் களிப்ப நீடிய
வலர்முலை மாதினை யகலுஞ் செவ்வியிற்
பலர்விழை கவுதமன் படர்ந்து நோக்கினா
னலமலி தனதுரு நண்ணும் வஞ்சனை.

யாரிவ னெனதுரு வெடுத்து ளானிவண்
யாரிவன் புருதர வெண்ணுங் காரியம்
யாரிடை யிவற்குறு குறையென் றெண்ணுவான்
யாரினுங் கைதவ னியல்பு தெள்ளினான்.

உள்ளவா றுரையென வுருத்து நோக்கினான்
றெள்ளுமா தவனவன் சிவப்புக் கஞ்சபு
கள்ளனா கியவிசும் பமரர் காவல
னள்ளுமா றிதுவென நவிற்றி யிட்டனன்.

விழுமிய வருந்தவன் மேக வாகன
வொழுகுறு மறைநெறி யொருவிக் கற்பெனுஞ்
செழுவிய பெண்மையைச் சிதைத்த நின்குறி
யழுகிமண் விழுகெனச் சாப மாக்கினான்.

சிலைமா மென்னவே
நிலைபெறு நீர்மையி யாதலிற்
கலைதிரி கானிடைக் ருக்கொடு
மலைவறக் கிடவென மனைவிக் கோதினான்.

ரன் விடணமங் கிற்று மண்விழ
வந்தரத் தெய்தின னமரர் நும்பொருட்
டுந்திடத் தொருவினை யுஞற்றி னேற்கிது
வந்தது வானுளீர் மாற்றுவீ ரென்றான்.

கடவுளர் சூழ்ந்தனர் கடுகி மேடத்தின்
விடணமே விடனுக்கு விடண மாக்கினார்

# கௌதமப்படலம்.

மடனறு மகலிகை மாதுங் கல்லென
விடவிய கானகத் தினைந்து வைகினாள்.

மனையவ ளின்றியே வைகுஞ் செவ்வியி
னனையவட் கறப்பய னணிமைத் தாகலின்
வினைதபு முனிவற்கு விளங்கு மோர்தினம்
புனையிழை கலவியிற் புந்தி சென்றதே.

பெருந்தவன் காமநோய் பிணைந்து ளானனி
வருந்துவ னவன்படு வருத்தங் காணுதல்
பொருந்துவ தன்றெனப் பொலிந்த வெய்யவன்
றிருந்திய குடகடற் செல்லன் முன்னினான்.

இருளுந் தானவர் குழுக்களு மிறுத்திறுத் தொழிக்குஞ்
செருவி னார்ந்தநெய்த் தேர்செறிந் திட்டது சிவணும்
பரிதி நாயகன் சேந்தது பறந்தலை யுழக்கப்
பெருகு சீர்ப்பிர தாபம்போர்த் திட்டதும் புரையும்.

பாவ காரிய ருடலமும் பல்கதிர்க் கரங்கண்
மேவ லாலுறுந் தொடக்கினை விளிப்பவன் போல
வோவி லாதவஞ் சொரிந்திரு ளொதுக்குவெஞ் சுடரோன்
ருவு மேழ்பரித் தேரொடுந் தடங்கடற் குளித்தான்.

மணந்து ளாருயிர்க் கிரும்பயன் வளர்க்குமந் திரத்திற்
புணர்ந்த வேள்வியிற் செய்யவான் றழலுமாய்ப் புணர்ந்து
தணந்து ளாருயிர் நீத்தவி சாரத்திற் றகநூ
லுணர்ந்து ளார்புரி தழலுமா யொளிர்ந்தது செவ்வான்.

அருள்சி வத்தினின் றெழவெழூந் தகிலமு மதுபின்
மருவி யொன்றுறக் கரத்தலு மடியுமா போலப்
பரிதி தண்கட லெழவெழும் பறவையா திகளப்
பரிதி தண்கடல் விழவடங் கினபயி லிடமே.

அளிசெய் தின்னலை யகற்றுமா ருளொடுங் கலந்து
தெளியி னல்லதை செறிந்தறி வுயிர்க்குமா மலநோய்
விளிவ தின்றென விளக்குமோர் சான்றதாய் விழிக
ளொளிய தன்மையி னிருப்பவல் விருள்பரந் தன்றே.

பெரிய ராற்பெருங் காரியம் பேணினர் முடித்தற்
குரிய ராங்கவ ரொழிந்துழி யொழிந்தவர்க் கினமேற்
சிறிய ராலுமக் காரியஞ் செய்துகொள் வதுபோற்
சிறிய தாமொளி விளக்கினாற் றிகழ்ந்தறிந் தனகண்.

# திருவானைக்காப்புராணம்.

ஆத வற்கும்வெண் மதிக்குமிக் கவிரொளி தனதே
யாத லிற்சுட ரிரண்டினு மடப்படா விருளுங்
காது தற்குறி விளக்கிடைக் கண்ணியர் வதன
மோது முத்திர ளிடைமதி யெனவுலாத் தருமே.

இருண்ட கேவலத் துயிரென விருண்டன சிலகண்
மருண்ட தாஞ்சக லத்துயிர் மானவே சிலகண்
வெருண்டி டாதொளிர் விளக்கினால் விளங்கின சிலகண்
டெருண்ட வீட்டின ரெனச்செறி யிருள்கழிந் திலவே.

அன்பி னைந்திணைக் களவொழுக் கத்தின்மிக் கான்றோர்
வன்பின் மற்றைய பொருள்களைக் களவின்வவ் வுநர்க
ளின்ப வன்பரைப் பிழைக்குநர் பேயிவ ரெல்லாந்
துன்ப மற்றனர் துகடுக ளினர்க்குத வாதோ.

தயங்கு பேரொளிச் செக்கர்வா னெனுந்தழற் பிழம்பி
னியங்கு கார்நிறப் புகைவிரா யிறுத்ததே போல
வயங்கு ருதுபல் லுயிர்த்தொகை யயர்வுற வடுத்த
மயங்கு காரிருண் மென்மெல மலிந்தது மன்றே.

மண்வி ராம்புனல் விராவழன் மானமேல் கடற்பால்
விண்வி ராவொளி விராவிருள் விளங்கழல் விராவு
மெண்வி ராவுகால் பொரவிதின் விராவுவான் குறியிற்
றண்வி ராவிய தவளமா மதியெழுந் தன்றே.

எழுந்து மாமதி தோற்றலு மீர்ங்கலை யமிழ்தச்
செழுந்தண் வார்கிர ணங்களெண் டிக்கினும் பரந்த
வழுந்து சேறெனப் பானிலாப் பிழம்படர்ந் தன்று
விழுந்த காரிருண் மெய்யெழப் பொய்விழுந் தாங்கு.

ஒளிமி குந்தவ னாயினு மூனமா திகடீர்
களிமி குந்தவ னாயினுங் கடனமக் கன்றென்
றளிமி குந்ததா ரகைபகற் கழகுரு தழிந்து
தெளிமி குந்ததன் பதிக்கெழி நிகழ்ந்தது நெடுவான்.

உருக்கும் வெய்யவ ராயினு முற்றவர்க் கின்பம்
பெருக்கு மன்பினர் தண்ணிய ராயினும் பேணார்
கருக்கும் வன்பின ராவர்வெங் கதிரவ னலர்த்தி
யிருக்கு மம்புயஞ் சுருக்கின னிலகுதண் கதிரோன்.

நொதுமல் காட்டின கோட்டலர் நுண்டுளித் தேறற்
பதும நீடிய பகையினைக் காட்டின வென்த்தாம்

# கௌதமப்படலம்

விதுவி னேடுற வாதனன் றெனவிழைந் தாங்கு
மதுவ ருததண் குமுதமு நீலமு மலர்ந்த.

செயலை மாவினுன் மரமெலாம் புகழொடு சிறந்த
பயிலு நீரின பதுமநீ லங்களாற் சிறந்த
வுயர்க வார்கொடி யினத்துமென் றலென வொருப்பட்
டயர்வின் மாரனுக் கொருகணை யலர்ந்தன முல்லை.

தமியர் வாண்முகத் தொடும்பக னிகர்த்ததண் மதிய
மெமியர் வாண்முகத் தொடுமிர வொத்தில கியதா
லெமியர் வாண்முகத் தொடும்பக லிருந்ததா மரைக
டமியர் வாண்முகம் போன்றன தயங்கிய விரவில்.

புரிந்த வன்பரைப் புணர்ந்தவர் புணர்முலைக் கழிந்து
பிரிந்த மங்கையர் பெருமுலை முன்பக னிகர்த்த
றெரிந்த சக்கர வாகங்க டிங்கள்பைங் கதிர்கள்
விரிந்த பின்பகல் பிரிந்தவர் முலையும்வீழ்ந் திலவே.

கணவர் வைகிய காரிகை மடந்தையர் கருங்கண்
மணம லிந்ததண் டாமரை மலரலா னிகரா
கணவர் வைகிய காரிகை மடந்தையர் கருங்கண்
மணம லிந்ததண் குவளையுஞ் சகோரமு மலையும்.

கரண்ட மேவிய பொய்கையிற் கமலமா மலரிற்
றிரண்ட தேத்துளி பருகியுஞ் செறியிதழ்க் குவளை
வரண்டு வார்மதுப் பருகியு மகிழ்ந்தவண் டொன்றே
யிரண்டு காலத்தும் பிரிவிலார் விழியிழைந் தனவே.

வீங்கு தண்புன லெடுத்தெழு மேகங்கள் வளர்ப்ப
வோங்கு பைம்பயிர்க் கொளிர்ந்துதன் வயிற்றெழுந் திங்க
ணீங்க ருங்கரு வுறுத்திடு நெடும்பயன் குறித்துத்
தாங்க ருங்களிப் பானனி தழைத்தது புணரி.

அளிக்கத் தக்கன விரவியி னரவிந்த மாதி
களிக்கத் தக்கன திங்களிற் கயிரவ மாதி
யொளிக்கத் தக்கது சுடரிரண் டானுமோங் கிருள்சேர்
விளிக்கத் தக்கவர் யாவரின் விழைதகப் படுவார்.

பிரசம் வார்கணைப் பெருஞ்சுவைச் சிலையெறுழ்ப் பெருந்தோ
ளரசன் மாமதி வெண்குடை நிழற்றவார் கலியின்
முரச மார்ப்பெழ மொய்குயிற் காகள முழங்க
விரசு கான்மணித் தேர்கடாய் வெய்யபோ ருழந்தான்.

# திருவானைக்காப்புராணம்.

மாதர் பாலம ருருதெனை மைந்தர்க ளடுத்தார்
மாத ராடவர்க் குடைதரு மாரவே ளென்று
மாத ரோடுதங் கணவரை மணந்தன ரவர்பான்
மாதர் வேள்கணை தொடைமடக் குண்டன மாதோ.

கொங்கை யன்றிது மாரனார் தொடுத்தகோ கநகஞ்
செங்கை யன்றிது மாநிற மன்றிது செயலை
தங்கு வெண்ணகை யன்றிது தளவுவாள் விழியன்
றிங்கி துற்பல மெனத்தணந் தார்சில ரினைந்தார்.

காம னார்மத யானையைக் கருங்குழற் பிணித்துக்
காம னாருரு நுசுப்பிடைக் கரந்துதண் கவிகை
காமர் வாண்முகத் தடக்கியிங் ஙனமெலாங் கடந்து
காம வீரராய்க் களித்தனர் கலந்தகா ரிகையார்.

இனையபுன் மாலைவந் திறுத்த வெல்லையிற்
றனைநிகர் கவுதமன் றனது நெஞ்சிடை
நனையென வரும்பிநற் போது கொண்டதோர்
வினைநிகர் காமநோய் மிக்க லர்ந்ததே.

மாரனுந் தனதுகை மதுகை தோற்றினு
னீரவெண் டிங்களு மெரியு மிழ்ந்தது
கோரவல் விடமெனக் குளிர்ந்த தென்றலுஞ்
சாரவம் முனிவரன் றளர்தன் மேயினான்.

எல்லுருக் கரத்தலு மெழுந்த காமநோய்
வல்லுரு மேறென மதியைப் போழ்ந்தது
கல்லுரு வாயினள் காதன் மாதரா
ளல்லுருக் கின்றதென் றயர்ந்து மாழ்குமே.

உருவெளித் தோற்றலு மோடிக் கைகளான்
மருவுறத் தழுவிடு மாய மோவெனுந்
தெருமரச் சிலையெனச் செய்த தீமையாற்
பருவாற் படுத்திகொல் பாவை நீயெனும்.

ஏகதார துடல

மரிக்கும் பேதையை பிருந்தைபா லளித்தவன் மனமுந்
திரிக்குந் தீமையை தெரிவையர் சித்தமும் போராற்
பொரிக்கு மாண்மையை யென்னைநீ பொராய்கொன்மன் மதனே.

கடித்து மென்றுமென் றுமிழ்ந்திடப் படுங்கரத் தினில்வில்
பிடித்து மென்கரத் தாற்பிசைந் திடப்படுங் கணைக

டுடிக்க மெல்லிதழ் மாதரை நினைவொடுந் துறப்பின்
முடித்தல் வல்லைகொல் வஞ்சின முழங்கிசை மதனே. 50

வெம்பு சாபமுன் வாங்கின தொழியமேல் வாங்கின்
வெம்பு சாபம்பின் வாங்குவை சாதம்வேட் குரிசி
லம்பு தூவுவை யாயின்வா ளரிக்கண்ணு விரதி
யம்பு தூவுவ ளன்னவ ளாயுளின் காறும். 51

தனது சேனையைத் தணந்தவர்க் கல்லது சரங்க
டனது சேனையைச் சார்ந்தவர்க் குறுத்திடா தவனைத்
தனது சேனையைச் சம்புவாற் றணப்பினல் லாது
தனது போரிடைத் தணித்தலுங் கூடுமோ வென்னும்.

கற்ற கல்வியுங் கண்ணகத் தஞ்சனம் புறத்தே
யுற்ற வொண்பொருள் விளக்கியுண் கண்ணினுக் குதவாப்
பெற்றி யொப்புறப் பிறர்க்கெலா முதவியே பேணிப்
பற்று மற்றெனக் காவதின் றேயெனப் பரியும்.

தேயு நீரினை தேய்த்திடப் பட்டனை கறையை
காய மேகதி யாகிய கவலையை துருவன்
பாய சூத்திரப் பிணிப்பினை பாருழைத் தருக்கி
மர்யை நோயையும் வளர்ப்பது தக்கதோ திங்காள்.

அந்தி வண்ணர்தம் வேணியி னிருப்புமா ரமிழ்த
முந்து தண்கதி ரார்பயிர் விளைக்குமோ ரறமுஞ்
சிந்த வெம்பர வுண்பது துணைவயிற் றீர்ந்தோர்
நந்த வெம்பிய பாவமன் றோநகு திங்காள்.

கரிய நஞ்சினும் வெண்ணிற நஞ்சுநீ கடியை
பெரிய தண்கடற் பிறந்தனான் றல்லது பெருமா
னுரிய கண்டநின் றெவரையு முலைசெய்யா ததுநீ
புரியு மென்சடை யிருந்துநோய் புரிதிவெண் டிங்காள்.

விடங்க ணிந்தவுட் டுளையெயிற் றராவும்வெய் துமிழு
மடங்க ருங்கொடுந் தீயைநீ யாதலி னமல
னிடங்கி டந்துமின் னருளினை யிலையிக்ல் காம
னுடங்கு டன்றனை யொளிர்மதி தகுங்கொலோ வென்னும்.

வான்ம ருந்திலக் குமிமுதல் வளம்படு புணரி
தான்வ ருந்தநஞ் சுமிழ்ந்ததே யெனிற்றவத் தழங்கி
மீன்ம லிந்துவர் புலான்மிடை நீவிடி யளவு
நான்வ ருந்தவு முனிதரா திருத்தியோ நமலாய்.

மல்ல வர்க்கிட ரேபுரி நவையினர் தமக்கே
செல்லும் வண்ணமெல் லாந்திக ழுதவியே செய்து
மல்லல் குன்றுறப் பன்முறை வறந்தனை யனங்கற்
கொல்ல லொல்லெனு மொலிகட லேயென வுரைக்கும்.

சந்தன மலயக் காலே தமியரை வருத்தி மேவண்மெய்
வெந்தனன் கவிகை யாகி விதுக்குறைந் ததுதே ராகி
மந்தமுற் றனைநீ யென்னே மற்றுமன் மதனைத் தாங்கி
நீகட் பார்யார் வருந்தியும் வருத்தா ரென்னும்.

காமனை யுயிர்த்த மாயக் காமரு விடையின் சாதி
யாமத விடையின் கண்டத் தணிந்திடப் படுத லாலே
தூமணிக் குலமு நம்பாற் றெருகுபிணி செய்யா நின்ற
கூமணிக் குயிலோ பீழை கூர்ந்திடா தென்று நையும்.

இவ்வகை யிரவி னெல்லாப் பொருளினு மினையா நின்ற
செவ்விய முனிவன் சாலச் செய்தவப் பயத்தின் பேற்று
லவ்விய மளிக்குங் காமக் கருமருந் தளிக்கு நாத
னவ்வியங் கரத்தா னன்றி யிலையென நாட்டங் கொண்டான்.

வானநாட் டவர்க்கு மெய்தா வரம்பல வழங்கா நின்ற
ஞானகேத் திரத்தை நண்ணி நாண்மதிக் கண்ணி யார்தா
மீனநா மகல வல்லே யினிதருள் வழங்கு வாரென்
றூனமாங் ககல வுன்னி யொருமருங் கிருந்தா னோ.

பெருந்தவ முனிவான் பெரிதுங் காமத்தின்
வருந்தின னின்னுநாம் வருத்திற் சாபமுந்
தருந்தரு மெனவரை யிரவுஞ் சாய்ந்தது
விருந்தென வைகறைப் பொழுது மேயதே.

இராக்குறி நுகர்ச்சியி னெய்தி னோர்களு
மராப்பரத் தையர்மனை மருவினோர்களு
முராய்ப்பல விரைகளி னுற்ற மாக்களும்
வீசாய்ப்பயி றமதிட மேவ மீண்டனர்.

ஊடிய மகளிரை யுணர்த்தும் பாணியும்
வாடிய வூடலை மாற்றி யின்பமே
நீடிய கலவிக ணிகழ்த்தும் பாணியு
மாடக நூபுரத் தொலிய ருதவே.

மெத்திய காரிருள் விடியன் மேவலு
மைத்தடர் காமவல் லிருளு மல்கிய

# கௌதமப்படலம்.

நித்திய கேவல விருளு நின்மலன்
பத்திசெய் குநர்மல விருளும் பாறுமே.

மழுங்கிய திந்துதா ரகைம ழுங்கின
விளங்கிரு ளிமித்தொளிர் விளக்கு மங்கின
செழுங்கதி ரவன்வரு மென்று சிந்தைமிக்
கழுங்கிய கவலையி லடங்கி னுலென.

சந்திர னெனுமொரு தநயன் மாணொளிக்
கொந்துகொண் டிலகிய கோலங் காண்டொறு
மந்தின்மெய் மலிந்தெழு மாழி மற்றவ
னந்தொளி காண்டொறு நந்தன் மேயதே.

வாரணத் துழனிகண் மனைதொ றீண்டின
வாரண முழக்கமுங் கிடைதொ றண்ணின
பூரண னருளிய பொருவின் மந்திரங்
காரணி கருக்குரீஇ கரைதன் மேயின.

காவலர் நகர்தொறுங் கடுகுங் கைப்பறை
யோவின கடலொலி யோடு மற்றெதிர்
நாவலர் துதியொடு நன்கி யம்பின
தேவர்மந் திரந்தொறுஞ் செறிந்த பல்லியம்.

இருளெனும் பகைக்கழிந் தினையுந் தாமரை
மருமலர்க் கிழத்திதன் வாட்டம் வீட்டுவான்
பரிதியின் வரவினைப் பகருந் தூதென
வருணன்வந் தெழுந்தன னம்பு ராசிமேல்.

பாச வறிவும் பசுவறிவும் பரந்த வருளின் முழுதடங்கத்
தேசு விரியுஞ் சிவஞானந் திகழ்ந்து விளங்கு மாறேபோன்
மூசு மிருளின் விழிக்குதவு மொய்த்த வுடுவு மதியொளியும்
வீசு கிரணத் திடைக்கரப்ப வெய்யோன் வேலை முகட்டெழுந்தான்.

இரவை யகற்றி யொளிபரப்பி யிலகுஞ் சுடரோன் குடதிசையிற்
பிரவை குளித்துங் குணதிசையிற் பரவை குளித்து மணியுருவின்
விரவு முவரு மாறியங்க மிக்க விளைப்பு மொருவுநர்போற்
கரமென் மலரிற் புனலெதிர்தூய்க் கரைந்தார் மறைநூ லுரர்பலரும்.

அருளிற் பெரிய சிவபெருமா னன்ற வருவ மெதிர்நோக்குங்
கருணை யடியார் திருமுகமுங் கண்ணு மனமு மெனமலர்ந்த.
பெருகு மதுத்தர் மரையந்தப் பெருமா னுருவப் பொலிவினுக்குத்
திருகு மதத்தா ரெனக்குவிந்த தேன்செய் குமுதத் தொடுகுவளை.

கரும வகையை யென்னென்று கரைவா மிரவிற் களிகூர்ந்து
பரிதி யெழலுஞ் சிலவுயிர்கள் பருவந் தழிந்த விரவெல்லாந்
தெருமந் தழிந்த சிலவுயிர்கள் செம்மாந் தின்பக் கடற்குளித்த
வெருவி லுயிர்க டொறுஞ்செயல்கள் வெவ்வே றாகி வளர்ந்தனவே.

விடிய லடுப்ப வைகறையே விமலன் பாத மூளத்திருத்திக்
கடிமென் மலர்வா ளிகடுரக்குங் காம னமரிற் சிறிதுய்ந்த
முடிவி லரிய பெருந்தவத்து முனிவன் வளர்நாட் கடன்முடித்துப்
படியில் வளத்தி னுயர்சம்பு பதியை நோக்கிப் படர்கின்றான்.

அமையாக் காதற் பெருங்காம வாழி பெருகி யயில்வேற்க
ணுமையா ளொருபா லினிதமர வுலக முழுது மொருங்குயிர்த்தார்
தமைநா டியமெய் யுணர்வந்தோ தளரப் பலகாற் றபுமுளத்தோ
டிமையா ரிறைஞ்சுந் திருவானைக் காவி னெல்லை யெதிர்கண்டான்.

கண்டவ னெழுந்து பொங்கிய காமக் கடல்கரை யிகவுறு தடங்க
விண்டனன் கவலை தண்டென நிலமேல் வீழ்ந்தன னெழுந்தன னின்ப
நுண்டுளி யரும்பும் விழியினன் மறைக ணுவல்செழு நாவின னடந்து
மண்டிய பொன்னி நதிப்புன லாடி வளஞ்செறி யகநகர் புகுந்தான்.

ஆங்குள தீர்த்த மனைத்தினும் படிந்திட் டருள்கெழு பூதிசா தனமு
மோங்கிய விதியா லணிந்தெழுத் தைந்து முறைத்தரு வுருவரு வுருவாய்
நீங்கரு மலத்தின் வலிகெடுத் தெவர்க்கு நின்மல ஞானமுய்த் தருளும்
வீங்கிய கருணைப் பிரமலிங் கத்தை விழியெதிர் கண்டுதொழ்ந் தெழுந்தான்.

என்று கூற விருடியர் சூதனை, நன்று கூற நவில்பிர மேசனென்
றென்று நாமமங் குள்ள பிரான்றழீஇ, நின்ற வாறு நிகழ்த்துகென் றாரே.

வேத நாவினர் மெய்யுணர் நெஞ்சின, ரேத மேதுமெய் யாத வியல்பினர்
நீதி நீரவி னுதலுஞ் செய்தவச், சூத மாதவன் சொல்லத் தொடங்கினன்.

இராதந் திரமென் றுருகற்பத் தியைந்த கிரேதா யுகத்தளிகள்
விராவுங் கமல மலரணையான் விளங்குஞ் சிருட்டித் தொழில்பெறுவான்
பராவி வழிபா டினிதாற்றும் பரிசா லனைய திருநாம
மராவு மதியு மணிந்தாருக் காயிற் றெனமற் றறைகிற்பான்.

கண்டு பணிந்த கவுதமனுர் கடிமென் மலரா திகள்கொணர்ந்து
மீண்டு மலத்தின் வலிமுருக்கும் விதியாற் பூசை யினிதியற்றித்
தொண்டு பலவு மந்நாட்போற் றொழிக்கச் சிலநாள் புரிகாலை
யண்டர் பெருமான் பணிக்கிரங்கி யடல்வெள் ளேற்றி னெதிர்நின்றான்.

விலங்கற் கரைய னீன்றெடுத்த மினிர்பூண் முலையா ளிடந்தழுவ
வலங்கற் கடுக்கை முடிகதிர்ப்ப வமரர் முனிவர் தொழுதேத்த

# கௌதமப்படலம்.

வலங்கொள் பூதம் புடைநெருங்க மழவெள் விடைமே னின்றார்தந்
தலங்கு மலர்த்தா ளறப்பணிந்து சூழ்ந்து குழைந்து துதிக்கின்றான்.

இனமலர் சிந்தும் வேழஞ் சிலையொடு மெறிவித் தாய்நின்
சினகரந் தகர்த்த வேழஞ் சிவகதி யடைவித் தாயா
லனகனே காவ னீழ லண்ணலே யமர ரேறே
யுனதருட் டிறத்தை யாரே யுள்ளவா றுணரு நீரார்.

பதிவிர தையருக் கெல்லாம் பாரிடை யொருசான் றாகும்
பிதிரொளி யங்கி மாட்டும் பிறன்மனை விழைந்த பாவ
விதமுழு தகல வார்த்த வீரிய மளித்தா யின்பம்
பொதியருட் டிறத்தை யாரே யுள்ளவா புகலு நீரார்.

மறைமுடி தனக்கு நீண்ட மாலயன் முடிக்கு மெட்டா
தறைகழற் செய்ய பாத மதிர்குரைப் புனலும் பாம்பும்
பிறையுமென் றிவற்றை யெல்லாம் பிறங்கொளிச் சடையில் வைத்தாய்
நிறையருட் டிறத்தை யாரே யுள்ளவா நினைக்கு நீரார்.

மருமலி கின்ற மென்பூ வாளிகள் கழைவி லேற்றிப்
பொருமொரு தேவ னுக்கை பொடித்தனை பொருவின் முத்தி
யுருவுகச் செங்க லோச்சு மொருவருக் களித்தி யானின்
றிருவருட் டிறத்தை யாரே யுள்ளவா தெரிக்கு நீரார்.

சிறுவிதி புரிந்த வேள்வி தீவினை யாக்கித் தேவர்க்
குறுமுறை செய்தாய் தந்தை யுயிர்க்கொலை புரிந்த பாவ
முறுகுபுண் ணியம தாக்கி முதன்மையோர் பாலர்க் கீந்தாய்
பெறுமருட் டிறத்தை யாரே யுள்ளவா பேணு நீரார்.

ஒருவர்பாற் பிறந்தார் தம்முட் கலவிசெய் யொழுக்கந் தீதென்
றருளினை நினது மெய்யி னுக்கிய வுமைபொன் வாணி
வருமரன் மாயன் வேதன் மூவரு மணப்பச் செய்தாய்
பெருகருட் டிறத்தை யாரே யுள்ளவா பேசு நீரார்.

தீம்புனல் குடைந்து தூய திரவியத் தியற்றும் பூசை
யாம்படி விதித்தாய் நீமற் றழக்கடத் தாட லென்பு
வேம்பொடி கொண்ட தன்றி வேடன்மிச் சிலுங்கைக் கொண்டா
யோம்பருட் டிறத்தை யாரே யுள்ளவா றுன்னு நீரார்.

எண்ணிரண் டாண்டே முன்ன ரீந்தனை யதனைத் தெள்ளி
யண்ணிய கால னாவி யடர்த்தொரு பாலன் றன்பா
லெண்ணிரண் டாண்டே யென்று மெய்துமா கடைக்கண் வைத்தாய்
நண்ணருட் டிறத்தை யாரே யுள்ளவா நயக்கு நீரார்.

வெல்லமர் விழைந்த வாணன் வீங்குதோ ளென்கு நிற்ப
வல்லெறுழ்த் தோள்க ளெல்லா மாற்றினை விழைந்து நீயே
சொல்லமர் விளைத்துப் பார்த்தன் ருடுசிலைத் தழும்பு கொண்டாய்
நல்லருட் டிறத்தை யாரே யுள்ளவா நவிற்று நீரார்.

மாலொடு பொருத ஞான்று வார்சிலை நெரித்து வீழ்ந்து
கோலவிண் ணவர்கு ழாத்துட் குறுகியோர் தழும்பு நட்டு
மேலவர் வலிக ளெல்லாம் வேறவே றளந்து நின்றாய்
சாலருட் டிறத்தை யாரே யுள்ளவா சாற்று நீரார்.

தீங்குசெய் மனைவி கல்லாய்த் தீர்தர வெகுளி யென்பால்
வீங்கமுன் புரிந்தா யின்றம் மெல்லிய லின்பந் துய்த்து
நீங்கருஞ் செல்ல னீங்க நினைவினைக் கொடுத்து நின்ற
யோங்கருட் டிறத்தை யாரே யுள்ளவா றுரைக்கு நீரார்.

எனத்துதி யியம்பி நின்ற விருடியை யினிது நோக்கிக்
கனைத்துவண் டொருங் கொன்றைக் கண்ணியா ரருளிச் செய்வார்
மனத்துய ரொழிதி தாச ரதியினின் மனைவி சாப
மீட் டகல நின்பா லெய்துவ ளின்ப மெய்த.

அற்றைநாள் காறு நின்பா லணங்கவே ளமர்செய் வாளி
யுற்றுட லாது நிற்க வோங்குமித் தலத்தி னந்தம்
பொற்றநற் கழற்றுட் பூசை புரிந்துநீ வதிக வென்று
கற்றைவார் சடையார் கூறிக் கரந்திலிங் கத்து ளானார்.

அண்ணலா ரருளிச் செய்த வருடலைக் கொண்டு நாளும்
புண்ணிய முனிவன் சாலப் பொருவின்மா தவங்க ளாற்றி
வண்ணமென் மலர்க ளாதி மாண்பொரு டூவிப் பூசை
பண்ணியங் கிருந்தான் மீட்டும் பல்பகல் கழிந்த வன்றே.

ஆயதோ ரமையத் தன்னி லயோத்தியென் றுலகம் போற்றும்
பாயசீர் நகரின் மேய படர்சிலை யிராம னென்பான்
மேயசீர் மிதிலை நோக்கி வியத்தகச் செல்வான் பாதந்
தோயமாண் கல்லின் வண்ணஞ் சுடர்த்தொடிக் கொழிந்த தம்மா.

கல்லுரு வொழித லோடுங் கனங்குழை யெழுந்து வல்லே
யல்லுரு நிருதர் சேனை யழித்திட வந்த செம்ம
னல்லுருப் பாதம் போற்றி நயத்தகு கணவன் மாட்டு
வெல்லுரு விலிசெய் வெம்போர் விழுமமாங் கொழியச் சார்ந்தாள்.

பிரமலிங் கத்திற் பூசை பேணுபுண் ணியத்தின் பேற்றால்
விரவிய சாப நீங்கி மேவிய மனைவி யோடு

பாவியங் கசன்று தான்முன் பயின்றவா ழிரக்கை மேவிச்
சுரர்மொழு பொருப்பப் போகந் துய்த்தனன் முனிவர் கோமான். 102

அங்கிரேசர் சடைப்பெருமான் கவுதமனுக் கிருஞ்சுகமங் களித்த வாற்றாற்
சங்கருவீ சுரனெனும்பேர் தங்கதிரே தாயுகத்திற் றழுவி நின்றான்
மங்கைமான் மலமாதி வேட்டவர்க்கும் வான்வீடு வாஞ்சிப் போர்க்கும்
பொங்குமர் ருள்சுரக்குஞ் சங்கரே சுரலது புகல்வே றுண்டோ. 103

பிரமீச ரெனும்பெயருஞ் சங்கரே சுரரென்னும் பெயரும் பூண்டார்
வரநாளு மினிதருள வாங்கருகே வதிசம்பு தீர்த்தந் தோய்வோர்க்
குரமாதி நற்குணமும் பல்பொருளு முயர்வீடு முறுமா சாதி
விரவாதங் காதலினு லசர்கொருதீர்த் தமுமிலையாய் மேவா தன்றே. 104

கோடாத பெருந்தவத்துக் கவுதமனார் வழிபாட்டின் கொள்கை சொற்றும்
வாடாத பெருஞ்செல்வத் தனதன்வழி படுங்காதை வகுத்துங் கேண்மி
னீடாழிப் பெருநிலத்தி லெஞ்ஞான்று மாதவமே நிகழ்த்து வீரென்
றோடாத பெருங்காத லுளத்தரும்பச் சூதமுனி யுரைக்க லுற்றான். 105



# குபேரன் வழிபடுபடலம்.

வெள்ளி மால்வரை மேவிய வித்தகர்க்
குள்ள வாறுயர் பூசனைப் பேற்றினா
னள்ளு தோழ னெனும்பெயர் நாடொறுங்
கொள்ளு மேன்மைக் குபேரனென் பானரோ.

அளகை மாநக ராளுழி யையிரு
களனி லாவிய காதகன் கண்ணுதல்
விளரில் பூசனை மேதகு பேற்றினால்
வளநி லாவிய வையகங் காக்குநாள்.

தன்கு டித்தம னாகிய தன்மையா
னன்கு முற்றிய நால்வகைச் சேனையுங்
கொன்கொ ழிப்பக் குறுகி நெடுஞ்சமர்
பின்கொ டுத்திரி யப்பெரி தாற்றினான்.

நிதியின் மன்னவ னீங்கலு மன்னவன்
பதியின் மல்கிய பல்வள முங்கவர்ந்
தெதிரின் மேன்மை யியைந்து பெருங்கவின்
பொதியும் புட்பக முங்கொடு போயினான்.

இருப திற்றெறுழ்த் தோளினி ராவணன்
செருவி னுய்ந்தெளி செய்திக்கு போனங்
கொருவு மோகைய னேங்கு கயிலையைப்
பொருவி லன்பொடு மெள்ளென நண்ணினான்.

திண்ண மாகிய செய்தவ மாற்றினா
னண்ண லாரடித் தாமரை யன்பொடு

னண்ண லான்செய் நலிவினைக் கூறினான்.

தேவ தேவ திகம்பர தேவர்கள்
யாவ ருந்தொழு தேத்து மிறையவ
பாவ காரி பறித்தொழி செல்வநான்
மேவு மாறு விளித்தரு ளென்றனன்.

# குபேரன் வழிபடுபடலம்.

தோழ னின்னணந் தொண்டுசெய் தேத்தலுங்
கேழி லாத கிளர்கதிர்த் திங்களம்
போழி னன்புரை தீரக் கடைக்கணித்
தாழி னுலிஃ தோதுவ தாயினன்.

தேவ வருடம் பன்னிரண்டு செல்லப் பாசு பதவிரத
மேவி யரிய தவம்புரிந்து விழைந்து நமது பூசனையுந்
தாவில் விதியான் மிகச்செய்தாய் தனத வினிநீ வெருவற்க
பூவிற் பொதும்பர் வளர்ஞான பூமி யுளதங் கினிதெய்தி.

பந்த மகற்றுங் குளிர்தீர்த்தம் பலவும் படிந்து தவத்துயர்ந்த
நந்தி வணங்கு நந்தீச நவைதீர் வால கில்லீச
முந்து மளவில் சிவலிங்க மூலத்தங் குளவா லவையெல்லாங்
கந்த மலர்தூய் வழிபட்டுக் காத லொடும்மை குதிகண்டாய்.

சின்னாள் கழியச் சிலைராமன் செருவி லரக்க னுயிர்குடிப்பப்
பின்ன ருனது பெருந்திருவும் பிறங்கா நின்ற புட்பகமு
முன்ன ரெனவே நின்பாங்கர் முற்று மிதுமெய் யெனக்கயிலை
மன்ன நின்ற பெருமானார் வகுத்து விடைநல் கினர்மாதோ.

விடைதந் தருளுந் தனித்தரும விடைமேக் குயர்த்த பெருமானை
மடைவிண் டொழுகும் பேரன்பின் வணங்கிக் கயிலை வரைநீங்கி
நடைகொண் டவனித் தலத்திறைவ னண்ணுந் தலங்கள் பலபணிந்து
புடைகொண் டொழுகுங் காவிரியின் மருங்கு புகுந்தான் பொருட்கிழவன்.

அங்கு நகர மெதிர்நோக்கி யவனித் தலத்தி னுறத்தாழ்ந்து
பொங்கு புனற்கா விரியாதிப் புனிதநீர் தீர்த்தம் பற்பலவுந்
தங்கு விதியாற் றினிற்படிந்து தயங்கு மிலிங்கம் பற்பலவுங்
கொங்கு மலர்தூய்ப் பணிந்தமுத லிங்கர் திருமுன் குறுகினான்.

மீளா வடிமைப் பெயரன்பின் வெண்ணு வலின்முக் கட்கனியைத்
தோளா மணியைச் சுவையமுதைத் தொழுது வணங்கி வலம்வந்து
நீளர் தரவி னிருந்தொருசார் நிகழ்யுந் துயிலா தெழுத்தைந்துங்
கோளா னதுதீர் தரக்கணித்தான் குருவெங் கதிரோன் கடலுதித்தான்.

அங்க ணொருசார் தன்பெயர்கொண் டமைய விலிங்க மொன்றிருத்தித்
தங்கு மறையா கமவிதியாற் றண்டா விருப்பிற் பூசைபுரிந்
தெங்கு நிறைந்த பூரணனை யெல்லாப் பொருட்குங் காரணனைப்
பொங்கு பரமா னந்தமெனும் பொருளை நினைந்து தவம்புரிந்தான்.

அற்றைத் தினம்போற் பலநாளுங் களைகைப் பெருமான் வழிபாடு
முற்றப் புரிந்து வருகாலை முகினே ருருவச் சிலைராமன்

வெற்றிப் படையா லரக்கனுயிர் விளிப்ப விழுந்த புட்பகமு
மற்றைப் பொருளுங் கைக்கொண்டு வாழ்ந்தான் றனது பதிசார்ந்து.

பேறு ருடற்றும் பெரும்பகையும் பிறவிப் பகைசெய் யாணவமு
மாறு வினையு மாயைகளும் வறுமை பிணியா திகள்பலவும்
வீறு யழிய வேட்டவரம் வேட்டாங் கருளு மெஞ்ஞான்றுங்
கோறு வருளுங் கொடுத்தருளுங் குபேர லிங்கம் வழிபடினே.

வடமா திரத்துத் தலைவன்மிக வழிபா டாற்றுந் திறமொழிந்தாந்
திடமா மதில்க ளொருமூன்றுஞ் சிந்து மிறையே யடியாராய்த்
தடமா மதிலொன் றணிதிழைத்த தன்மை தெரிந்த வாறுரைப்பாந்
தொடர்மா தவத்தீர் கேண்மினெனச் சூத முனிவ னோதுமால்.



உ

# திருநீற்றுத் திருமதிற் படலம்.

செங்கட் சோழருந் தெம்முனை வேந்தரு, மங்கட் சூடி யருட்பணி செய்யுநாட்
டுங்கக் கோயிலிற் சூழ்மதி லியாவையும், பங்கிற் கோலிப் படைக்க முயன்றனர். 1

ஆங்கு நாத னருளினா லோர்மொழி, யீங்கு நீள்பணி யாவையுஞ் செய்மினோ
வோங்கி யாவையு முள்ளடக் கும்மதி, னீங்க வென்று நிவந்தது வானிடை.

ஓது வான்மொழி யொண்செவி யேறலு, நாத னாரு ளீதெனி னன்றென,
நீதி வேந்தரந் நீண்மதில் செய்திலா, ராதி யேயிழைப் பாரென் றகன்றனர்.

திருமால் பிரமன் புருகூதன் றேவர் முனிவர் போற்றிசைப்ப
வொருநா வலின்கீழ் வீற்றிருக்கு முமையாள் கணவன் மதிசூடி
மருவார் கொன்றை மலரலங்கல் வயங்குந் தடந்தோ ளெழுதேசன்
பெருவாழ் வுலகுக் கருளுவான் பிறங்கு மதில்செய் திடநினைந்தான்.

பணியா திடினு மதுவேற்றுப் பயனைப் பெறமா லயன்முதலோர்
தணியா விழைவி னருட்கடைக்கண் டன்னை நோக்கி யெதிர்நிற்ப
வணியார் நகர மெவற்றுள்ளு மதிக வுரிமை தனக்காமிம்
மணியார் நகர்க்கு மதிறனை வகுப்பித் திடுமா மதித்திட்டான்.

தாழ்ந்து பழிச்சு மடியார்க்குத் தனதி னருளைத் தன்னோடு
வீழ்ந்து வழங்கும் பெருங்கருணை விமல னிந்தப் பணியொருவர்
வாழ்ந்த மனத்திற் செயவிரப்பின் மறுக்க மாட்டா மையைக்குறித்தே
போழ்ந்த மதியா திகள்கரந்து பொற்ப வேறு வரநினைந்தான்.

அருளிற் கலந்த திருவேட மல்லாற் றனக்குப் பேருவகை
தருவ திலையென் பதுமதுவே பணிக்குத் தகுவ தென்பதுவு
மருளிற் கலந்தார் களுமறிய வார்செஞ் சடையுங் கற்கலையுந்
தெருள்கண் மணியு நீற்றணியுந் திகழு முருவத் தொடும்போந்தான்.

தவத்தால் வருந்த றிருப்பணியாற் சால வருந்த லவைகளே
யவத்தாம் வினைகண் முழுதகற்றி யருள்சேர் கதிக்கு வித்தாதல்
பவத்தாற் சுழல்வோர் களுமறிந்து பணியே புரிய வைந்தொழிலு
நவத்தா ரணியா திகட்கியற்று நம்பன் கரத்தாற் செயமதித்தான்.

அவனு லவளா லதுதன்னு லனைத்தும் புரியுந் தனதியல்பை
புவிமே லெவர்க்கு மறிவிக்கும் பொருட்டும் புவியோர்க் கலதுபணி
தவவா யாமை யறிவிக்கும் பொருட்டுந் தச்சர் முதலோரைத்
துவர்வார் சடிலப் பெருமானுர் தொழிலுக் குரிய ராக்கினுர்.

எல்லாம் வல்ல தனதியல்பு மீண்டுங் கருமந் தமக்கினைய
வெல்லார் தமக்கும் பயனுதவு மியல்பும் விபூதி யெனும்பெயரைப்
புல்லா நின்ற திருநீற்றின் பொலிவும் விளங்கக் கூலிக்கு
நல்லா தரவி னீறளிப்ப நயந்தார் நாவற் பெருமானுர்.

தெளிக்குந் திருநீ றேதத்தஞ் செய்கைக் கேற்பச் செழும்பொன்னுய்க்
களிக்கும் வகைசெய் தறன்கடைகள் கதுவா தொழிக்கும் பெருஞ்சிறப்பால்
வெளிக்க ணுருசித் தரைப்போல விளையாட் டயரு மழுதேசற்
கொளிக்கும் வகையின் றியெவரு முறுதி யோடு பணிபுரிவார்.

நிலைபெ றப்பல துளைதுளைத் தாணிக ணறவிக்
கொலைமு கத்தவ வெனப்படை குடங்கையி னேச்சி
மலைபி ளந்துவன் பூணியிற் கொணர்குந ரொருபாற்
சிலைபி ளந்தரிந் திண்குறச் சேர்க்குந ரொருபால்.

பொருப்புக் கொப்புறப் புதுமணல் குவிக்குந ரொருபா
னெருப்புக் கொப்புறு முலத்திர ணீற்றின ரொருபா
லிருப்புக் கட்டிக ளெரியின்வைத் தடிக்குந ரொருபாற்
கருப்புக் கட்டிக ணிறைகளிற் கரைக்குந ரொருபால்.

ஏறு மிட்டிகை யேறுவே றியற்றின ரொருபாற்
கூறு மிட்டிகை குரைதழற் படுக்குந ரொருபா
லூறு கொட்டிநுண் மணல்விராய் நுணுக்குந ரொருபால்
வேறு பட்டவல் வினைகளு மொறுக்குந ரொருபால்.

இன்ன வாறுபல் வினைஞரு மீண்டின ரிலைழப்பக்
கன்னி மாமதில் வளர்தொறுங் கண்ணுதற் பரந்து
நன்னர் வேடமோ டடுத்தவெண் ணுவலி னிழலா
ரன்ன மாமதில் வரிசையே லடிமிதித் திவர்ந்து.

முற்று மோர்முறை சூழ்ந்துமும் மலப்பகை கடந்து
பற்றி லாருயிர்ப் போதந்தன் பாததா மரைக்கீ
ழுற்று வேறுறத் தோன்றுமு தொளித்தென நிலத்தி
னற்ற மேதுமி லாவகை யடைச்சினர் மாதோ.

மண்ணணிடை வரிசை யெல்லாம் வைகலு மழுத்திப் பின்னர்
விண்ணணிடை நிவந்து தோன்ற வியன்மதி லிழைத்துத் தம்பா

## திருநீற்றுத் திருமதிற்படலம்.

ணண்ணிய வரிட்ட நீங்கி நலத்தகு மிட்ட மெய்த
வண்ணினர் தம்மை நோக்கி யருளினா லருளிச் செய்வார்.

சித்தெல்லா முடைய நம்மாற் றிகழ்தரு பொருள்க ளெல்லாம்
வைத்தநா னிலத்தீ ரிந்தப் பரந்தமா மதிலி னாக
வைத்தன மாத லாலே வரங்களை வேட்டோ ரெல்லாம்
மெத்திய வன்பா லிந்த வியன்மதில் சூழ்க வென்றார்.

அன்றுதொட் டவனி யுள்ளோ ரருமகப் பேறு வேட்டும்
வென்றியை விழைந்து மாறா வெறுக்கையை விழைந்து மின்ப
நன்றியை விழைந்துஞ் சால நாட்டினை விழைந்து மிவ்வா
றொன்றிய மதில்சூழ் போந்திட் டுலப்பிலா வரங்கொள் கின்றார்.

மதிலினைச் சூழ்வா மென்று மனையகந் தன்னை நீங்கிற்
பொதிதரு பாவ மாதிப் புல்வினை யவனை நீங்கு
மெதிர்கொளின் வரங்க ளெல்லா மெதிர்கொளுங் கதவின் ஞானக்
கதவுறுஞ் சூழிற் சூழுங் கரிசறு முத்தி நான்கும்.

வலம்புரி கின்றோர் மெல்ல வைக்குமோ ரடிக்குக் கோடி
நலம்புரி பரிமே தங்க ணவையறப் புரிந்த பேறுஞ்
சிலம்புறழ் மதிலை யந்தோ சிறிதவ மதித்தா ரேனுங்
குலம்புரி சுற்றத் தோடுங் கொடுநர குழப்ப ரென்றும்.

தடநெடு மதிலை யோர்காற் றம்மியல் பானே சூழின்
மடவர்க ளேனும் பாவ வல்வினை முழுதுந் தீர்ந்து
கடவுள ராவ ரென்னிற் கரிசறு முனிவீ ரந்த
விடவிய மதிலின் மேன்மை யாவரே யியம்பு நீரார்.

தண்ணிய தாகி யெல்லார் தமக்குமின் புதவித் தானா
நண்ணிய வுணவ தாகு நறும்புன லுருவா நின்ற
வண்ணலே யானுந் தாழா தவமதித் தவரை முன்னர்ப்
பண்ணிய முறையுங் கேண்மி னெனப்பகர் கின்றான் சூதன்.



# அமுதலிங்கேசரருண்முறைசெய்தபடலம்

குவலயத்துச் சிவம்பெருக்குங் கோச்செங்க ணார்நிறுத்த
தவலில்பெருஞ் சிவத்துவிசர் சகலகலை வல்லவரா
யுவமையிலா கமக்கடலி னுளமுழுதுந் துளைந்தவராய்க்
கவளமத கரியுரியார் கழலருச்சித் துறுநாளில்.

மன்னவரும் பணிகேட்ப மறுபுலத்தி னுள்ளவரு
மென்னவினை புரிந்திடினு மின்றியமை யாததமை
நன்னயத்தி னுடன்படக்கு நலத்தகைமை யுடைமையினா
லன்னசிவத் துவிசரெலா மகமதித்துத் தருக்கினரால்.

ஒப்பற்ற ஞானதலத் தொழியாத வாழ்க்கையினு
மப்புற்ற திருமேனி யமுதலிங்கர் பூசையினுஞ்
செப்புற்ற பெருமையெலாந் திகழ்ந்தனவென் றறியாமே
தப்புற்ற வகமதிப்பாற் றவறுகளே புரிந்திட்டார்.

கணிகையர்த நலநுகர்ந்துங் கண்ணுதலார் பொருள்கவர்ந்தும்
பணிபுரிதல் பாணித்தும் பயிலொழுக்க நனிவிடுத்து
மணிதுளக்க வியமியம்பல் வகுத்தலிவை யல்லாது
பிணிதுளங்க வுபசாரம் பேணாது பிழைத்திட்டார்.

உள்ளந்தங் கியகரவே யுடையவரா யிவர்நடப்பக்
கள்ளந்தங் குறினவர்க்குக் கள்ளந்தங் குதற்குரிய
வெள்ளந்தங் கியமுடியார் விளங்குதிரு வுளங்கறுத்துப்
பள்ளந்தங் கியநதியிற் படுத்துமென நினைந்திருந்தார்.

பிழைதீர்க்கும் பிச்சாட நாயகர்க்குச் சிறப்பெய்தத்
தழைநாவ லுடையார்க்குத் தனையன்றொரு வினைவைத்து
விழைவோடு மனைவோரும் வெளிக்கொண்டு கொள்ளிடத்துக்
கழையாடாப் பெருநீத்தங் கடப்பதற்குக் கலத்திவர்ந்தார்.

முருகுவிரி வெண்ணாவன் மெய்ந்நிழலின் வீற்றிருந்தார்
திருவருளா லொருசூறை சென்றலைப்பக் கலங்கவிழ்ந்து
பெருகுபுன லிடைமடவார் பிள்ளையுட னனைவோரும்
பருவரலுற் றுயிர்மடிந்தார் பார்முழுதும் பனிப்பெய்த.

# அமுதலிங்கேசருண்முறைசெய்தபடலம்.

அருளினுக் குவமை யில்லா வமுதலிங் கேசர் தாமே
திருவுளங் கறுத்துச் சார்ந்த சிவத்துவி சமையுங் கொன்று
மொருவர்கண் மாட்டுங் குற்ற முனுற்றுறு திருத்த னன்றென்
றிருநிலத் தவர்க ளெல்லா மெண்ணின ருறுதி கொண்டார்.

வெறுப்பறு தாயின் மிக்க வெறுப்பறு தாயே யான
வெறுத்தமென் சாயை நாவல் விரிநிழ லிறைவர் தம்மால்
வெறுப்பன செய்தா ரெல்லாம் விளிந்தன ரென்று லந்தோ
வெறுப்பன யாவர் மாட்டும் விளைத்திடா திருத்த லேயாம்.

இரும்புன னதியிற் செல்லா தெஞ்சிய சிறுவன் றன்னைப்
பெரும்பெயர்ப் பொருளா யுள்ளார் பேரருட் கிலக்க மாக்கி
யரும்பொருட் கலைகள் வேதா கமங்களு மருளி மேன்மை
தரும்பணி விடையின் வைத்தார் சகமெலா மிறும்பூ தெய்த.

வெற்றிவேற் குமரப் புத்தேள் வெள்ளிமால் வரையி னின்றும்
பற்றிகல் கடந்தார் பூசை பயிற்றுதற் குரியா ரென்று
செற்றிய வளத்தின் மிக்க திருப்பிட வூரின் மேனாட்
குற்றமின் மறையோர் தம்மைக் கொணர்ந்துதா பித்திட் டாரால்.

அத்தகு மறையோர் தம்மு ளறிவினிற் பெரிய ராகிப்
பத்தியின் வழுவாச் சிந்தை பரித்தவர் சிலரைக் கூவி
யுத்தம பூசை யாதி யுஞற்றுதற் குரிய ராக
வைத்தன ரொருவெண் ணுவன் மணிநிழ லமர்ந்த வள்ளல்.

தொல்வினைத் தொடரா மேன்மைத் தூயவே தியர்க டாமுங்
கொல்வினைக் குரிய சூலங் குடங்கையிற் கொண்ட செம்ம
னல்வினைக் கருளு மாறு நல்லன வல்ல வான
புல்வினைக் கொறுக்கு மாறும் புந்தியிற் றேர்ந்து தேர்ந்து.

அச்சமு மன்புந் தாங்கி யண்ணலார் மகிழ்ச்சி கூர்ப்ப
வெச்சமில் லாத சைவம் வைதிக மிரண்டி னுனு
நிச்சலும் பூசை யாதி நின்மலப் பணிக ளெல்லா
மூச்சகம் வியக்கும் வண்ண முற்றுறப் புரியா நின்றார்.

உமையொரு பாகர் பூசை யுஞற்றுமந் தணரை யந்த
வமுதலிங் கேச ரென்றே யகமதித் திறைஞ்சி னேரு
மிமையவ ராதி யோரா விறைஞ்சிடப் படுவ ரென்றா
றமதருட் பெருமை யாரே சாற்றுதல் வல்ல ரீரார்.

பரிந்துபின் னிரக்கஞ் செய்த பரமனார் சரிதந் தன்னைத்
தெரிந்தவர் தெரித்தோ ரெல்லாந் தீவினை முழுது நீங்கி

விரிந்தபல் கதிக டம்முள் வேட்டநற் கதியுண் மேவிப்
புரிந்தபே ரின்ப வெள்ளப் புணரியுட் டிளைத்து வாழ்வார்.

பொய்யினை யறுக்கு ஞான பூமியில் வசிக்கும் பேறுங்
கொய்யலர் மலருந் தீர்த்த மொன்பதுங் குடையும் பேறுஞ்
செய்யரு ளமுத லிங்கர் தெரிசனப் பேறு மெய்தும்
பையவிப் புராணந் தன்னைப் படித்தவர் கேட்டோர்க் கெல்லாம்.

விழுமிய வமுத லிங்கர் வியத்தகு சரிதந் தன்னை
யெழுதினோ ரெழுது வித்தோ ரெழுதியீந் தவர்க ளெல்லாம்
வழுவறு மெழுத்தொவ் வொன்றுக் கொரோவொரு கற்ப மான்ற
செழுவிய சிவலோ கத்திற் சென்றுவாழ்ந் திருப்ப ரன்றே.

என்றுயர் சூத மேலோ னிலகிய ஞான பூமிக்
கொன்றிய சரித மெல்லா முரைத்தன னுரைத்த லோடு
நன்றியின் மலர்ந்த சிந்தை நைமிச முனிவ ரெல்லாம்
வென்றிகொள் பரமா னந்த வெள்ளத்துட் டிளைத்து வாழ்ந்தார்.

அருள்வளர் சம்பு மூலத் தமுதலிங் கேசர் வாழ்க
வருமகி லாண்ட வல்லி வாழ்கவே தாக மத்தின்
பொருணிலை வழாது வாழ்க புகழ்திரு வானைக் காவாந்
திருநகர் வாழ்க வாழ்க தேயங்க ளனைத்து மாதோ.



உ

# செய்யுள் அகரா

